# தமிழ்நாட்டு வள்ளல்கள்

(முதற் புத்தகம்)

ஆசிரியர்
திரு சு அ இராமசாமிப் புலவர்

திருநெல்வேலித் தென்னிந்திய
சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம், லிமிடெட்,
திருநெல்வேலி-6. சென்னை-1.
1960

# பதிப்புரை

நாட்டின் நல்வளத்தால் வள்ளல்களும், வள்ளல்களின் சீர்சிறப்பால் புலவர் பெருமக்களின் வாழ்க்கை யுயர்வும், அவர்தம் வாழ்க்கை யுயர்வால் கல்வி வளர்ச்சியும், கல்வி வளர்ச்சியால் இலக்கண இலக்கிய நூல் வளர்ச்சியும், நூல் வளர்ச்சியால் மாந்தரிடை நுண்மாண் நுழைபுலச் செல்வப் பெருக்கமும், செல்வப் பெருக்கால் நல்லொழுக்கமும், நல்லொழுக்கத்தால் நன்னெறிப் படர்தலும், நன்னெறிப் படர்தலால் செம்பொருட்டுணிவும், செம்பொருட்டுணிவால் அன்பர் பணி செய்தலும், அன்பர் பணியால் எவ்வகை இன்பமும் செவ்விதின் எய்தலும் எளிதென்ப.

எனவே 'வள்ளல்களின் வரலாறு' எல்லார் உள்ளங்களிலும் நன்கு பதிந்திருத்தல் வேண்டுமென்பது சொல்லாமலே அமையும். அம்முறையில் இந்நூலின்கண் 'சடையப்ப வள்ளல் முதலாக முறையூர் சண்முகஞ் செட்டியார்' ஈறுக வள்ளல்கள் பதினறு பேர்களின் அரிய வரலாறுகள் தொகுக்கப் பட்டுள்ளன. அவ்வள்ளல்களால் போற்றப்பட்டு அரிய பெரிய தமிழ் நூல்களை உலகுக்களித்து ஒப்பின்றியுயர்ந்த 'கம்பர், புகழேந்தியார், வில்லிபுத்தூரார், இரட்டையர், படிக்காசுப் புலவர், பொய்யாமொழியார்' முதலிய பல புலவர்களின் வரலாறுகளும் அவர்களால் யாத்தளிக்கப்பட்ட நூல்களும் தெளிவுற விளக்கப்பட்டுள்ளன.

இந்நூல் இவ்வரிசையில் முதற் புத்தகமாக வெளி வருகின்றது. ஏனை வள்ளல்களின் வரலாறுகளும் அடுத் தடுத்து வெளிவர இருக்கின்றன. கழகத்தார் விருப்பத்திற் கிணங்க இம் முறையில் அரிய உழைப்பெடுத்து யாத்தளித்த திரு. சு. அ. இராமசாமிப் புலவர் அவர்கட்குக் கழகத்தார் நன்றி உரித்தாகுக. தமிழ்ப் பெருமக்கள் இதனை வாங்கிக் கற்றுப் பயனெய்துவார்களாக.

சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தார்.

# முன்னுரை

வள்ளல்களாவார் எப்பயனையும் எதிர்நோக்காது பொருளினை வாரிவழங்குஞ் செல்வாகளாவா. நமது தமிழ் நாட்டிலே பண்டைக் காலந்தொட்டு எத்தனையோ வள்ளல்கள் வாழ்ந்திருக்கின்றனர். சங்க காலததில் வாழ்ந்திருந்த வள்ளல்களைப்பற்றிச் சங்க நூல்களால் நன்குணருகிறோம். சங்க காலவள்ளல்கள் முதலெழுவள்ளல்; இடையெழு வள்ளல், கடையெழு வள்ளல் என மூன்று வகையாகப் பகுக்கப்பட்டிருக்கினறனர். இந்த இருபதொரு வள்ளல்களையும் அல்லாமல் மற்றும் எத்தனையோ வள்ளல்கள இந் நாட்டில் இருந்தனர். அவர்களைப் பற்றிப் பழந்தமிழ் நூல்களின் வாயிலாக நன்கு உணர்ந்து கொள்ளலாம். முற்கால வள்ளல்களைப் போல் இக்காலத்திலும் வள்ளல்கள் பலர் நமது நாட்டில் அடிக்கடி தோன்றுகின்றனர். இவ்வள்ளல்கல் மற்றவர்கள் வியப்புறுமாறு அறச் செயல்களைப் புரிகின்றனர். பிற்காலத்தில இவர்களைப் பற்றி மற்றையோர் அறிந்து கொள்ளுவதறகு வாய்ப்பு ஏற்படுததுதல் வேண்டும். அதனோடு இக்காலத்தில் பொருளை மிகுதியாகப் பெற்றும் யாதும் அறச்செயலில் ஈடுபடாது பொருள் காக்கும் பூதமாக அமைந்து விளங்கும் செல்வாகட்கும் நல்லறிவுண்டாகி அவர்களும் அறச்செயலில் ஈடுபடுதல் வேண்டும் என்னும் நோக்கத்துடனேயே ‘தமிழநாட்டு வள்ளல்கள் வரிசை’ என்னும் இந்நூல் வரிசைகள் எழுதப் பெறுகினறன. இம் முதலாவது புத்தகததில் சடையப்ப வள்ளல் முதல் முறையூர் சண்முகஞ்செட்டியார் இறுதியாகப் பதினாறு வள்ளல்களின சுருக்கமான வரலாறுகள் அடங்கியுள்ளன. இக்காலத்திற் கேற்றவாறு இவ் வரிசைகளை எழுதச் செய்து வெளியிட முன வந்த திருநெல்வேலித் தென்னிந்திய சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழக ஆட்சிப்பொறுப்பாளர் திரு. வ. சுப்பைய பிள்ளை அவர்கட்குச் செந்தமிழ் உலகம் நன்றி செலுத்துங் கடப்பாடுடையது. இவ்வரிசையைத் தொடர்ந்து மேலுஞ் சில புத்தகங்கள் வெளிவரும்.

12—4—60<br>
கருப்பக்கிளர்<br>
தஞ்சை மாவட்டம்

சு. அ. இராமசாமிப் புலவர்

# உள்ளுறை

# தமிழ்நாட்டு வள்ளல்கள்

[முதற் புத்தகம்]

---

## க. சடையப்ப வள்ளல்

### தோற்றம்

இன்று கம்பராமாயணத்தை அறியாத தமிழ் மக்களைப் பார்ப்பது அருமை. கம்பர் இராமாயணத்தைப் பாடுவதற்குக் காரணமாக இருந்தவர் திருவெண்ணெய்நல்லூர்ச் சடையப்ப வள்ளல். சடையப்பர் திருவெண்ணெய் நல்லூரில் பிறந்தவர். குடும்பம் நல்ல செல்வநிலைமையிற் சிறந்து விளங்கியது. அச் செல்வத்தை விரயஞ் செய்வதில் மட்டும் சடையப்பர் கருத்தைச் செலுத்தவில்லை. தேடுவதிலுங் கருத்தை நன்குகச்செலுத்தினர். இவ்வுலகில் மக்கள் யாக்கையை எடுத்தோர் உண்டு உடுத்துச் சோம்பேறியாக நாள் கழித்தல் கூடாது. செல்வத்தை மிகமுயன்று தேடுதல் வேண்டும். தேடித்தொகுத்தபின் பணங்காக்கும் பூதமாக மாறிவிடுதல் கூடாது. அவ்வாறு ஒருவன் மாறிவிடுவானுயின் அவன் மக்கள் கூட்டத்தில் இருந்து மாக்கள் கூட்டத்திற்குத் தள்ளப்படுவான்.

### அறச் செயல்கள்

சடையப்பவள்ளல் பொருளைத் தொகுப்பதற்கு அறிந்திருந்தாற் போல அதனை நல்வழியிற் பயன்

படுத்தற்கும் அறிந்திருந்தார். வறியவர்களையும் உறவினர்களையும் நாள்தோறும் தமது இல்லத்திற்கு அழைத்து அறுசுவை உணவைஅன்புடன் படைத்தார். "உண்டிகொடுத்தோர் உயிர்கொடுத்தோரே" என்னும் புலவர் மொழி மெய்ம்மைநிறைந்தது. சடையப்பவள்ளலின்புகழ் யாண்டும் பரவியது. சடையப்ப வள்ளலின் இல்லம் எப்பொழுதும் பல அன்பர்களால் நிறைந்திருந்தது. உணவிடுதல்மட்டு மன்றிப் பொருள் விரும்பியவர்கட்கும் பொருள் கொடுத்துத் தக்கவாறு உதவி செய்தார்.

## கம்பரும் சடையப்பரும்

கம்பர் சோழவள நாட்டிலே திருவழுந்தூரிலே தோன்றினர். இளமைக்காலத்திலேயே தந்தையை இழந்தார். " தாயோ டறுசுவைபோம் தந்தையொடு கல்விபோம் " என்பது பெரியோர் வாக்கு. கம்பருக்கும் கல்வி இல்லாமற் போய்விடக்கூடிய நிலைமை ஏற்பட்டது. சடையப்ப வள்ளலின் புகழை யுணர்ந்த கம்பரின் தாய் சிறுவராக விளங்கிய கம்பரையும் அழைத்துக்கொண்டு சடையப்ப வள்ளலின் இல்லத்திற்குச் சென்று அவருடைய ஆதரவில் தங்கினள். இல்லத்திற்குத் தன்னல் இயன்ற பணிகளைச் செய்து கொண்டு காலங்கழித்தாள். கம்பருக்கோ வள்ளலின் பிள்ளைகளை யழைத்துக்கொண்டு பள்ளிக்குச்செல்லுதல், மீளுதல் முதலிய அலுவல்கள் ஏற்பட்டன. கமபர் சமயத்தை நழுவ விடவில்லை. பள்ளிக்கணக்காயரின் உள்ளம் மகிழுமாறு அவர் ஏவிய குற்றேவல்களைச் செய்து கொண்டு இடையிடையே சிறிது கல்வியுங் கற்ருர். அக்காலத்திய கணக்காயர்கள் பெரும்பாலும்

பெரும் புலவர்களாகவே விளங்கி யிருந்தனர். கம்பரு டைய ஆசிரியரும் இலக்கண இலக்கிய வல்லுநராய்ச் சிறந்து மிளிர்ந்தார். நாளடைவில் புலமைத்திறம் கம் பருக்கும் உண்டாயிற்று. செய்யுள் பாடக்கூடிய திற மடைந்துசிறந்து விளங்கினர். கல்வியிற்சிறந்தவராய்க் கம்பர் சிறப்படைந்தவுடன் சடையப்ப வள்ளலுக்கு நண்பனைப் போல் அமைந்து நின்று பலவழிகளினும் உதவிபுரிந்தார். நாளடைவில் கம்பர் சோழமன்னனுக் கும் நண்பரானர். சோழமன்னனே இராம காதையை இனிய செய்யுட்களினல் பாடவேண்டும் என்று கம்ப ருக்குத் தெரியப்படுத்தினன்.

## இராமாயணம்

கம்பர் ஒட்டக்கூத்தர் என்னும் இருபுலவர்களால் இராமகாதை பாடப்பெற்றது. கம்பர் தமக்குப் பற்றுக் கோடாக அமைந்து தம்மைஇவ்வுலகில் நல்லநிலைக்குக் கொண்டுவந்த சடையப்ப வள்ளலைமேன்மைப் படுத்து தற்குத் தக்க சமயத்தை எதிர் பார்த்துக் கொண்டே இருந்தவர். இப்பொழுது அவருக்குத் தக்கசமயம் வாய்த்து விட்டது. சடையப்ப வள்ளலின் தடையற்ற பேரறத்தைச் சமயம்பார்த்து இராம காதையில் புகுத்த லானர் வறுமைத்துன்பத்தால் வருந்திய புலவர்கட்கும் மக்களுக்கும் வெண்ணெய் அண்ணல் செய்த நன்மைகள் எண்ணிலவாகும்.

குரங்குப்படைகள் தென்தமிழ் நாட்டிற்கும் இலங் கைக்கும் இடையே அமைந்த பெருங்கடலில் அணை கட்டத் தொடங்கின. பெரியமலைகளைப் பெயர்த்துக் கடலில் வீசியெறிந்தன. குரங்குத்தச்சன் அவைகளைக் கையிலே பிடித்துத் தாங்கி அணையைக் கட்டலானன்.

குரங்குகளோ பல; வானரத்தச்சனோ ஒருவன். எண்ணற்ற குரங்குகள் வீசும் மலைகளை நளனென்னும் குரங்குத்தச்சன் ஒருவனே தன்னுடைய ஆற்றலால்தாங்கிப் பிடித்தான். இந்த இடத்தில் சடையப்பரையும் அவருடைய அறப்பெருமையையும் உலகிற்குத் தெரியப் படுத்தக் கம்பர் முடிவு செய்தார்.

> " மஞ்சினில் திகழ்தரு மலையை மாக்குரங் (கு)
> எஞ்சுறக் கடிதெடுத் தெறிய வேநளன்
> விஞ்சையில் தாங்கினன் சடையன் வெண்ணெயில்
> தஞ்சமென் றோர்களைத் தாங்கும் தன்மைபோல்"

இதனால் திருவெண்ணெய் நல்லூரில் சடையப்ப வள்ளல் என்று ஒருவர் இருந்தார் எனவும், அவர் 'அடைக்கலம்' என்று தம்மை யடைந்தவர்களை யெல்லாம் பாதுகாத்துப் புரந்தார் எனவும் உலகிற்குப் புலப்படலாயின. நளனது ஆற்றலைப் புலப்படுத்துதற்குக் கம்பருக்கு எத்தனையோ உவமைகள் அகப்படலாம். இந்த இடத்தில் சடையப்பரைப் பாராட்டத் தொடங்கியது நன்றி மறவாமையே யாகும், இவ்வாறே, பல இடங்களில் ;

> " விண்ணவர் போயபின்றை விரிந்தபூ மழையினாலே
> தண்ணெனுங் கானநீங்கித் தாங்கருந் தவத்தின்மிக்கோன்
> மண்ணவர் வறுமைநோய்க்கு மருந்தன சடையன் [வெண்ணெய்
> அண்ணல்தன் சொல்லேயன்ன படைக்கலம் [அருளினானே"

என்றும்

> " வாசங் கலந்த மறைநாள நூலின்
> வகையென்ப தென்னை மழையென்று
> ஆசங்கை கொண்ட கொடைமீளி அண்ணல்

சரராமன் வெண்ணெய் அணுகும்
தேசங் கலந்த மறைவாணர் செஞ்சொல்
அறிவாளர் என்றிம் முதலோர்
பாசங் கலந்த பசிபோ லகன்ற
பதகன் துரந்த உரகம்''

என்றும்,

"' வண்ண மாலை கைபரப்பி
உலகை வளைந்த இருளெல்லாம்
உண்ண எண்ணித் தண்மதியத்
துதயத் தெழுந்த நிலாக்கற்றை
விண்ணும் மண்ணும் திசையனைத்தும்
விழுங்கிக் கொண்ட விரிநன்னீர்ப்
பண்ணை வெண்ணெய்ச் சடையன்தன்
புகழ்போல் எங்கும் பரந்துளவால்.''

என்றும்,

" அரியணை அநுமன் தாங்க அங்கதன் உடைவாள் ஏந்தப்
பரதன்வெண் குடைக விக்க இருவரும் கவரி வீச
விரைசெறி குழலி யோங்க வெண்ணெயூர்ச் சடையன் [தங்கள்
மரபுளோர் கொடுக்க வாங்கி வசிட்டனே புனைந்தான் [மௌலி''

என்றும்,

இன்னும் இத்தகைய பாடல்கள் சிலவற்றாலும் புகழ்ந்து பாராட்டினர். கம்பர் தனிநூல் ஒன்றைச்சடையப்பர் மீது இயற்றி யிருப்பினும் அஃது இவ்வளவு பெரும்புகழைச் சடையப்பர்க்கு உண்டாக்கி யிருக்காது. கம்பர் வீட்டில் ஏதோ ஒரு புதுமைநிகழ்ந்ததாம். அதற்குப் பல செல்வர்களும் மன்னருஞ்சென்று குழுமினராம். இறுதியாகச் சென்ற சடையப்பவள்ளல் ஓர்

ஒதுக்கிடமான மூலையில் உட்கார்ந்தாராம். அவரைச் சரியான இடத்தில் கொண்டுபோய் வைக்கக் கம்பரால் இயலவில்லை. கம்பர்மனைவி கம்பரைப் பார்த்து, “ இவ்வளவுபேர் சிறப்பாகத் தங்கியிருக்கும் இடத்தில் அந்த வள்ளலுக்கு அந்த மூலைதானா கிடைத்தது. தக்க இடத்தில் அழைத்துக் கொண்டு போய் உட்கார வைக்கக் கூடாதா? ” என்று வருத்தத்துடன் கூறினாளாம். இதனைக் கேட்ட கமபர், “மாதே! கவலைப்படாதே. அவரை நான் வைக்கவேண்டிய இடதகில் வைக்கிறேன், ” என்று மறுமொழி கூறினாராம். அது முதல் சடையப்பவள்ளலைத் தாம் பாடும் பெருநூல்களில் அமைத்துச் சிறப்பிக்க வேண்டுமென்று திட்டமிட்டுக் கொண்டிருந்தாராம். முதலில் கமபர் தமது இராமாயணத்தில் இன்னும் அதிகமான இடங்களில் சடையப்ப வள்ளலைப் பாராட்டியிருந்தாரென்றும், பல அறிஞர்கள் விருப்பப்படி ஆயிரம் பாடல்கட்கு ஓரிடத்தில் மட்டும் வைத்துவிட்டு மற்றவைகளை நீக்கிவிட்டாரென்றும் கூறுகின்றனர்கள. சடையப்பர் கமபரைக் காப்பாற்றினர். கம்பர் சடையப்பரின்புகழ் இந்நிலவுலகம் உள்ளளவும் நின்று நிலைக்குமாறு செய்து விட்டார். இவ்வாறே வேறுபல புலவர்களும் தமக்குப் பற்றுக்கோடாக இருந்த வள்ளல்களைத் தமது நூல்களில் பாராட்டி அவர்கள் புகழையும் பேரையும் என்றும் நிலைபெறச் செய்துள்ளனர்.

## உ. சந்திரன் சுவர்க்கி

### தோற்றம்

சோழவள நாட்டிலே உறையூரை யடுத்து விளங்கிய மள்ளுவ நாட்டில் முரணூர் என்னும் சீரூர் முன்னாளில் பேரும் புகழும் பெற்றுப் பெரு நகராக விளங்கியது. அதனை முரணைநகர் என்றும் மொழிப. அவ்வூரில் புகழேந்திப்புலவர் காலத்தில் அஃதாவது ஏறக்குறைய எழுநூறு யாண்டுகட்குமுன் சந்திரன் சுவர்க்கி என்னும் பெயருடைய குறுநில மன்னன் அரசுபுரிந்திருந்தான். அவன் நன்கு கல்வி கற்றுச் சீரிய செந்தமிழ்ப் புலமையிற் சிறந்து விளங்கினன்.

### வாழ்க்கை

நூலாராய்ச்சியை நுண்மாண நுழைபுலமிக்கா ரோடு செய்தல், தன்மீது செய்யுள் பாடிவருவாரது கல்வித் திறத்தையும் செய்யுட்டிறத்தையும் ஆராய்ந்து நன்கொடை வழங்குதல், தன்னாட்சிக்கீழ் அமைந்து வாழ்வார்க்கு யாதொரு குறைவும் நேரிடாதவாறு ஆட்சிபுரிதல் முதலியன அவனுடைய வாழக்கைச் செயல்களாக அமைந்திருந்தன. அவன் வடமொழி வல்லுநர் சிலரை வைத்துக் கொண்டு வடமொழியில் இருந்த நளன் வரலாற்றைப்படித்து விரித்துரைக்கு மாறுகேட்டுமகிழ்ந்துகொண்டிருந்தான். நளன் வரலாற் றில் சந்திரன் சுவர்க்கிக்கு அளவுகடந்த பற்று உண்டா கியது. நளன் வரலாற்றைத் தமிழிற் செய்யுள் வடிவ மாக இயற்றச் செய்யவேண்டும் என்னும் எண்ணம்

அவனுக்குத் தோன்றி நாள் தோறும் வளர்ந்து கொண்டிருந்தது. அவ்வாறு பாடுதற்குத் தக்காரை அவன் எதிர்பார்த்துக் கொண்டிருந்தான். அவனுடைய அவையை அழகுபடுத்திக் கொண்டிருந்தவர்கள் பொதுவான புலவர்களாகையால் அவர்களைக் கொண்டு இயற்றச் செய்வது அவன் மனதிற்கு ஏற்றதாகத் தெரியவில்லை.

## புகழேந்திப்புலவர் வருகை

அக்காலத்தில் புகழேந்திப்புலவர் ஒட்டக் கூத்தரோடு மாறுபாடு கொண்டவராய் வேறு இடஞ் செல்வதற்கு எண்ணமிட்டுக் கொண்டிருந்தார். சந்திரன் சுவர்க்கியின் தமிழறிவு, புலவரைப் போற்றுந்திறன், கொடைமாட்சி முதலியன புகழேந்திப் புலவருக்குத் தெரிந்தன. சந்திரன் சுவர்க்கியிடமே சென்று தங்கலாம் என்று முடிவுசெய்தார். உடனே புறப்பட்டுப் போய்ச் சந்திரன் சுவர்க்கியைக் கண்டு தம்மை அறிமுகப் படுத்திக் கொண்டார். புகழேந்திப் புலவரைப்பற்றி முன்னரே சிறிது அறிந்திருந்த சந்திரன் சுவர்க்கி புகழேந்திப்புலவரின் வருகைக்குப் பெரிதும் மகிழ்ந்தான். அற்றைநாள்முதல் சந்திரன் சுவர்க்கி புகழேந்திப் புலவரிடத்தில் மனங்கலந்து பழகிவந்தான். புலவர்க்கு வேண்டிய உதவிகளையெல்லாம் கண்ணுங்கருத்துமாக இருந்து செய்தான். புலவர் தமிழ்ச்சுவையைச் சந்திரன் சுவர்க்கிக்கு நன்குவழங்கிக் கொண்டிருந்தார். புகழேந்திப் புலவரின்புலமைத்திறம் நாளடைவில் சந்திரன் சுவர்க்கிக்கு விளங்கியது. தன்னுடைய விருப்பத்தை நிறைவேற்றுதற்குப் புகழேந்தியார் தகுதிவாய்ந்தவர் என்று முடிவுசெய்தான்.

## நளன் வரலாறு பாடச்செய்தல்

ஒருநாள் சந்திரன் சுவர்க்கி புகழேந்திப் புலவரைப் பார்த்து, "நள மன்னனுடைய காதை ஊழ்த் திறத்தை நான்கு விளக்குவதாகவும் சனித் தொடர்ச்சியைப் போக்குவதற்கு ஏற்றதாகவும் அமைந்திருக்கிறது. ஆயினும் நளன் வரலாறு தமிழ் மொழியில் இதுவரைஇயற்றப்படாமல் இருக்கிறது; தாங்கள் அதனை இனிய தமிழ்ப்பாக்களாகச் செய்தருளுங்கள்; அவ்வாறு செய்வீர்களாயின், தமிழ்மக்கள் வடமொழி வல்லாரைத் தேடிப் பிடித்து நளன் கதையைக் கேட்க வேண்டிய தொல்லை யேற்படாது; தங்களுடைய பெயரும் உலகிலே என்றும் நிலைபெற்று விளங்கும்" என்று கூறினன். புகழேந்திப்புலவர் அவ்வாறே செய்வதாக உடன்பட்டார். வடமொழியில் இருந்த நளன் கதையைத தமிழில் மொழிபெயர்த்துக் கொண்டு பாடத் தொடங்கினர். எவ்வகைப் பாவில் பாடலாம் என்று எண்ண மிட்டார். வெண்பாவில் பாடுவதென்று முடிவு செய்தார். நன்னு ளொன்றில் நளன் கதையைப் பாடத் தொடங்கி நானூற்று இருபத்தைந்து பாடல்களால் வெண்பாவில் பாடி முடித்தார். வெண்பாக்கள் மிக இனிமையாக அமைந்தன. தமக்குப் பேருதவி செய்து பற்றுக் கோடாக அமைந்துள்ள சந்திரன் சுவர்க்கியின் பெயரையும் இவ்வுலகத்தில் என்றென்றும் நிலைபெறச் செய்ய வேண்டும் என்னும் எண்ணத்துடனும் நன்றிபாராட்டுதற்காகவும் சந்திரன் சுவர்க்கியின் பெயரையும் நூலில் அமைக்கலானர் நளனுடைய மாவிந்த நகரச் சிறப்பைக் கூறத்தொடங்கியபோது,

" மாமனுநூல் வாழ வருசந் திரன்சுவர்க்கி
தாமரையாள் வைகுந் தடந்தோளான் — காமருபூந்
தாரான் முரணைநகர் தானென்று சாற்றலாம்
பாராளும் வேந்தன் பதி "

என்று முரணை நகரைச் சிறப்புச் செய்து பாடினர். தமயந்தியின் சுயம்வரத் திருமணத்திற்கு அரசர்கள் திரண்டு கூடியதைப் பாடத் தொடங்கிய போது.

" மாமுத்த வெண்குடையான் மால்களிற்றான் வண்டிரைக்கும்
தாமத் தரிச்சந் திரன்சுவர்க்கி — நாமத்தார்
பாவேய்ந்த செந்தமிழாம் என்னப் பரந்ததே
கோவேந்தர் செல்வக் குழாம் "

என்று பாராட்டினர். நளன் தமயந்தியைக் காட்டில் காரிருளில் விட்டுப்பிரிந்ததை விளம்பத் தொடங்கிய போது,

" தாருவெனப் பார்மேல் தருசந் திரன்சுவர்க்கி
மேருவரைத் தோளான் விரவார்போல் — கூரிருளில்
செங்கா னகஞ்சிதையத் தேவியைவிட் டேகினான்
வெங்கா னகந்தனிலே வேந்து. "

என்று பாடிக் கொடையைச் சிறப்பித்ததன்றிப் பகைவர் சிறுமையுறுந் தன்மையையுங் குறிப்பிட்டார். வேடன் தமயந்தியைப் பாம்பின் வாயில் இருந்துமீட்ட செய்தியைக் கூறத் தொடங்கிய போதும் கொடைத் தன்மையைப் பாராட்டி,

" சங்க நிதிபோல் தருசந் திரன்சுவர்க்கி
வெங்கலிவாய் நின்றுலகம் மீட்டாற்போல்— [மங்கையை வெம்
பாம்பின்வாய் நின்று பறித்தான் பகைகடிந்த
காம்பின்வாய் வில்வேடன் கண்டு."

என்று பாடினுர். நளனிடம் இருந்து கலி நீங்கியதைப் பாடத் தொடங்கியபோது, சந்திரன் சுவர்க்கியால் ஆதரிக்கப்படும் புலவர்களிடமிருந்து பசித்துன்பம் நீங்கியதைப் போல், என்று உவமை காட்டி

" வண்டார் வளவயல்சூழ் மள்ளுவநாட் டெங்கோமான்
தண்டார் புனைசந் திரன்சுவர்க்கி — கொண்டாடும்
பாவலன்பால் நின்ற பசிபோல நீங்கிற்றே
காவலன் பால் நின்ற கலி"

என்று பாடினுர். இவ்வாறு பாடியபடியினுல்தான் செந்தமிழ் வள்ளல் சந்திரன்சுவர்க்கியின் பெயர் இன்றளவும் தமிழகத்தில் இருந்து மறையாமல் நிலைபெற்றிருக்கிறது.

## அரங்கேற்றம்

நளனுடைய வரலாறு இனிய வெண்பாவினுல் பாடி முடிக்கப்பட்ட செய்தியைப் புகழேந்திப் புலவர் சந்திரன் சுவர்க்கியிடந் தெரியப்படுத்தினுர். சந்திரன் சுவர்க்கி நன்னுள் ஒன்றில் அந்நூலை அரங்கேற்றஞ் செய்தற்கு ஏற்பாடு செய்தான். தனக்கு அறிமுகமான புலவர்கட்கும் செல்வர்கட்கும் மன்னர்கட்கும் அழைப்புக்கள் அனுப்பினுன். அரங்கேற்றம் மிகச் சிறப்பாக நடைப்பெற்றது. நளவெண்பாவைக் கேட்டவர்கள் "மிக இனிமையாக இருக்கின்றது, மிக இனிமையாக இருக்கின்றது" என்று சொல்லிப்பாராட்டிப் புகழேந்தியார் புகழை மிகுதியாக ஏந்தும் வண்ணஞ் செய்தனர். சந்திரன்சுவர்க்கி பெருங் களிப்படைந்து புகழேந்தியார்க்குப் பலவகையான சிறப்புக்களுஞ் செய்து நன்கொடை வழங்கினுன். அதுமுதல் அவனுடைய புகழ் யாண்டும் மிகுதியாகப் பரவிப் பெருஞ்சிறப்படைந்தது.

அரங்கேற்றத்திற்கு வந்திருந்த புலவர்களில் ஒருவர் நளவெண்பாவின் இனிமையை மனமாரப் பாராட்டி,

" பாரார் நிடத பதிநளன்சீர் வெண்பாவில்
பேரார் புகழேந்தி பேசினன் — தாரார்
செழியனையும் சென்னியையும் சேரத் திறைகொள்
மொழியின் சுவையே முதிர்ந்து''

என்று சிறப்புப் பாயிரம் பாடினார். இச்சிறப்புப் பாயிரமும் நூலோடு அமைந்து விளங்குகின்றது.

## வள்ளற்றன்மையின் மாண்பு

சந்திரன் சுவர்க்கி பொருட் பற்றுடையவனாய்ப் பொருளைச் செலவழியாது தானே உண்டுடுத்துக் களித்து இவறன்மை மிக்கானாய் இருந்திருப்பின் அவன் புகழ் இவ்வாறு உலகில் நீண்டு நிற்குமோ? அவனுடைய ஊனுடல் ஒழிந்ததோடு ஒழிந்து போயிருக்குமன்றோ? ஆகவே மக்கள் யாக்கையைப்பெற்றோர் அழியா யாக்கையாகிய புகழுடலைப் பெறுதற்கு வள்ளற் றன்மையை மேற்கொள்ள வேண்டியது எவ்வளவு இன்றியமையாதது என்பதை எண்ணிப் பாருங்கள்.

# ௩. வரபதியாட் கொண்டான்

## தோற்றம்

திருமுனைப்பாடி நாட்டிலே சனியூர் என்னும் ஊரிலே ஏறக்குறைய ஐந்நூறு யாண்டுகட்கு முன்னர் வரபதியாட் கொண்டான் என்னும் சிற்றரசன் தோன்றினான். இவனுடைய பெயர் வரபதியாட் கொண்டநாயன் எனவும் வழங்கும். இவனுடைய முன்னோர்கள் கொங்கு நாட்டில் இருந்து வந்ததாலோ அன்றி இந்நாடு முன்னர்க் கொங்கு நாட்டோடு சேர்ந்திருந்ததாலோ இவனைக்கொங்கர்கோன் எனவுங் கூறுவர்.

## வாழ்க்கை

வரபதியாட்கொண்டான் இளமைப் பருவத்திலேயே நன்கு கல்வியைக்கற்றான்.புலமைத்திறம்இவனுக்கு நன்கு அமைந்தது. பூவேந்தனாகத் திகழ்ந்ததோடுக்பாவேந்தனாகவும் விளங்கினான். தன்னுடையஅஞ்சாமையாலும் ஆண்மையாலும் பகைவர்களை வென்று வக்கபாகை என்னும் நகரத்திலே அமர்ந்து செங்கோல் செலுத்தினான். இவனுடைய வக்கபாகை நகரஞ் செல்வச் சிறப்பால் தேவர் உலகெனச் சிறந்து திகழ்ந்தது. ஆட்கொண்டான் அறநெறி தவறாமல் ஆட்சியை மாட்சியோடு புரிந்திருந்தான்.

## புலவரைப் புரத்தல்

" தமிழ்வேந்தனாகிய ஆட்கொண்டான் கல்வியறிவிலுஞ் சிறந்தவன். நல்லியல்புகளும் நன்கு அமையப்

பெற்றவன்" என்னுஞ் செய்தி எண்டிசையும் மண்டியது. மலரை நாடிப்பறந்து செல்லும் வண்டுக் கூட்டங்களைப் போலப் புலவர் கூட்டம் ஆட்கொண்டானைச் சுற்றிச் சூழ்ந்தது. அவர்களின் தகுதியறிந்து பொருள்களை வாரிவாரி வள்ளலாக வழங்கினான். எப்பொழுதும் பலபுலவர்கள் ஆட்கொண்டானோடு தங்கியிருந்தனர். அப்புலவர்கட்குத் தலைமைப் புலவர் வில்லி புத்தூரார்.

## தமிழ்ச் சங்கம்

ஈண்டியபுகழ்சேர் பாண்டியமன்னர் சங்கங்கண்டு தமிழ் வளர்த்ததுபோல வரபதியாட் கொண்டானுஞ் சங்கம் ஒன்று நிறுவினான். தமிழ்நூல்கள் பலவற்றை ஆராய்ந்தான்.

## இரட்டையர் புகழ்ச்சி

இரட்டைப் புலவர்கள் ஆட்கொண்டானுடைய சீரையுஞ் சிறப்பையும் நன்குணர்ந்துநேரில்கண்டனர்

" சாணர்க்கு முன்னிற்கும் ஆட்கொண்ட நாயன் தமிழ்க்
(கொங்கர்கோன்

" பாணுற்ற வரிவண்டு சேர்வக்கை நகராதி பக்கத்திலே
ஊணுக்கு வாரா திருப்பாய் விருப்பாகி உயர்வானிலே
வீணுக்கு நின்றாக மெலிகின்ற திவ்வாறு வெண்திங்களே."

என்று புகழ்ந்து பாடினர்."

## பாரதம்

ஆட்கொண்டான் காலத்தில் பாரதக்கதை இனிய விருத்தப்பாக்களால் அமைந்ததாக இல்லை. பெருந் தேவனார் பாரதவெண்பா இருந்த தாயினும் அது பரவி வழங்காமல் அருகிவழங்கியது. வில்லிபுத்தூரார் வட மொழி தென்மொழி வல்லுநராய்ப் புலவரேறாய் விளங்

கியிருந்தார். வரபதியாட்கொண்டான் வில்லிபுத்தூரா ரைப் பார்த்து, "நம்முடைய சீர்த்தி நம்மோடுமறைந்து போகுமாறு விட்டுவிடுதல் கூடாது. உலகம் உள்ள அளவும் நமது பெயரும் நிலத்திலே நிலைத்து நிற்கு மாறு பாரதத்தை இனிய தமிழ்ப்பாடல்களாகப் பாடியரு ளுங்கள்" என்று வேண்டிக்கொண்டான். வரபதியாட் கொண்டானுடைய வேண்டுகோள் வில்லிபுத்தூரா ருக்கு மிகுந்த மகிழ்ச்சியை அளித்து உள்ளக்கிளர்ச் சியை விளைத்தது. அவர் விரைந்து பாரதத்தைப் பாடத்தொடங்கினர். தம்மைப்பலவாற்ருனும் போற்றிப் புரக்கும் வரபதியாட் கொண்டானுடைய சீர்த்தியையும் இடையிடையே அமைக்கத் தொடங்கினர்.

பாண்டவர்களின் படை வீரர்கள் வெற்றிக் களிப் புடன் தமது பாசறைகட்குத் திரும்புஞ் செய்தி யைக்கூறும்போது, அப்போர் வீரர்களின் மனமகிழ்ச் சிக்கு வரபதியாட்கொண்டானிடம் நன்கொடை பெற்றுத் தமது இல்லங்கட்கு மகிழ்ச்சியோடு செல்லும் புலவர்களின் உள்ளக்களிப்பை ஒப்புக்கூறி;

" நாகையாப் புகழான் பெண்ணை நதிவளஞ் சுரக்கு நாடன்
வாகையாற் பொலிதிண் டோளான் மாகதக் கொங்கர் [கோமான்
பாகையாட் கொண்டான் செங்கைப் பரிசுபெற்ற வர்நெஞ் [சென்ன
ஓகையால் செருக்கி மீண்டார் உதிட்டிரன் சேனை [யுள்ளார்

என்று பாடினர். அருச்சுனன் துரியோதனனுடைய முடியைக் கணையால் கீழேதள்ளி இழிவுபடுத்திய செய்தியைக் கூறத்தொடங்கியபோது,

"கொடிமதிற் பாகை வேந்தன்
கொங்கர் கோன் புரவிக் காலால்
வடதிசை அரசர் தங்கள்
மாமணி மகுடம் போல
அடலுடை விசயன் ஒற்றை
அம்பினல் மீண்டுஞ் சென்று
படவர உயர்த்த கோவைப்
பண்ணினுன் மகுட பங்கம்."

என்றுரைத்து வரபதியாட் கொண்டானுடைய வெற்றிச் சிறப்பை விளக்கினர்.

கன்னன் கொடைச் சிறப்பைக் கூறத்தொடங்கிய போது வரபதியாட் கொண்டானுடைய கொடைச் சிறப்பைப் போன்றதென்று,

" கோவல்சூழ் பெண்ணை நாடன்
கொங்கர்கோன் பாகை வேந்தன்
பாவலர் மானங் காத்தான்
பங்கயச் செங்கை யென்ன
மேவலர் எமர்என் ருமல்
வெங்களந் தன்னில் நின்ற
காவலன் கன்னன் கையும்
பொழிந்தது கனக மாரி "

என்று பாடினர். மேலும் மற்ருெரு செய்யுளிலே வரபதியாட் கொண்டானுடைய கொடைச் சிறப்பையும் வீரத்தையும்;

" சொன்மழை பொழிந்து நாள்தொறுந் தனது
தோள்வலி துதிக்கும்நா வலர்க்குப்
பொன்மழை பொழியுங் கொங்கர்பூ பதிதன்
பொற்பதம் பொருந்தலர் போலக்

கன்மழை பொழியுங் காளமா முகிலும்
　　கடவுளர்த் துரந்தவன் கரத்தில்
வின்மழை பொழியக் கற்களுந் துகளாய்
　　மேனியும் வெளிறிமீண் டனவே.''

என்று பாராட்டிப் பாடினர்.

வரபதியாட் கொண்டான் கல்வியிற சிறந்து திகழ்ந்தாறுதலின் தமிழாராய்ச்சி, நேரிய முறை அரசாட்சி, புலவர்களைப் புரத்தல், வறுமையால் வாடி வருந்துவாருடைய அருந்துயர் களைதல் முதலிய வைகளைத் தனக்குரிய கடனாகக் கொண்டான். இவனு டைய குலச்சிறப்பு, கொடைச்சிறப்பு, வீரச்சிறப்பு முதலியவைகளை வில்லிபாரதச் சிறப்புப் பாயிரத்தில் வில்லிபுத்தூராருடைய மகனுராகிய வரந்தருவார் அழ காகப் பாடியுள்ளார்.

'' எங்கும்இவன் இசைபரப்பி வருநாளில்
　　யாம்உரைத்த இந்த நாட்டில்
கொங்கர்குல வரபதியாட் கொண்டான்என்
　　றொருவண்மைக் குரிசில் தோன்றி
வெங்கலியின் மூழ்காமல் கருநடப்பேர்
　　வெள்ளத்து விழாமல் நான்காம்
சங்கமென முச்சங்கத் தண்தமிழ்நூல்
　　கலங்காமல் தலைகண் டானே.''
(அ—ரை.) குரிசில்—சிறந்தவன். கலி-வறுமை.　　　(௩)

'' மற்றவன்இப் புவியாளும் வளவனுக்கு
　　முடிகவித்து வழுதித் தெவ்வைச்
செற்றவனுக் கவனியெல்லாம் செங்கோன்மை
　　நிலையிட்டுச் செல்வம் எல்லாம்
கற்றவருக் கிருகையுடைக் கற்பகம்போல்

இனிதளித்துக் கமல மாதும்
கொற்றவையும் மனங்களிப்பத் தன்னுமம்
மேருவினுங் கோட்டி னனே.''

(அ—ரை) வளவன்—சோழன். வழுதி—பாண்டியன். தெவ்வை—பகையை. செற்று—வென்று. அவனி—உலகம். இருகையுடைக்கற்பகம்: இல்பொருள் உவமை. கமலமாது—திருமகள். கொற்றவை-வெற்றித்திருமடந்தை. கோட்டினன்—எழுதினன்,

(உ)

'' தென்னாட்டில் வடநாட்டில் குடநாட்டில்
குணநாட்டில் தெவ்வ ரோடக்
கன்னாட்டி அமர்பொருது கங்கைநீர்
ஊட்டுவித்துக் கண்டன் வேங்கை
எந்நாட்டும் எழுதியவன் திருமரபோர்
பெற்றபுகழ் யாவர் பெற்றார்,
அந்நாட்டுக் கொற்றமெல்லாம் அக்குரிசில்
புகழொடவ தரித்த தன்றே.''

(அ—ரை) குடநாடு—மேலைநாடு. குணநாடு—கீழைநாடு. தெவ்வர் —பகைவர். கல்நாட்டி—வீரக்கல் நிலைநிறுத்தி. அமர் பொருது—போர்செய்து. கண்டன் வேங்கை எந்நாட்டும் எழுதி—சோழனுடைய புலிக் கொடியை எல்லா நாட்டினும் வரைந்து. கொற்றம்—வெற்றி.

(௩)

'' ஆற்றியமெய்ச் செல்வத்தால் அளகையை வென்
றிருங்கவினால் அமரர் ஊரை
மாற்றியபொற் றடமதில்சூழ் வக்கபா
கையின் அறத்தின் வடிவம் போலத்
தோற்றியஅக் கொங்கர்பிரான் சூழ்தமிழான்
ஆட்கொண்டான் சுற்றத் தோடு
போற்றியஇப் புவிமுழுதும் தன்திருப்பேர்
மொழி கொண்டே புரந்தான் அம்மா.''

(அ—ரை) ஆற்றிய—அமைந்த. மெய்ச்செல்வம்—பெருஞ் செல்வம். இருங்கவின்—பேரழகு. அமரர்ஊர்—விண்ணுலகம். சூழ்தமிழான்—தமிழறிஞர்களால் சூழப் பெற்றவன். புரந் தான்—காப்பாற்றினன்.

(ச)

" பிறந்துய்யக் கொண்டவன்இப் பேருலகம்
பெருவாழ்வு கூரு நாளில்
நிறைந்தபுகழ்ச் சனிநகர்வாழ் வில்லிபுத்தூ
ரனைநோக்கி நீயும் நானும்
பிறந்ததிசைக் கிசைநிற்பப் பாரதமாம்
பெருங்கதையைப் பெரியோர் தங்கள்
சிறந்தசெவிக் கமுதமெனத் தமிழ்மொழியின்
விருத்தத்தால் செய்க என்றான்."

(அ—ரை) உய்யக் கொண்டவன்—வரபதியாட் கொண்டான். இசை—புகழ்.

" இருக்காதி மறைமொழிந்தோன் இயம்பியஇப்
பெருங்கதையை யாருங் கேட்பச்
சுருக்காகப் புராணமுறை சொல்லுகவென்
றவில்அவனும் சொல்லல் உற்றான்
பெருக்காளர் முதலாய பெருங்குலத் தோர்
இக்கதையின் பெற்றி கேட்டார்
செருக்காக அவன்மைந்தன் வரந்தருவான்
இப்பதிகம் செப்பி னனே."

(அ—ரை) இருக்காதி மறைமொழிந்தோன் — வேதவியாசன். சுருக்காக-சுருக்கமாக. பெருக்காளர்—செல்வப பெருக்குடை யோர். பெற்றி—சிறப்பு. செருக்கு—களிப்பு.

(ரு)

# ௬. கறுப்ப முதலியார்

## தோற்றம்

தொண்டை மண்டலத்திலே காஞ்சிபுரத்திற்கு அணித்தாயுள்ள மாவண்டூரிலே கறுப்ப முதலியார் வேளாளர் குலத்திலே பிறந்தார். இவருடைய தந்தையார் பெயர் கத்தூரி முதலியார். கத்தூரி முதலியாருக்கு வேறிரண்டு புதல்வர்களும் இருந்தனர். அவர்களுடைய பெயர் சங்கர முதலியார். சோமநாத முதலியார் என்பர். கறுப்ப முதலியார் வாழ்ந்திருந்த காலம் படிக்காசுப் புலவருடைய காலமாகும்.

## வாழ்க்கை

கறுப்ப முதலியார் கல்வியை நன்கு கற்றுச் சிறந்த அறிவாளியானார். 'உயிர்த்தொழிலெல்லாம் பயிர்த் தொழில் தன்னுல்' என்பதை உளங்கொண்டு ஏர் பலவைத்துச் சீர்பெறப் பயிர்த்தொழிலை நடத்தினர். அதனுற் செல்வ வளம் நன்கு சிறந்தோங்கப்பெற்றார். நிலவளங்களோடு பலவளங்களும் இவர்பால் பெருகி நின்றன. "எல்லார்க்கும் நன்றும் பணிதல் அவருள்ளுஞ், செல்வர்க்கே செல்வம் தகைத்து" என்பது திருவள்ளுவர் பொன்மொழி. இந் நன்மொழிக்கேற்ப முதலியார் பணிவையும் இன்சொல்லையும் இரக்கத்தையும் தமக்கு உரிமையாகப் பெற்றிருந்தார்.

## வள்ளல்

சடையப்பபிள்ளையின் குணநலன்களையும் இராமாயணம்என்னும் அரும்பெருநூலைக் கம்பரைக் கொண்டு

பாடச்செய்து என்றும் பொன்றுப் புகழை அவர் பெற்ற தையும் எண்ணி எண்ணி இவர் உளமுருகினர். கற்றரையாதரித்துப் போற்றும் வள்ளல் தன்மையைத் தாமும் மேற்கொண்டு விளங்கினர். நாளடைவில் இவருடைய புகழ் நாடெங்கும் பரவியது. இவருடைய வள்ளல்தன்மையை இனிதுணர்ந்த அறிஞர்கள் பலர் இவரையடைந்து பாடிப்புகழ்ந்து பரிசில் பெற்றுச் சென்றனர்.

## தொண்டைமண்டல சதகம்

தம் நாட்டின் பெருமையை நன்கு விளக்கும் நூல் ஒன்றைத் தக்க ஓர் அறிஞரைக்கொண்டு இயற்று விக்க வேண்டுமென்று எண்ணமிட்டுக்கொண்டிருந்தார். படிக்காசுப் புலவருடைய விழுமிய பெருமை கறுப்ப முதலியாருக்குத் தெரிந்தது. படிக்காசுப் புலவரைக் கொண்டே நூல் செய்விக்க வேண்டுமென்று முடிவுசெய்தார். அவரைக் கண்டபொழுது "தொண்டை நாட்டிற் சிறந்து விளங்கிய அரசர்கள், வள்ளல்கள், செல்வர்கள், சிவனடியார்கள், அறிஞர்கள் முதலியவர் களையும் சிறப்பமைந்த செய்திகளையும் அமைத்து நூல் ஒன்று செய்யவேண்டு" மென்று கேட்டுக்கொண்டார். கறுப்ப முதலியாருடைய வேண்டுகோளுக்குப் படிக் காசுப்புலவர் இணங்கினர். தொண்டைமண்டலத்தின் சிறப்புக்களையெல்லாம் தொகுத்தமைத்துச் சுருங்கச் சொல்லல் விளங்க வைத்தல் முதலிய நூல் நயங்க ளெல்லாம் அமைய நூறு பாக்களில் தொண்டை மண்டல சதகம் என்னும் நூலைச் செய்து முடித்தார்.

## அரங்கேற்றம்

நூல்செய்யப்பட்டால் பலரையும் ஒன்று சேர்த்துப் படித்துப் பொருளுரைப்பது அரங்கேற்றம் என்று சொல்லப்படும். நூல்கள் அரங்கேற்றஞ் செய்யப் பட்டால்தான் எங்கும் பரவிச் சிறப்புப் பெறும். கறுப்ப முதலியார் தம்மால் செய்விக்கப் பெற்ற தொண்டை மண்டல சதகத்தை அரங்கேற்றஞ் செய்ய எண்ணினர். ஊரிலுள்ளார் அனைவரையும் ஒன்று சேர்த்துப்பேரவை கூட்டினர். படிக்காசுப்புலவர் தாம்பாடிய நூலைப் படித்துப்பொருள் உரைத்தார். தொண்டைமண்டலத்தின் பெருமைகளெல்லாம்அந்நூலால் நன்கு வெளியாயின. கேட்டவர்கள் நமது நாட்டின் பெருமை எக்காலத்தினும் அழியாவண்ணம் செப்புப்பட்டயம் பெற்று விட்டது என்று பெருங்களிப் படைந்தார்கள். கறுப்ப முதலியாருக்கு ஏற்பட்ட மகிழ்ச்சிக்கோர் அளவில்லை.

## சிவிகை சுமத்தல்

படிக்காசுப் புலவருக்குப் பெருந்தொகை வழங்கிப் பொன்மாரி பெய்தார். ஆடைகளையும் அணிகலன்களையும் மிகுதியாக வழங்கினர். புலவரைப் பல்லக்கிலேற்றி நகர்வலம் வரச்செய்தார். நகர்வலம் வந்து கொண்டிருக்கும்போது ஓரிடத்தில் கறுப்ப முதலியார் தாமுந் தம்தம்பியர்களுமாகச் சிறிது தொலை சிவிகையைச் சுமந்து கொண்டு சென்றார். இச்செயல் படிக்காசுப் புலவருடைய உள்ளத்தை உருக்கியது. அவர் அப்போது,

**"காவைவென் றிடுகத் தூரி கண்மணி கறுப்பன் என்னும் மாவையம் பதியான் தொண்டை மண்டல சதகம் கேட்டு**

நாவலர் புகழ்ந்து மெச்ச நவநிதி பொழிந்து நன்றாய்
பூவுல கெங்கும் போற்றப் புகழ்நிலை நிறுத்தி னானே.

(௧)

கன்மாரி காத்தமுகில் கத்தூரி அருண்மாவைக்
கறுப்பன் என்னும்
மின்மாரி தனதுகிளை அத்தனையும் சபைகூட்டி
வியந்து கேட்டுச்,
சொன்மாரி பொழிந்திடவே சிரகரகம் பிதஞ்செய்து
சுருளுந் தந்து
பொன்மாரி பொழிந்துதந்தப் பல்லக்குச் சுமந்துமிகு
புகழ்பெற் றானே.

(௨)

எல்லப்பன் அம்மையப்பன் தருதிருவேங் கடநாதன்
எழிற்சீ ராமன்,
வல்லக்கொண் டையன்மாதை வேங்கடே சுரன்போல
வரிசைச் செய்தே
செல்வத்தம் பியருடனே கத்தூரி மகன்கறுப்பன்
தெருவீ திக்கே
பல்லக்குத் தான்சுமந்தான் அதுநமக்கோர் ஆயிரம்பொன்
பரிசு தானே.

(௩)

என்று புகழ்ந்து பாடியதுடன், அரங்கேற்றச் செய்தியையும்,

" இந்தச் சதகம் அரங்கேற்றுகைக்கிசைந் தேன்எவரும்
வந்திக்கும் மாவைக்கத் தூரிக் கறுப்பன் வளமைபெறு
புந்திக் குலாவுநள் ளாறர்தம் பாதம் பொருந்துமன்பன்
வந்துற் பவிக்க மகிழ்வா னதுந்தொண்டை
மண்டலமே "

என்று பாடினர். வள்ளலும் படிக்காசரும் பிறகு இறுதி வரை நண்பர்களாக விளங்கியிருந்தனர். வள்ளல் தன்மையாலும் தொண்டை மண்டல சதகத்தாலும் கறுப்ப முதலியார் அழியாப் புகழ் பெற்றார்.

## சொக்கநாதப் புலவர்

தொண்டை மண்டல சதக அரங்கேற்றத்திற்குப் பின், கறுப்ப முதலியாருடைய புகழ்எங்கும் மிகுதியாகப் பரவியது. புலவர்கள் அடிக்கடி கறுப்ப முதலியாரிடஞ் சென்று பரிசில் பெற்றுமகிழ்ந்தனர். நாளடைவில் கறுப்ப முதலியார் இல்லத்தைத் தமது இல்லமாகவே நினைத்துப் புலவர்கள் பலநாள் தங்கி விருந்துண்டு மகிழ்ந்து செல்லும் வழக்கத்தையும் மேற்கொண்டனர். சொக்கநாதப் புலவர் என்னும் அறிஞர் கறுப்ப முதலியார் இல்லத்தில் பல நாட்கள் தங்கியிருந்தார். கறுப்ப முதலியாருடைய அரும் பெருங்குணங்கள் அவருக்குமிகுந்த மகிழ்ச்சியைஅளித்தது.முதலியாரைப் பின் வரும் பாடல்களாற் புகழ்ந்து பெரும் பரிசு பெற்றுச் சென்றார்.

"சீர்கறுத்த முகிற்கரத்தான் கத்தூரிபூபனருள்
சேயா என்றும்
ஓர் கறுப்பும் இல்லாத தொண்டைவள நாட்டிருக்கும்
உசித வேளே
ஆர்கறுப்பன் என்று சொல்லி அழைத்தாலும் நாமுன்னை
அன்பி னலே
பேர் கறுப்பன் நிறஞ்சிவப்பன்கீர்த்தியினல் வெளுப்பனெனப்
பேசு வோமே.

"நிணம் போதத் தள்ளிப் பெரும்பூதம் போலப்பின்
நேற்றுச்செத்த
பிணம்போற் கிடந்து புரளுவர் காண்பிறர்க் கீட்டிவைத்த

பணம்போன பின்பு விவேகமுண் டாகுமப் பஞ்சைகள்வங்
கணம் போதும் போதும் கறுப்பாதென் மாவையிற் காவலனே.

"பிள்ளைவய தினிற்கல்வி கற்ருேம் பின்பு
பெரியநர வாகனமும் பெற்ருேம் பூமி
உள்ளளவுங் கீர்த்திநிலை நிறுத்திக் கொண்டோம்
ஒருகுறையும் இல்லையினி உரைப்பக் கேண்மோ
தெள்ளிலகு சிதம்பரத்தைத் தெரிசித் தோம்பின்
சேற்கருங்கண் தவளநகைத் தெய்வ யானை
வள்ளிபுணர் சிவப்பனையுந் துதித்தோம் எங்கள்
மாவைவளர் கறுப்பஉனை வாழ்த்தி ஞேமே."

" ஏவைக்குங் கூன்சிலை தொட்டான் அனங்கன் இருவிசும் [பின்
தீவைக்குந் திங்கட் குடையெடுத் தான்தென்றல் தேருகைத் [தான்
காவைக்குங் கண்மணி கத்தூரி ஈன்ற கறுப்பன்வரை
மாவைக்கும் பாவைக்கும் பூவைக்கும் போது வடுவைக் குமே."

## ரு. சீநக்க முதலியார்

### தோற்றம்

"சோழவள நாடு சோறுடைத்து" என்று அறிஞர்களால் புகழ்ந்தோதப்பெற்ற சோழவள நாட்டிலே தஞ்சைக்கும் திருவையாற்றுக்கும் இடையில் உள்ள சிற்றரசூர், பேரரசூர், தென்மாவை, பூந்துருத்தி, கொத்தமல்லி, கண்டி, கருகாவூர் என்னும் ஏழூர்களுக்குத் தலைவராகவும் சோழமன்னனுடைய அமைச்சர்களில் ஒருவராகவும், பெருஞ் செல்வராகவும் கொடையாளியாகவும் சீநக்க முதலியார்சிறப்புடன் வாழ்ந்திருந்தார். அவருடைய புகழ் புலவர்களாற் பாடப் பட்டுச் சிறந்து விளங்கியது. வண்டமிழ்வாணர்கட்குக் கொண்டல் போல் பொருள்களை வாரி வாரி வழங்கினர். "செல்வத்துப் பயனே ஈதல் துய்ப்பேம் எனினே தப்புந பலவே" என்று அறிஞர்கள் கூறியிருக்கிறார்களாதலின் செல்வம் பெற்றதனாலாகிய பயனை இனிது நுகர்வோமென்று தக்காரைத் தேடித் தேடி வழங்கி நின்றார்.

### பொய்யாமொழியார் தொடர்பு

புலவர்பெருமானாகியபொய்யாமொழியார் பொருளின் பொருட்டு ஒருவரைப் புகழ்ந்துபாடார், தக்கவாறு அறஞ் செய்யும் உண்மையான வள்ளல்களைப் பற்றி அறிந்துவிடின் அக்கொடையாளர்களைப் பலவாறு போற்றிப் புகழ்ந்து அவர்தம் சிறப்பைப் வஞ்சமின்றி நெஞ்சாரப் புகழ்ந்து அவர்களுடைய

அறச்செயலுக்கு ஆக்கமளிப்பதே இவர்தம் நோக்கம். அறத்தைப் புரிபவர் மேன்மேலும் ஊக்கம் கொள்ளு தற்கும் தூண்டுகோல் வேண்டுமன்றோ? அத்துறை யிற் சிறந்து விளங்கிய பொய்யாமொழியார் சீநக்க முதலியாரைப்பற்றிக் கேள்விப்பட்டார்: அறவாணர் களும் தமிழ்வாணர்களும் நெருங்கிய தொடர்புள்ள வர்கள். அறவாணர்கள் தமிழ் வாணர்களைப் போற்றித் தமிழ்வளர்க்க விழைகின்றனர். பொய்யாமொழியாரது புலமையையுந் தெய்வத்தன்மையையும் நன்குணர்ந்து அவரைப் பார்ப்பதற்குப் பெருவிருப்பங் கொண்டிருந் தார் சீநக்கர். ஒருநாள் அரசகாரியமாக வேறோர் ஊருக்குச்சென்று தங்கியிருந்தார்.சீநக்க முதலியாரைப் பார்க்க விரும்பிச் சென்ற பொய்யாமொழியார் முதலி யார் தங்கியிருந்த விடஞ்சென்று கண்டார். இருவரும் மிகுந்த மகிழ்ச்சியடைந்து அளவளாவினர். உணவு வேளை நெருங்கியது. முதலியாரிடம் இருந்த புளியஞ் சோற்றினை இருவரும் உண்டனர். புளியஞ் சோற்றில் பொய்யா மொழியாருக்கு இயற்கையாகவே மிகுந்த விருப்பம் உண்டு. அதிலும் சீநக்க முதலியார் அளித்த உணவு மிக இனிமையாகஇருந்தது. உடனே பொய்யா மொழியார்,

" அளிகொ ளுந்தொடை யானர சைக்குமன்
ஒளிகொள் சீநக்கன் இன்றுவந் திட்டசீர்ப்
புளியஞ் சோறுமென் புந்தியிற் செந்தமிழ்
தெளியும் போதெலாந் தித்தியா நிற்குமே. "

என்று புகழ்ந்து பாடினர். இச்செய்தியைச் சோழ மண்டல சதகத்தார் தமது நூலில்,

" பொய்யா மொழியார் பசிதீரப் புளியஞ் சோறு புகழ்ந்தளித்து
செய்யார் அரசூர்ச் சீநக்கர் செய்த தெவருஞ் செய்தாரோ

கையா ருதவி பொறையுடைமை காணி யாளர் கடனன்றே
மையார்புவியின் முதன்மைபெற்ற மரபோர் சோழ
மண்டலமே.''

என்று பாராட்டினர்.

## நட்பு

பொய்யாமொழியார் சீநக்கரை விட்டு உடனே பிரிந்து சென்று விடவில்லை. இருவரும் ஒருவர் மீது ஒருவர் மிகுந்த பற்றுக்கொண்டமையின் நெருங்கிய நட்பினராகி ஒருங்கு உறைந்தனர். இருவர் மனமும் ஒன்றுய்ப் பொருந்திக் கலந்துவிட்டன. பொய்யா மொழியார் பெரும்பாலும் சீநக்கருடனேயே அமர்ந் திருந்தார். முதலியாருடைய அந்தப்புரம் முதலிய எந் தப்புரத்திலும் பொய்யா மொழியார் சென்று சீநக்க முதலியாரோடு உரையாடிக் கொண்டிருப்பது வழக்கம்.

## வீண்பழி

ஒருநாள் இரவு பொய்யாமொழியார் சீநக்கமுதலியா ருடைய படுக்கையறையிற் கட்டிலில் அமர்ந்து உரை யாடிக் கொண்டிருந்தார். உரையாடல் நீண்ட நேரம் நிகழ்ந்தது. முதலியார் ஏதோ அலுவலாக எழுந்து சென்ருர். "சிறிது இருங்கள் வருகிறேன்" என்று கூறிச்சென்றவர் விரைவாக வரவில்லை. பொய்யா மொழியார் கட்டிலிற் படுத்தார். படுத்தவர் அப்படியே உறங்கிவிட்டார். சிறிது நேரம் பொறுத்துச் சீநக்க முதலியாருடைய மனைவி படுக்கையறைக்கு வந்தாள். கட்டிலிற் படுத்துறங்குவது தன்னுடைய கணவன் என்று எண்ணிக்கொண்டு தானும் ஒரு புறம் படுத்து உறங்கிவிட்டாள். சிறிது நேரம் பொறுத்துச்

சீநக்க முதலியார் வந்தார். இருவரும் கட்டிலில் படுத்திருப்பதைப் பார்த்தார். அவருடைய உள்ளத்தில் எத்தகைய மாறுபாடும் உண்டாகவில்லை. "சிறிது தள்ளிப்படுங்கள் நானும்; படுத்துக் கொள்ளுகிறேன்," என்று கூறிப் பொய்யா மொழியாரைச் சிறிது உரிமையுடன் நகர்த்தினர். பொய்யாமொழியார் விழித்துக் கொண்டார். திடுக்கிட்டுப் பதறி யெழுந்தார். சீநக்க முதலியாருடைய மனைவியும் விழித்தெழுந்தாள். நிகழ்ந்ததை அறிந்து நாணங் கொண்டு வெளியே ஓடிப் போயினள். பொய்யாமொழியாருடைய மனக் கலக்கத்தைச் சீநக்க முதலியார் பார்த்தார். "பெரியீர்! மனம் வருந்தாதீர்கள். என்மனைவி, படுத்திருப்பது நான் என்று நினைத்துப் பேதைமையினால் கட்டிலில் வந்து படுத்துவிட்டாள். நான் தங்களிடத்தில் எத்தகைய தீய எண்ணத்தையுங் கொள்ளேன்," என்று கூறித் தேற்றினர்.

## ஊர்வாய்

சீநக்கமுதலியாருடைய மனைவி கட்டிலில் பொய்யா மொழிப் புலவரோடு படுத்திருந்த செய்தி வேலைக்காரர் களால் வெளிவந்து ஊர் முழுவதும் பரவியது. பேசுதற்கு ஏதேனும் வம்புரை அகப்படுமா என்றுஆராய்ந்து திரிந்த அறிவீனர்கட்கு இச்செய்தி நல்ல நாவுணவாகக் கிடைத்தது. அவர்கள் பலவாறு பழிதூற்றித் திரிந்தனர். இச்செய்தி சோழ மன்னனுடைய காதுகட்கும் எட்டியது. அவன் பொய்யாமொழியாரை அழைத்து, "மெய்யாய் நிகழ்ந்தது யாது?" என்று உசாவினன். அவர் நிகழ்ந்ததை உரைத்து,

" தேரையார் தெங்கிளநீர் உண்ணுப் பழிசுமப்பர்
நாரியார் தாமறிவர் நாமவரை நத்தாமை
கோரைவாய்ப் பொன்சொரியும் கொல்லிமலை நன்னுட
ஊரைவாய் மூட உலைமூடிதானிலையே. "

என்னுஞ் செய்யுளையும் பாடினுர்.

## நட்பின் பெருமை

சீநக்க முதலியார் பழமைபோல் பொய்யாமொழியா ருடன் பெருநட்புக் கொண்டிருந்தார். இடையே சிறிது காலம் வேற்றிடங்கட்குஞ் சென்று சுற்றினுர். பொய்யாமொழியார் வேருேர் ஊரில் இருக்கையில் சீநக்க முதலியார் மண்ணகவாழ்வைத் துறந்து விண் ணகம் புகுந்தார். இச்செய்தியைப் பொய்யாமொழியார் அறிந்தார். விரைந்து சீநக்கமுதலியாருடைய ஊருக்கு வந்தார். சீநக்க முதலியாருடைய உடலைச் சுடலையில் கட்டையில் கிடத்தி எரிப்பதற்கு ஏற்பாடு செய்து கொண்டிருந்தனர். அந்த இடத்தில் சோழமன்னனும் இருந்தான். சீநக்க முதலியா ருடலுக்குத் தீ வைக்கப் பட்டது. முதலியாருடைய மனைவியுந் தீப்பாய்ந்தாள். பொய்யாமொழியாருந் தீப்பாயத் தொடங்கினுர். சோழ மன்னன் எவ்வளவோ கூறித் தடுத்துப் பரர்த்தான். புலவர் ,

" வாழி சோழஎன் வாய்மொழி கேண்மோ
ஊழி நிலவெறி மாளிகை யின்வயிற்
கட்டிளங் கணவன் கவின்பெறு சேக்கை
என்றறி மனைவி நெடிது துயில்கொளச்
செல்லக் கிடமின் எனக்கிடந் தருகெனச்
சொல்லிய நண்பன் தனிச்செல் பவனே
நானும் ஏகுவன் நற்றுணை அவற்கே."

என்று சோழமன்னனைப் பார்த்துப் பாடியதுடன் சிதையைப்பார்த்து,

" அன்றுநீ செல்லக் கிடவென்றாய் ஆருயிர்விட்(டு)
இன்றுநீ வானுலகம் ஏறினாய் - நன்றுநன்று
மாநக்க பூண்மடவார் மார்பனே தென்னரசூர்ச்
சீநக்கா செல்லக் கிட."

என்று கூறித் தீயிற் பாய்ந்தார். பொய்யாமொழியார் மீதும் முதலியார் மனைவி மீதும் பழிகூறியவர்களுந் தீப்பாய்ந்தார்க ளென்று சோழமண்டல சதகம் கூறுகிறது.

" புரைதீ ரரசைப் பதிபுகுந்த பொய்யா மொழியார் புகழ்தமிழ்க்கா
அரசூர் முழுதலா ஏழுரும் அழலிற் புகுந்த தரிதாமோ
தரைசூழ் மதியம் மறுவாற்றுஞ் சான்றோ ரஃதாற் றுரெனுஞ்சொல்
வரையா துலகில் பெற்றோரும் வளஞ்சேர் சோழ மண்டலமே."

## உதவி

சீநக்க முதலியார் பொய்யாமொழியார் தம்மை யடைந்த பிறகு அவருக்கு ஆகவேண்டிய எல்லா உதவிகளையும் வரையாது செய்து பாதுகாத்தார். அவ்வுதவிகளும் பொய்யா மொழியார் உள்ளத்தே இறுதிவரையும் நிலைபெற்றிருந்தன.

# ௬. தஞ்சைவாணன்

## தோற்றம்

தமிழ்ப்புலவர்கள் அனைவரும் தஞ்சைவாணன் கோவை என்னும் நூலினை நன்கறிவர். நாற்கவிராச நம்பியின் அகப்பொருள் விளக்கத்திற்குச் சிறந்த இலக்கியமாக விளங்கும் அக்கோவையைப் பெற்ற தஞ்சைவாணனைப் பற்றிப் பெரும்பாலார் யாதும் அறிந்திருக்க மாட்டார்கள். தஞ்சைவாணனுடைய இயற்பெயர் இன்னதென்று தெரியவில்லை. காரணப் பெயரே அவனுக்கு நிலைபெற்று விளங்குவதாயிற்று. தஞ்சை என்பது தஞ்சாவூர் என்பதன் மரூஉப் பெயராக விளங்குவதோடு தஞ்சாக்கூர் என்பதன் மரூஉப் பெயராகவும் விளங்குகின்றது. தஞ்சாக்கூர் என்பது பாண்டி மண்டலத்திலே இராமநாதபுரம் மாவட்டத்தில் மானுமதுரைக்கு அண்மையில் அமைந்துள்ளது. பொய்யாமொழிப் புலவர் காலத்திலே தஞ்சைவாணன் வாழ்ந்திருந்தான். இவன் உழவித்துண்ணும் வேளாளர் மரபினன். இவனுடைய தந்தையின் பெயர் சந்திரன். [தஞ்சாவூரை அரசாண்ட சந்திரவாணன் என்னும் பெயருடைய அரசன் தஞ்சைவாணன் எனப்பட்டான் என்று சிலர் கருதுகின்றனர்.]

## வாழ்க்கை

தஞ்சைவாணன் கல்வியறிவிற்சிறந்து விளங்கினான். தமிழ் மொழியினிடத்திலே தணியாப் பெருங்

காதல் கொண்டிருந்ததன்றிக், கற்றோரிடத்துங்கழிபெரும் காதல் கொண்டிருந்தான். இவன் அந்நாளில் மதுரையை ஆண்டிருந்த பாண்டியனுக்கு அமைச்சனாகவும் படைத்தலைவனாகவும் அமைந்து ஆவனபுரிந்து சிறப்போடு வாழ்ந்திருந்தான். தஞ்சைவாணன் கல்வியறிவிற் சிறந்தவனாகவும் பெருஞ்செல்வனாகவும் விளங்கியிருத்தலைப் பொய்யாமொழிப் புலவர் உணர்ந்தார். அவன் மீது கோவையொன்று பாடிச்சென்றால் தக்கவாறுபொருளுதவி பெறலாம் என்று எண்ணினார்.

## தஞ்சைவாணன் கோவை

தஞ்சைவாணனுடைய பெருமைகளையெல்லாம் நன்கமைத்து ௪௨௫ செய்யுட்கள் அடங்கிய கோவை ஒன்றைப் பாடினார். அக்கோவையில் இவனை, "வையை நாடன்" "வழுதியர் நாமம் வளர்க்கின்ற வாணன்" "மீனவர்தம் செங்கோன் முறைமை செலுத்தியவாணன்" "மாவலிவாணன்," "மல்லையம் போர்வென்ற வாணன்", "தென்னன் தன்னைப் பணிந்துகுற்றேவல் செய்யாது சமர்க்கெழுந்த, மன்னைப் புறங் கண்ட வாணன்", "கன்னடர்மண்கொண்ட வாணன்", "வேளாண்மரபு விளக்கிய வாணன்" எனப் பலவாறு புகழ்ந்து பாராட்டினார்.

## அரங்கேற்றம்

கோவைபாடி முடிந்தபின் பொய்யா மொழியார் தஞ்சாக்கூரை யடைந்தார். தாம் கோவை பாடிவந்திருப்பதைக்கூறி அரங்கேற்றஞ் செய்ய வேண்டு மென்று கூறினார். தஞ்சைவாணன் கோவையை வாங்கிப்படித்துப்பார்த்தான். இயற்கையிலேயே தமிழ்ப்பற்று

நிறைந்த அவனுக்கு இக்கோவை பெருவியப்பையும் மகிழ்ச்சியையும் அளித்தது. வாணன் கோவையைப் புலவரிடங் கொடுத்துச், "சில நாள் பொறுங்கள் அரங் கேற்றத்திற்கு ஏற்பாடுசெய்கிறேன்" என்ருன். புலவர் அரங்கேற்றத்தை எதிர்பார்த்துத் தங்கியிருந்தார். வாணன் பொன்ஞல் ச௨டு தேங்காய்களைச் செய்து வைத்துக்கொண்டான். பிறகு நன்ஞள் ஒன்றில் கோவை அரங்கேற்றம் தொடங்கியது.

## பாட்டிற்கொரு பொற்றேங்காய்

பொய்யாமொழியார் கோவைப்பாவைப் படித்துப் பொருளுரைத்தார். அவையிற் கூடியிருந்த புலவர் பெருமக்களும் பிறருங் கையைத் தட்டியும தலையை ஆட்டியும் தங்களுடைய மகிழ்ச்சியைத் தெரியப்படுத்தினர்கள். தஞ்சைவாணனுடைய மகிழ்ச்சியோஅளவிடற் கரியதாயிருந்தது. ஒவ்வொருபாட்டின் முடிவிலும் அவன் ஒவ்வொரு பொற்றேங்காயை உருட்டிக்கொண் டிருந்தான். கோவை அரங்கேற்றம் பெருஞ்சிறப்போடு முடிவுபெற்றது. தஞ்சைவாணன் ஆடையணிகலன்கள் முதலிய பிறபொருள்களும் வழங்கிப் புலவரைப் பெரிதும் போற்றினன். புலவர் புராண ஆசிரியர்; தமது புராணத்தில்,

> "பொருவாதுயர் சுவைதோயகப் பொருட்கோவை சொலிடலும்
> ஒருபாடலுக் கம்பொன்னொரு தேங்காயள வொப்பப்
> பெருகார்வமொ டுதவிப்பிற பொருளும்பல பெய்தான்
> அருகோர்துணை இல்லானவை கொடுவீதி யணைந்தான்."

என்னும் பாடலால், ஒருபாடலுக்கு ஒரு தேங்காயளவு பொன்வழங்கியதாகக் கூறியுள்ளார்.

## மற்ருெரு கதை

வேருெருவகையாகவும் இச்செய்தி வழங்குகிறது: அஃதாவது, "பொய்யாமொழிப்புலவர் கோவைபாடிச் சென்றபொழுது தஞ்சைவாணன் ஊரிலில்லை. அரச காரியமாக வேற்றூருக்குச் சென்றிருந்தான். தஞ்சைவாணன் மனைவியும் கல்விகேள்விகளில் சிறந்தவள். கோவையை அரங்கேற்றச்செய்து மேற்கூறியவாறு பொற்றேங்காயைப் பரிசளித்தாள். தஞ்சைவாணன் திரும்பிவந்தான்; கோவையைப் படித்துப்பார்த்தான்; தன்மனைவி கோவைக்குத் தக்கவாறு பரிசு கொடுக்கவில்லை என்று எண்ணினான். பொய்யாமொழிப்புலவர் தஞ்சைவாணன் வந்தபிறகு அவனையும் பார்த்துக் கொண்டு போகலாமென்னும் நோக்கத்துடன் தஞ்சாக்கூரிலேயே தங்கியிருந்தார். ஆகவே அவரை வாணன் அழைப்பித்தான். அவரைப்பார்த்துத் "தங்கள்பாடலுக்கு என்மனைவி இவ்வாறு பரிசுவழங்கியது தக்கதன்று பொற்றேங்காய்களை யெல்லாம் கொண்டுவாருங்கள்," என்று கூறினான். புலவர் 'ஏது இவன் பொற்றேங்காய்களைப்பறிமுதல் செய்து விடுவானோ' என்னும் ஏக்கத்துடன் அவைகளைக் கொண்டுவந்தார். வாணன் தேங்காய்களைவாங்கிவைத்துக்கொண்டு மற்ருெரு நாள் வந்துகோவையைஅரங்கேற்றுமாறுகூறினான். ஒவ்வொருதேங்காயிலும் உள்ளமூன்று கண்களிலும் மணிகள் மூன்றைப்பதித்து வைத்துக் கொண்டிருந்தான். புலவர் அரங்கேற்றத் தொடங்கியதும் வாணன் மணியிழைத்த பொற்றேங்காய்களை உருட்டினான். பொய்யாமொழிப் புலவர் தஞ்சைவாணனுடைய தமிழ்ப் பற்றையும்

பெருந்தன்மையையும் கண்டு பேருவகையடைந்தார்."
என்பதாம்

(இவ்வாறு வழங்கும் வரலாறுகள் உண்மையா அல்லது கற்பனையா என்பதைக் குறித்து நாம் ஈண்டு ஆராய்ச்சி செய்து கொண்டிருக்க வேண்டியதில்லை. இவ்வளவு பொன் இருந்திருப்பினும் வாணன் வழங்கியிருப்பினும் அது மிக வியக்கத்தக்கதே. வாணன் பெருவள்ளலாகவும் தமிழ்ப்பற்று மிக்கானுகவும் வாழ்ந்திருந்தான் என்பது மட்டும் தேற்றம். பல வள்ளல்களுடைய வரலாறுகளிலும் இவ்வாறே புதுமையான செய்திகள் காணப்படுகின்றன. இச்செய்திகள் வள்ளல்களின் பெருமையையும் அறிஞர்களின் அருமையையும் விளக்குதற்கு எழுந்தன போலும்.)

" புயலே சுமந்து பிறையே அணிந்து பொருவிலுடன்
கயலே மணந்த கமல மலர்ந்தொரு கற்பகத்தின்
அயலே பசும்பொற் கொடிநின்ற தால்வெள்ளை
அன்னஞ்செந்நெல்
வயலே தடம்பொய்கை சூழ்தஞ்சை வாணன்
மலையத்திலே. (க)

பாரணங் கோதிருப் பாற்கடல் ஈன்றபங் கேருகத்தின்
ஓரணங் கோவெற் புறையணங் கோஉயர் பாவலர்க்கு
வாரணங் கோடி தருந்தஞ்சை வாணன்தென்
மாறைவையை
நீரணங் கோநெஞ்ச மேதனி யேயிங்கு நின்றவரே. (உ)

மண்ணிற் சிறந்தபுகழ்த்தஞ்சை வாணன் மலயவெற்பில்
பெண்ணிற் சிறந்தஇப் பேதைதன் பார்வைபெருவினையேன்
எண்ணிற் சிறந்த இருந்துயர் நோய்தனக் கின்மருந்தாய்க்
கண்ணிற் சிறந்த உறுப்பில்லை யாவதுங் காட்டியதே. (ங)

தமிழ்தங் கியதஞ்சை காவலன் வாணன் தடஞ்சிலம்பில்
குமிழ்தங் கியமதிக் கொம்பரன் னீர்குளிர் வெண்ணிலவூ(டு)
உமிழ்தண் தரளப் பவளச்செங் கேழ்வள்ளத் துள்ளிருக்கும்
அமிழ்தந் தருவதென் றேபெரு வேட்கைஎன் னுருயிர்க்கே.

தாவாத செல்வந் தருந்தஞ்சை வாணன் தடஞ்சிலம்பா
நீவாரல் சாரல நிலவல ராம்பகல் நீடிருளார்
மாவா னிலவு நிலமங்கை வார்குழல் மல்லிகை போல
ஓவா திரவெறிக் குஞ்சோலை நீழலின் ஊடுவந்தே. (ரு)

– தஞ்சைவாணன் கோவை.

ஒருகவிக் கோரொரு தேங்காய்பொன் னுற்செய்
துருட்டிக்கல்வி
பெருகச்செய் நாவலர் வாழக் கொடுத்துப்ர தாபம்பெற்றுன்
திருமலிதஞ்சையிற் கோவைத் தமிழ்கொண்டு செல்வமிக
வருதரு வாகிய வாணனும் பாண்டியன் மண்டலமே,"

—பாண்டிமண்டல சதகம்.

# எ. நின்றை. காளத்தியப்ப முதலியார்

## தோற்றம்

காளத்தியப்ப முதலியார் தொண்டைமண்டலத்திலே திருநின்ற வூரிலே பிறந்து வளர்ந்தார். இவருடைய குடும்பம் இயற்கையாகவே செல்வவளஞ் சிறந்ததாகவிளங்கியது. முதலியார் எல்லோரிடத்தினும் அன்பும் அருளும் நிறைந்தவராக விளங்கினர். வறிஞர்களும் அறிஞர்களும் இவரை வறுமைப்பிணி மருத்துவராகத் தம்முடைய உள்ளத்திலே எண்ணியிருந்தனர். இவருடையபுகழ் எண்டிசைகளினும் மண்டி நின்றது. அறிஞர்கள் பலர் நாளும் நாளும் இவரையடுத்துப் பெரும் பொருள் பரிசில் பெற்றுச் சென்றனர். தம்மிடம் வந்தவர்களுடைய அகம் மலர்ந்தால்தான் முதலியாருடையமுகம் மலரும். முதலியாருடைய செல்வச் சிறப்பும் கொடைச் சிறப்பும் தமிழ் நாடெங்கணும் பரவிநின்றது.

## வேந்தன் சீற்றம்

காளத்தியப்பருடைய புகழ்தான் யாண்டும்பரவி நின்றதே தவிர அந்நாளில் தொண்டைநாட்டை யாண்டிருந்த குறுநிலமன்னனுடையபுகழ் எங்கும் பரவாமல் போய்விட்டது. நம்முடைய குடிகளில் ஒருவனாய் அடங்கிவாழும்ஒருவனுடைய புகழ்யாண்டும்பரவுவதும் நம்முடைய பெயர் வெளியே தெரியாமல் மறைந்திருப்பதும் நம்முடைய சீர்த்திக்குத்தக்கதன்று, எவ்வாற்றாலாயினும் இதனை ஒடுக்கி மடக்கவேண்டும் என்று

அம்மன்னன் சீற்றங்கொண்டான். முதலியாரைத்தன் னிடம் அழைத்தான். முதலியாரைப்பார்த்து, "முதலியா ரே! நீர் வீணே ஊதாரித்தனமாகச் செலவுசெய்து உம் முடைய பொருளைப் பாழ்படுத்துகிறீர் என்று பலரும் நம்மிடத்தில் குறை கூறுகிறார்கள். "பொருள்தனைப் போற்றிவாழ்" "வளவனாயினும் அளவறிந் தழித்துண்" என்று பெரியோர்கள் கூறியிருப்பதை அறியீரா? இனி மேலேனும் சோம்பேறிகட்குப் பொருள் வழங்கும் வீண் செலவை நிறுத்தும். உமக்குஅறிவுரைகூற வேண்டியது என்னுடைய கடமையாகும்" என்றுஈவதுவிலக்கினான்

காளத்தியப்பர் அரசனிடம், "அப்படியே செய்கி. றேன்" என்றுதலையை ஆட்டிவிட்டுச் சென்றார். வழக் கம்போல்தமது அறச்செயலைச் செய்துகொண்டேயிருந் தார். அரசன் இச்செய்தியை அறிந்தான். அவனுக்குச் சீற்றம் மிகுதியாக உண்டாயிற்று. "வேந்தன் சீறின் ஆந்துணையில்லை" என்பதுபெரியோர் வாக்கு. சீற்றங் கொண்ட வேந்தன் முதலியார் வீட்டிற்கு விரைந்து வந்தான். முதலியாருடைய பொருள்கள் எல்லாவற்றை யும் பறிமுதல் செய்துவிட்டான். முதலியாருடைய பாடு பெருந்திண்டாட்ட மாகிவிட்டது. உண்ண உணவும் உடுக்க உடையும் இல்லாமல் உள்ளம் வருந் தினார். இந்நிலையிலும் வறிஞர்களாகிய அறிஞர்கள்பலர் முதலியார் வீட்டைநாடிவந்தனர். வந்தவர்கட்கு யாதும் இல்லையென்று சொல்ல முதலியாருடைய மனம் இடங் கொடுக்கவில்லை. யாண்டேனும் சென்றுவிடுவதென்று முடிவு செய்தார். ஒருநாள் தம்மனைவியையும் உட னழைத்துக்கொண்டு வீட்டைவிட்டுப் புறப் பட்டார். அன்று இரவில் ஓர் ஊரையடைந்து அறச்சாலை ஒன்றில் தங்கி யிருந்தார்.

## அறச் சாலையில்

அந்நாளில் மதுரகவிராயர் என்னும் பெயருடைய புலவர் ஒருவர் இருந்தார். அவர் சிறந்த அறிஞர். அவர் பெரியஅறிஞராகஇருந்ததற்கேற்பவறுமையும்அவரைக் கொடுமையாகப் பற்றியிருந்தது. பரிசில்வாழ்க்கையை யே தொழிலாகக் கொண்டிருந்த அவர் ஆதரிப்பாரைப் பெருத நாட்களில் மிகுந்த அல்லலுக்கு உள்ளானுர். ஒருசமயத்தில் பலநாட்கள் புலவருக்கு ஒன்றுமே அகப் படவில்லை. அந்நாட்களில்அவர் பட்டினியாகக் கிடந்து வருந்திஞர். நின்றவூர்க் காளத்தியப்பமுதலியாருடைய பெருமையைச் சிலரால் புலவர் அறிந்தார். தம்முடைய ஊரைவிட்டுப் புறப்பட்டுத் திருநின்றவூரைநோக்கிவழி நடந்தார். அன்று இரவில் ஓர் அறச்சாலையை அடைந்து அதில் தங்கியிருந்தார். காளத்தியப்ப முதலி யார் தங்கியிருந்ததும் அந்த அறச்சாலையில்தான். மதுரகவிராயரைப் பசிமிகவும் தொல்லைக்குள்ளாக்கியது. பசியின் கொடுமையைப் பொறுக்க அவரால் முடிய வில்லை. அந்தச் சமயத்தில் கவிராயரிட மிருந்து கவி யொன்று புறப்பட்டது. அது

"நீளத் திரிந்துழன்ருய் நீங்கா நிழல்போல
நாளைக் கிருப்பையோ நல்குரவே – காளத்தி
நின்றைக்கே சென்றக்கால் நீயெங்கே நானெங்கே
இன்றைக்கே சற்றே இரு."

என்னும் செய்யுளாம். காளத்தியப்ப முதலியார் மதுரகவிராயருடைய பாடலைக் கேட்டார்.

## வீட்டிற்குத் திரும்புதல்

அந்தோ இந்தப்புலவர் வறுமைக் கொடுமையால் வாடி நொந்துள்ளார். நாளைக்கு இவர் நம்முடைய வீட்டையடைந்து நம்மைக்காணுமற்போவாராயின் உள்ளம் புண்ணுவார். நாம் வீட்டிற்குத் திரும்பி விடுதலே தகுதியாகும் என்று முடிவு செய்தார். பொழுது புலர்வதற்கு முன்னரே தம்முடைய மனைவியோடு புறப்பட்டு ஊரையடைந்தார், தம்முடைய மனைவியின் அணிகலன்களில் ஒன்றை விற்றுப் பொருளாக்கிச் சமையலுக்கு வேண்டியன வாங்கினுர். சமைத்து வைத்துக் கொண்டு புலவருடைய வருகையை எதிர்பார்த்திருந்தார்.

## புற்றிற்கையிடல்

புலவர் மதுரகவிராயர் வந்துசேர்ந்தார். வள்ளலைக் கண்டு உரையாடினுர். வள்ளல் புலவருக்குச் செய்ய வேண்டிய வழிபாட்டைச் செய்து உணவு கொள்ளச் செய்தார். பிறகு, இப்புலவருக்குக் கொடுப்பதற்குப் பொருள் ஒன்றும் இல்லையே என்ன செய்வது என்று ஏங்கினுர். இல்லையென்று சொல்வதை விட நமது உயிரைப் போக்கிக்கொள்வதே தக்கது என்று முடிவு செய்தார். அவருடைய வீட்டின் பின்புறத்தில் பாம்புப் புற்று ஒன்று இருந்தது. பாம்புப்புற்றுக்குச் சென்று அதில்கையிட்டு உயிரைப் போக்கிக் கொள்ளக்கருதினுர். பிறகு விரைவாக வீட்டிற்குப் பின்புறஞ் சென்று பாம்புப் புற்றிலே தமதுகையைவிட்டார். புற்றுக்குள் இருந்த பாம்பு வள்ளலின் கையைக் கடிக்கவில்லை. தனது முடியில் இருந்த மணியை வள்ளலின்

கையிற் கக்கியது. கையை வெளியே இழுத்த வள்ளல் பாம்பு மணியை [நாகரத்தினத்தை] க் கண்டு மிகுந்த வியப்படைந்தார். விரைவாக அதனைக்கொண்டு போய்ப் புலவரிடங் கொடுத்தார்.

## புலவர் அரசனிடஞ் செல்லுதல்

வள்ளல் வறிய நிலைமையில் இருக்குஞ் செய்தியும் பாம்புப் புற்றில் கையிட்டு முடிமணி பெற்ற செய்தியும் மதுரகவிராயருக்குத் தெரியாது. முடிமணியை எங்கேனும் விற்றுப்பணம்பெறலாம் என்றுஅவர் எண்ணினர். அதனை வாங்கத் தக்கவர்கள் அரசனைத்தவிர வேறு எவரும் இலரென்று உணர்ந்தார். அரசனிடஞ் சென்று பாம்பு மணியைக் காட்டினர். "இதனை யெடுத்துக் கொண்டு பொருள் தரமுடியுமா?" என்று வினவினர். அரசன் பாம்புமணியின் பெருமையை நன்கு உணர்வான். அவன் புலவரைப் பார்த்து, "இம்மணி ஏது? எங்குபெற்றீர் ?" என்று கேட்டான் ? புலவர், காளத்தி வள்ளலிடம் பெற்றேன் என்றார்.

## உயிர்மணி பெறல்

அரசன் உடனே காளத்திவள்ளலுடைய வீட்டிற்குப் புறப்பட்டான். காளத்தி வள்ளலைக் கண்டு "இத்தகைய மணிகள் இன்னும் எத்தனை உம்மிடம் உள்ளன? முன்பு நான் உமதுபொருள்களையெல்லாம் வவ்வியபோது இதனைஎங்குமறைத்துவைத்திருந்தீர்?" என்று வினவினன். காளத்தி வள்ளல் நிகழ்ந்ததைக் கழறினர். அரசன் அவர் கூறியதை நம்பவில்லை "இம் மணியைப் பாம்பினிடம் இருந்து பெற்றது உண்மையாயின் அதனுடைய உயிர் மணியையும் [சீவரத்

தினம்)வாங்கும்பார்ப்போம்'' என்றுகூறினன். காளத்தி வள்ளல் அரசனை அழைத்துக்கொண்டு பாம்புப் புற்று இருக்குமிடத்திற்குச் சென்றார். புற்றை வலம் வந்து வணங்கினார். "பாம்பே! நீ எனக்கு முன்பு உனது முடி மணியைத் தந்தது உண்மையாயின் இப்பொழுது உனது உயிர்மணியையும் அரசன்காணுமாறு எனக்குத் தருவாயாக'' என்றார். உடனே புற்றில் இருந்த பாம்பு வெளியே வந்தது. காளத்தி வள்ளலை மூன்று முறை சுற்றி வந்தது. தனது உயிர்மணியை அவர் முன்பு கக்கி விட்டு இறந்து போய்விட்டது.

## அரசன்வள்ளலின் பெருமையை உணர்தல்

காளத்திவள்ளலின் பெருமை இப்பொழுதுதான் அரசனுக்குத் தெரிந்தது. தான் அவருக்குத்தீமை செய்ததற்காக உள்ளம் வருந்தினன். அவரிடம் இருந்து பறிமுதல் செய்த பொருள்கள் எல்லாவற்றையுந் திரும்பக்கொடுத்ததுடன் மேலும் மிகுதியாகப் பொருள் கொடுத்து வள்ளலாக விளங்குமாறு வாழ்த்துரைகள் பல கூறினன். மதுரகவிராயர் நிகழ்ந்ததை யறிந்து மிகுந்த வியப்புக்கொண்டார். காளத்திவள்ளல் பிறகு மதுரகவிராயருக்கு மிகுந்த பொருள் வழங்கினார். அவர் சிறிது நாள் காளத்திவள்ளலோடு உடனுறைந் திருந்து பின்பு தமது ஊருக்குச் சென்றார்.

## மேற் கோள்கள்

காளத்தி வள்ளல் பாம்பின் வாயிற் கையிட்ட செய்தி தொண்டைமண்டலசதகத்திற் பின்வருமாறு குறிக்கப்பட்டுள்ளது.

" தாயினும் நல்ல தயையுடை யோர்கள் தமதுட லம்
வீயினுஞ்செய்கை விடுவர்கொல் லோ தங்கள் மெய்ம்முழுதும்
தீயினும் வீழ்வர் முதுகினுஞ் சோறிட்டுச் சீறரவின்
வாயினும் கையிடு வாரவர் காண்தொண்டை மண்டலமே."

" நீளத் திரிந்தென்று வெண்பாவி னுலன்று நின்றையர்கோன்
காளத்தி வாணனைப் பாடிய பாடல் கருதுமண்ட
கோளத்தி னுஞ்சென்று பாதாளம் புக்குக் குலவுசக்ர
வாளத்தினுஞ்சென்றதாலெளிதோதொண்டைமண்டலமே"

## பின்பு

பிறகு காளத்தி வள்ளல் வள்ளன்மையில் தலை சிறந்தவராய்த் தம்மை நாடிவந்த புலவர் பெருமக்களுக்கும் வறியவர்கட்கும் தக்கவாறு உதவிசெய்து இறுதியில் விண்ணக வாழ்வை எய்தினர். பொருளிடத்தில் பற்றுக்கொண்டிருந்த அந்நாட்டுக் குறுநில மன்னனுடைய பெருமையோ பெயர்கூட எவருக்குந் தெரியாத முறையில் அழிந்தொழிந்தது.

# அ. அண்ணுமலை ரெட்டியார்

## இலிங்கா ரெட்டியார்

நடுநாட்டிலே துறைமங்கலத்திலே ஏறக்குறைய முந்நூற் றெழுபத்தைந்து யாண்டுகட்கு முன்னே, பண்டகுலத்திலே, 'வல்லகோலாதிபதி' என்னும் பட்டப் பெயர் பெற்றுக் குறுநிலமன்னராய் ரெட்டியார் ஒருவர் விளங்கியிருந்தார். அவர் பெயர் இலிங்கா ரெட்டியார்.

## அண்ணுமலை ரெட்டியார்

இலிங்காரெட்டியார் கல்வியறிவொழுக்கங்களினும் குருலிங்க சங்கம பத்தியினும் வீரசைவப்பழக்க வழக்கங்களினும் மிகச்சிறப்புற்றவராக வாழ்ந்து கொண்டிருந்தார். பிரதோட காலத்திலே சிவவழிபாடு செய்தே உணவு கொள்ளுதலை அவர்வழக்கமாக மேற்கொண்டிருந்தார். தமது ஊருக்கும் விருத்தாசலத்திற்கும் ஏறக்குறைய நான்கு காவத மிருக்கவும் அப்பதியில் எழுந்தருளிய பழமலைநாதரையும் பெரிய நாயகியம்மையையும் பிரதோடகாலத்திற் சென்று பணிந்து வணங்குதலை வழக்கமான செயலாக மேற்கொண்டிருந்தார். மேலும் பிரதோடக்கட்டளையும் ஏற்படுத்திச் சிறப்பாகச் செய்து வந்தார். இத்தகைய சீரியசெயன்முறைகளால் இலிங்காரெட்டியார்க்கு மகன் ஒருவன் பிறந்தான். அவனுக்கு அண்ணுமலை யென்று பெயரிட்டுச் சிறப்புடன் வளர்த்து வந்தார். விருத்தாசலத்திற்கு இறை

வழிபாட்டின் பொருட்டுச்செல்லும்போது அண்ணுமலை யையும் உடனழைத்துச் செல்வது வழக்கம்.

## ஆறுவழி விடுதல்

இவ்வாறு நிகழ்ந்துகொண்டிருக்குங் காலத்திலே ஒருபிரதோட நாளில் இறைவழிபாட்டின் பொருட்டுப் புறப்பட்டுவந்தார். வழியிலே உள்ள பேராறு என்கிற வெள்ளாறு இருகரையும் பெருகி வழிந்து ஓடியது. ஓடம்முதலியனவும் செல்லக் கூடாத நிலைமையில் நீர்ப் பெருக்கு மிகுதியாக இருந்தது. இலிங்கா ரெட்டியார் மனம் வருந்தினர். "நாங்கள் சிவபெருமானுக்குத் தொண்டராயின் இவ்வெள்ளம் வழிவிடுக; இன்றேல் இதில்இறப்பதே தகுதி" என்றுஉறுதிசெய்துகொண்டு துணிவோடு அவ்வாற்றில் இறங்கினர். இறைவன் திருவருளால் அவ்வாறு வழிவிட்டது. "எளியேங்க ளிடத்திலே சிவபிரான் திருவருள் இருந்தவாறு என்னே?" என்று வியந்து தம்மகனோடு சென்று பழமலைநாதரையும் பெரியநாயகியம்மையாரையும் போற்றிவழிபட்டார். மனம் உருகிப் பலவாறு போற்றி னர். தமக்குச் சிவபெருமான் செய்த திருவருளை எண்ணிப் பேரின்பம் எய்தினர். அச்சிவப்பதியிலே சில நாள் தங்கியிருந்தார்.

## இறைவன் திருவருள்

ஒருநாள் இரவிலே பழமலைநாதர் அண்ணுமலை யாருடைய கனவிலே ஒருசிவனடியார் போலத் தோன் றினர். அவரைப்பார்த்து, "நீர் ஏன் இவ்வாறு துன் பத்தையடைகின்றீர்? நாம் உம்முடைய ஆளுகையில் அமைந்த திருவெங்கை நகரத்திலே இன்ன இடத்தில்

திருவுருக்கொண்டுவீற்றிருக்கிறேம்.கோயில் அமைத்து வழிபடுவீராக. கோயில் அமைக்குங்கால் வடநாட்டில் இருந்து வற்கடத்திஞல் வருந்திச் சிலசிற்பர்கள் வருவார்கள். அவர்களாலே திருப்பணி நிறைவேறும்'' என்றுதிருவாய் மலர்ந்து மறைந்தருளிஞர்.

## திருப்பணி

இலிங்காரெட்டியார் திருவெங்கை நகரத்தை அடைந்தார். இறைவன் குறிப்பிட்ட இடத்தை ஆராய்ந்து பார்த்தார். அங்கே நிலத்திற்குள் ஒருசிவலிங்கமும் அம்பிகை திருவுருவம் முதலியவைகளும் இருக்கக் கண்டார். அளவிடமுடியாத மகிழ்ச்சிக்கடலிலே மூழ்கித் திருவருளைப் போற்றிஞர். அப்பொழுதே அம்மூர்த்திக்குப் பழமலைநாதர் எனவும் தேவிக்குப் பெரிய நாயகியம்மை எனவும் பெயரிட்டார். சிறியகோயில் ஒன்றை அமைத்து நாள்தோறும் வழிபாடு ஏற்படுத்திஞர். அந்நாளிலே சிவபெருமான் செப்பியபடி வடநாட்டில் இருந்து சிற்பிகள் சிலர் வந்தனர். அவர்களுடைய நூலுணர்ச்சி முதலிய நல்லியல்புகளைப் பார்த்து வியந்தார். அவர்கட்கு வேண்டுவன வழங்கிஞர். அவ்வூரில்தானே அவர்களைக் குடியேற்றிஞர். திருப்பணிகள் சிறப்பாக நடைபெற்றுக்கொண்டிருந்தன. அப்போது இலிங்காரெட்டியார் இறைவன் திருவடி நீழலை யெய்திஞர்.

## அண்ணுமலை ரெட்டியார் திருப்பணி

அண்ணுமலைரெட்டியாருந் தம்முடைய தந்தையைப் போல் கல்வியறிவிலும் கடவுளன்பிலும் சிறந்து விளங்கிஞர். அவர் தம்முடைய தகப்பஞர் நடத்திய

திருப்பணியை அவரினும் சிறப்பாக நடத்திக்கொண்டிருந்தார்.

## சிற்பிக்கு ஊழியம்

ஒருநாள் சிற்பர்களுடைய தலைவன் கருவறையின் கருப்பக்கிருகத்தின்கீழேகட்டப் பட்டிருக்கும் சாரத்தின் மேல் இருந்துகொண்டு வேலைசெய்திருந்தான். அப்பொழுது வெற்றிலை மடித்துக்கொடுத்தற் பொருட்டு வேலைக்காரனை யழைத்தான். அப்பொழுது அ வ ன் அங்கு இல்லை அண்ணாமலை ரெட்டியார் செய்தியை அறிந்தார். தாம்சென்று கீழே இ ரு ந் து கொ ண் டு வெற்றிலையை மடித்துக்கொடுத்தார். வெ ற் றி லை மடித்துக்கொடுப்பது ரெட்டியா ரென்பது சாரத்தினுடைய மறைப்பால் சிற்பனுக்குத் தெரியவில்லை. அவன் தன்னுடைய இடது கையினால் அதனை வாங்கி வாயிற் போட்டுக்கொண்டான். வெற்றிலை மடித்துக்கொடுத்தது ரெட்டியார் என்னுஞ் செய்தி பிறகுதான் சிற்பனுக்குத் தெரிந்தது. " ஓகோ என்ன காரியஞ் செ ய் தே ா ம் ? இத்தீவினை நீங்குதற்குக் கழுவாய்தானும் உண்டோ" என்று உள்ளம் பதறினான். தீமை செய்த அ ந் த இடதுகையைத் துணிக்கத் துணிந்தான். இரெட்டியார் சிற்பனை நோக்கிக், "கையைத் துணிப்பது தகுதி யன்று; அக்கையைக்கொண்டு உனக்குத் தெரிந்துள்ள அரியவேலைகளையெல்லாம் அமைத்து இத்திருப்பணியைச் சிறப்பாக நிறைவேற்றுவாயாயின் உன்னுடைய பெயர் என்ஞான்றும் நிலைபெறுவதன்றி அடைதற்கரிய சிவ கதியையும் நீ அடைவதற்கு ஏதுவாகும்" என்று வற்புறுத்திக் கூறினார். இந்நன்மொழிகளைச் சிற்பன் கேட்டான். இதுவே சிறந்த க ழு வ ா ய ா மெ ன் று

உள்ளந் தேறினன். முன்கட்டிய கருவறையை முற்றும் பிரித்தான். இத்திருப்பணியைப்போல எவ்விடத்தினு மில்லை யென்று எல்லோரும் புகழ்ந்து கொண்டாடு மாறு கோயில் திருப்பணிகளை மிக வியக்கத்தக்க முறை யில் அமைத்து முடித்தனன். அத்திருப்பணியைக் கண்டவர்கள் பெருங் களிப்படைந்தார்கள்.

## குடமுழுக்கு

திருப்பணியின் சிறப்பைக்கண்டு அண்ணாமலை ரெட்டியார் உள்ளங் களித்தார். எல்லாத் திருப்பணி களும் இனிது நிறைவேறியபின் சாலிவாகன சகாப்தம் கருசரு உருத்திரோற்காரியாண்டு, வைகாசித்திங்களில் ஆனை முகக்கடவுள் முதலிய எல்லா மூர்த்திகளையுங் கோயிலில் அமைத்துக் குடமுழுக்குச் செய்தார். மேலும் பெரும்பொருள் செலவிட்டுப் பெரியமண்டபம், கோபுரம், திருமதில், திருக்குளம் முதலிய திருப்பணி களைச் செய்துகொண்டிருந்தார்.

## சிவப்பிரகாச அடிகள்

சிவப்பிரகாச அடிகள் தம்முடைய உடன்பிறந்த வர்களோடு காஞ்சிபுரத்திலிருந்து புறப்பட்டுத், திருவண்ணாமலை முதலிய சிவப்பதிகளைப் போற்றி வழி பட்டுக்கொண்டு துறைமங்கலத்தை அடைந்தார். ஒரு பூம்பொழிலிலே தங்கிச் சிவபூசைசெய்துகொண்டிருந் தார். அண்ணாமலை ரெட்டியார் சிவப்பிரகாச அடிகளு டைய புலமையையும் பெருமையையும் முன்னரே அறிந்து அவரைக்கண்டு போற்ற வேண்டுமென்று நெடுநாளாக விரும்பியிருந்தார். அவர் சிவப்பிரகாச அடிகளைக்கண்டு போற்றி வழிபட்டார் அடிகளைப்

பார்த்துத், " தாங்கள் இவ்விடத்திலேயே எழுந்தருளி யிருத்தல்வேண்டும் " என்று வேண்டிக்கொண்டார். தங்கள் குருவாகிய சென்னவசவையர் மடத்திற்குப் பக்கத்தில் ஒரு திருமடங்கட்டி அதில் அடிகளை எழுந் தருளச் செய்தார். அடிகள் அங்குச் சில ஆண்டுகள் எழுந்தருளியிருந்தார். இரெட்டியார் அடிகட்குத் தொண்டு செய்திருந்தார்.

அடிகள் இலக்கணங் கற்க விரும்பித் தம்முடைய உடன் பிறந்தவர்களோடு தென்னாட்டுக்குப் புறப்பட் டார். அப்போது ரெட்டியார் அடிகள் தமது விருப் பத்தை நிறைவேற்றி அங்கு வந்து சேருமளவுக்கும் ஏராளமான பொருளை வழங்கினார். அடிகளும் புறப் பட்டுத் திருநெல்வேலியை அடைந்து வெள்ளியம்பல வாணத் தம்பிரானிடம் இலக்கணம் கற்றுப் பல சிவப் பதிகளையும் போற்றி வழிபட்டு மீண்டும் இரெட்டியார் மடத்திற்கு வந்து சேர்ந்தார்.

## நூல்கள்

அடிகள் திரும்பி வருவதற்குள் அண்ணாமலை ரெட் டியார் திருவெங்கையிலே அடிகளின் பொருட்டுத் திரு மடம் ஒன்று அமைத்துவைத்தார். சிவப்பிரகாச அடிகள் அம்மடத்திலே தங்கியிருந்து கொண்டு அண்ணாமலை ரெட்டியாரா லமைக்கப்பெற்ற திருக்கோயிலில் எழுந்த ருளிய கடவுள்மீது திருவெங்கைக் கோவை, திருவெங் கைக் கலம்பகம் திருவெங்கையுலா, திருவெங்கையலங் காரம் முதலிய நூல்களை இயற்றினார். அண்ணாமலை ரெட்டியாருடைய திருப்பணித்திறம், புலவர்கட்கும் பிறருக்கும் வாரிவழங்கும் வள்ளல்திறம் முதலிய பெரு மைகளைத் திருவெங்கையுலாவிலே,

சரு. " பண்டை அறத்தின் படிவமிது என்னவுருக்
கொண்டவிலிங் கையன் குலமைந்தன்— உண்ட
படிதாங்கி மாயன்தேர்ப் பார்தாங்கி யாங்கெங்
குடிதாங்கி நல்லிசைமென் கோதை — முடிதாங்கு
கல்வி யுறுநீல கண்டன் துணைவனலர்ச்
செல்வி உறையுந் திருமார்பன் — வல்விரகம்
பூண்ட மடந்தையரே பொல்லா னெனு நல்லான்
தூண்டு திகிரிச் சுமைதுறந்தான் — யாண்டும்
இலையென்றல் கேட்பவுமின் றுதென் றிரப்போர்
நிலைகண்டாங் கெப்பொருளுநேர்வோன்-அலையுண்டு

ருo. பாலாழிக் கின்றுநிலை பான்மதிக்கென் றெப்பிகந்து
தோலா துலகனைத்தும் சூழ்புகழான் — மேலாய
செங்கமல வாணற்கே செந்நாவின் மேவுதல்வெண்
மங்கையெனும் அவ்வுரையை மாற்றியே—சங்கையற
மூவுலகு ளோர்க்கு முதுசீர்த்தி வெண்மங்கை
நாவுறைய வைத்த நலத்தினன் — தேவிகலி
வந்துதன்சீர் பாடுநரை மண்மீதில் அந்நிலையே
இந்திரன்தான் ஆக்கும் இயல்பினன் — நிந்தையற
உண்டுபணை யலரென் றெண் காவைக் கீழ்ப்படுத்திக்
கொண்டு புரைதீர் கொடையினன் — கண்டுபுகழ்

ருரு. " பண்பும் அலாது பயனும் புணர்ந்துநிதித்
தண்பதுமம் வென்ற தடக்கையான் — வண்புலவர்
தம்மைவிழி காக்கும் தகவின் இமைபோலச்
செம்மை பெறக்காக்கும் சீருடையான்—
[மெய்ம்மைபெற
நல்லார் ஒருவர் உளரேல் அவர்பொருட்டால்
எல்லார்க்கும் பெய்யுமழை என்றுமுனம்—
[சொல்லாடும்
ஐயம் அகல அகிலமெலாந் தற்சுட்டிப்
பெய்யுமழை என்னும் பெயராளன் — துய்ய

மறையோர் மிடிப்பகைஞன் வாய்மைநாம் என்று
மறையோ மெனப்பொய் யறைவான்—முறையோதி

௯௦. வேலியறஞ் செய்ய விளைத்துக் கரும்பயிலக்
கூலி கொடுக்குங் குலத்தோன்தன் — மாலிரவும்
ஆர்த்தி விருந்தால் அடையாக் கதவழகு
மாத்திரையாய் நின்றொளிரும் வாய்தலான் — பூத்த [பொருள்
ஏதப் படாமல் இருந்துதவம் நல்லறமென்
பூதப் படியுட் புதைக்கின்றோன் — வேதன்
நிலம்பெயர்த்து வைத்த நெடுவேரிற் சென்னி
குலம்பெயர்த்து வைத்த குணத்தான்—தலம்படைத் [தோன்
கண்ட குலத்திற் கருதின் இரட்டியாம்
பண்ட குலத்தின் பயனானோன் — மண்டலிகர்

௯௫. நல்லகோல் இன்று நவைக்கோல் எனச் செயுங் [கோல்
வல்லகோல் அண்ணு மலைவள்ளல் — மல்லலுறச்
சந்தி பொருத்தித் தகுஞ்சீர் கெடாதடுக்கிப்
புந்தி மகிழறப் புதவணித்தா — முந்தையோர்
செய்யுள்போற் செய்த திருக்கோயில்............"

என்று புகழ்ந்து பாராட்டினர்.

## இறுதி

இரெட்டியார், சிவப்பிரகாச அடிகளைத் திருமணஞ் செய்துகொள்ளுமாறு வேண்டினர். அடிகள் அதற்கு மறுத்து விட்டார். பிறகு அடிகளாரின் உடன்பிறந்தவர்களாகிய வேலையருக்கும் கருணைப்பிரகாசருக்கும் திருமணஞ் செய்துவைத்தார். அவர்கட்குக் குடும்பக்கவலை யாதும் நிகழாமல் போற்றிப் பாதுகாத்தார். மற்றும் தம்மையடைந்த புலவர்கட்கும் பெரும்பொருள் வழங்கி

அக்காலத்திலே சீர்த்திபெற்ற பெருவள்ளலாகத் திகழ்ந் திருந்தார். புலவரைப் புரத்தல்; திருக்கோயில் திருப்பணி செய்தல் முதலிய உயரிய பணிகளில் இவர் வரையாது வழங்கியதன்மையால் இவரைஎல்லோரும் வள்ளல் என்று பாரட்டலாயினர். அறிஞராகிய சிவப் பிரகாசரிடத்தும் அவருடைய உடன் பிறந்தவர்களிடத் திலும் அண்ணாமலைரெட்டியார் கொண்டிருந்த பேரன்பு அளவிட்டுரைக்கக் கூடியதன்று. இவர் நீண்டகாலம் தாம்கட்டிய திருக்கோயிலைக் கண்ணைப்போற் பாது காத்துப் பூசை முதலியவைகளை நன்கு நடைபெறச் செய்திருந்து இறுதியில் சிவபிரானுடைய திருவடி நீழலை யடைந்தார்.

# கூ. சீதக்காதி

## தோற்றம்

சேது நாட்டிலே உள்ள கீழைக்கரை என்னும் ஊரில் முகமதியர்கள் மிகுதியாக வாழ்கின்றனர். அவ்வூரிலே சீதக்காதி பிறந்து வளர்ந்து சிறந்து விளங்கியிருந்தார். இவருடைய பெயர்பெரியதம்பி மரக்காயர். செல்வராக விளங்கிய இவர் கொடையாளியாகவும் மிளிர்ந்தார். தமிழ் மொழியினிடத்திலே இவருக்குஆர்வம் மிகுதியாகஇருந்தது. தமிழ்க்கல்வியிற் சிறந்துவிளங்கியஇவர், தமிழ்ப்பாடல்களின் பொருளைத் தாமே யுணர்ந்து கொள்ளத்தக்க புலமை வாய்ந்தார். இவர்பால் செல்வமும் தலைமைவாய்ந்து விளங்கியதைக் கண்ட அறிஞர்களில் வறிஞர்கள் இவரது சீர்த்தியைப்புகழ்ந்து பாராட்டிப் பாட்டுக்கள்பாடிக்கொண்டு சென்றனர். அத்தகையோர்கட்குச் சீதக்காதி தக்கவாறு பொருள் வழங்கினர். நாளடைவில் சீதக்காதியின் செல்வம் புலவர்கட்கும் வறியவர்கட்கும் பெருவாரியாகப்பயன்படத்தொடங்கியது. பெரியதம்பி மரக்காயர் சீதக்காதி வள்ளல் எனப் பெயரடைந்து சிறந்து விளங்கினர்.

## விலைமகட் குதவி

அழகிற் சிறந்த விலைமகள் ஒருத்தி பெரும்பொருள் திரட்டிச் சிறப்புடன் வாழ்ந்திருந்தாள்அவளிடம்பெரும் பொருளிருப்பதை உணர்ந்த கள்வர்கள் பலர் ஒருநாள்

அவ்விலைமகளின் இல்லத்திற்புகுந்து, பரம்பொருளி டத்தில் பற்றில்லாமல் அரும்பொருளிடத்திலேயே பற்றுக்கொண்டிருந்த அவளுடைய பெரும் பொருளைக் கைப்பற்றிச் சென்றனர். அவ்விலைமகள் ஒரே நாளில் வறியவளானாள். அவள் கல்வியறிவிலுஞ் சிறந்து செய்யுள் பாடத்தக்க ஆற்றலமைந்தவள். அவ்விலைமகளின் இன்னலைக் கண்டவர்கள், சீதக்காதி வள்ளல்பாற் சென்று நிகழ்ந்ததை உரைத்தால் தக்க வாறு உதவிபெறலாம் என்று உரைத்தனர். அவ்விலை மகள் அவ்வாறே சென்று உதவிபெற முடிவு செய்தாள்.

'' தினங்கொடுக்குங் கொடையானே தென்காயற்
பதியானே சீதக்காதி
இனங்கொடுத்த உடைமையல்ல தாய்கொடுத்த
உடைமையல்ல எளியாள் ஆசை
மனங்கொடுத்தும் இதழ்கொடுத்தும் அபிமானந்
தனைக்கொடுத்தும் மருவி ரண்டு
தனங்கொடுத்த உடைமையெல்லாம்கள்ளர்கையிற்
பறிகொடுத்துத் தவிக்கின்றேனே, ''

என்னுஞ் செய்யுளைச் செய்துகொண்டு சீதக்காதியிடஞ் சென்றாள். அவரைக்கண்டு தன்குறைபாட்டைக் கூறினாள். சீதக்காதி வள்ளல் அவ்விலைமகளுக்குத் தகுந்தவாறு உதவி செய்தார்.

## படிக்காசுப் புலவர்

சீதக்காதி வள்ளலின் பெருமையையுங் கொடைச் சிறப்பையும் படிக்காசுப் புலவர் அறிந்தார். அவரைக் காணவிரும்பி விரைந்து கீழைக்கரையை அடைந்து வள்ளலைக் கண்டார்.

" ஓர்தட்டி லேபொன்னும் ஓர்தட்டி லேநெல்லும் ஒக்கவிற்கும்
கார்தட் டியபஞ்ச காலத்தி லேதங்கள் காரியப்பேர்
ஆர்தட்டி னுந்தட்டு வாராம லேயன்ன தானத்துக்கு
மார்தட் டியதுரை மால்சீதக் காதி வரோதயனே. (க)

ஈயாத புல்லர் இருந்தென்ன போயென்ன எட்டிமரம்
காயா திருந்தென்ன? காய்த்துப் பலனென்ன கைவிரித்துப்
போயா சகம்என் றுரைப்போர்க்குச்செம்பொன் பிடிபிடியாய்
ஓயாமல் ஈபவன் வேள்சீதக் காதி ஒருவனுமே. (உ)

நேசித்து வந்த கவிராசர் தங்கட்கு நித்தநித்தம்
பூசிக்குநின்கைப் பொருளொன்றுமேமற்றைப் புல்லர்பொருள்
வேசிக்கும் சந்து நடப்பார்க்கும் வேசிக்கு வேலைசெய்யும்
தாசிக்கும் ஆகுங்கண் டாய்சீதக் காதி தயாநிதியே. (ந)

காய்ந்து சிவந்தது சூரிய காந்தி கலவியிலே
தோய்ந்து சிவந்தது மின்னார் நெடுங்கண்கள் தொல்பலநூல்
ஆய்ந்து சிவந்தது பாவாணர் நெஞ்சம் அனுதினமும்
ஈய்ந்து சிவந்தது மால்சீதக் காதி இருகரமே. (ச)

தரைகண்ட மட்டும் படர்ந்தண்ட கோளமுந் தாவியெங்கும்
உரைகண்ட கீர்த்தி பெறுஞ்சீதக் காதி உலகினில் வெண்
திரைகண் டெழுங்கடல் மீதேதன் வங்கத்தைச்
[செல்லவிட்டுக்
கரைகண் டவனினங் காணுன்என் ஆசைக் கடற்கரையே"
(ரு)

என்னுஞ் செய்யுட்களால், சீதக்காதியின் கொடை நலம் முதலியவைகளைப் பலவாறு புகழ்ந்துரைத்தார். படிக்காசுப் புலவரின் பெருமையைப் பற்றி முன்னரே நன்குகேள்விப்பட்டிருந்த சீதக்காதிவள்ளல் படிக்காசுப் புலவரைப் பெரிதும் போற்றினர். பலவாறு நன் கொடைகள் வழங்கிச் சிறப்புச்செய்தார். பல நாட்கள்

தம்முடனேயே தங்கியிருக்கச் செய்தார். படிக்காசுப் புலவர் பலநாள் சீதக்காதி வள்ளலோடு தங்கியிருந்து பின்னர்த் திருச்செந்தில் முதலிய சிவபதிகட்கு இறை வழிபாட்டின் பொருட்டுச் சென்றார்.

## நமசிவாயப் புலவர்

அந்நாளில் நமசிவாயப்புலவர் என்னும் அறிஞர் ஒருவர் கல்வி கேள்விகளில் வல்லவராகப் பாண்டி நாட்டிற்சிறந்து விளங்கியிருந்தார். அவருடைய பெருமையை நன்குணர்ந்த சீதக்காதி வள்ளல் அவரைத் தம்முடைய உரிமைப் புலவராகக்கொண்டு அவர்பால் கல்வி நலங்களைக் கேட்டின்புற்றார். சீதக்காதி வள்ளலின் காலத்தில் தமிழ்நாட்டில் இருந்த புலவர்களிற் பெரும்பாலோர் சீதக்காதி வள்ளலைப் பாடி நன்கொடை பெற்றுச் சென்றனர்.

## இறுதி

நீண்ட நாள் சிறப்புடன் வாழ்ந்திருந்த சீதக்காதி வள்ளல் மண்ணக வாழ்வைத் துறந்து விண்ணகம் புகுந்தார். சீதக்காதி வள்ளல் செத்துமடிந்தார் என்னுஞ் செய்தி புலவர்கட்குப் பேரிடியாயிற்று. வள்ளலின் மறைவைக் குறித்து எல்லோரும் உள்ளம் இரங்கினர்.

## படிக்காசர் வருதல்

சீதக்காதி வள்ளல் மறைந்தபின் சில நாட்கள் சென்றன. இவர் மறைந்த செய்தி படிக்காசுப் புலவருக்குத் தெரியாது. வள்ளலைப் பார்க்கவேண்டும் என்னும் நோக்கத்துடன் கீழைக்கரையை அடைந்தார்.

வள்ளலின் மறைவை அறிந்தார். அவருடைய மனம் புண்பட்டது. அந்தோ இத்தகைய வள்ளலும் மாண்டு மடிந்தாரோ என்று உள்ளங் கலங்கினார். வள்ளலுடைய சமாதியைப் பார்த்துவிட்டுப் போவோம் என்று உள்ளத்தில் எண்ணினார். சீதக்காதி வள்ளலை அடக்கஞ் செய்யப்பட்டிருந்த இடத்திற்குச் சென்றார். புலவர் உள்ளம் துன்பக்கடலுக்குட் படிந்தது. அவருடைய உள்ளத்தில் இருந்து சில செய்யுட்கள்எழுந்தன;

" தேட்டாளன் காயல் துரைசீதக் காதி சிறந்தவச்ர
நாட்டான் புகழ்க்கம்பம் நாட்டிவைத் தான்தமிழ் நாவலரை
ஓட்டாண்டி ஆக்கி அவர்கள்தம் வாயில் ஒருபிடிமண்
போட்டான் அவனும் ஒளித்தான் சமாதிக் குழிபுகுந்தே.

விண்ணுக்கும் மண்ணுக்கும் பேராய் விளங்குதே [வேந்த்ர னென்னும்
கண்ணுக் கினிய துரைசீதக் காதி கமலநிகர்
தண்ணுக் கிசைந்த வதனசந்த் ரோதய சாமியிந்த
மண்ணுக்குள் ளேயொளித் தான்புலவோர்முகம் வாடியதே.

மறந்தா கிலும்அரைக் காசுங் கொடாமட மாந்தர் [மண்மேல்
இறந்தாவ தென்ன இருந்தாவ தென்ன இறந்துவிண்போய்ச்
சிறந்தாளுங் காயற் றுரைசீதக் காதி திரும்பிவந்து
பிறந்தால் ஒழியப் புலவோர் தமக்குப் பிழைப்பில்லையே."

இவ்வாறு புலவர் பாடிய அளவில் சமாதியில் திடீரென்று ஒரு பிளப்புண்டாகியது. அதிலிருந்து சீதக்காதியின் வலதுகை வெளியே நீண்டு நின்றது. அக்கையின் விரலில் மோதிரம் விளங்கியது. அடக்கஞ்செய்தபோது அம்மோதிரத்தைக் கழற்றுதற்கு மறந்தோ அன்றிப் பெருவள்ளலாய் வழங்கிக்கொண்டிருந்

தவரின் கைம்மோதிரம் அப்படியே இருக்கட்டும் என்னும் எண்ணத்தினாலோ அம்மோதிரத்தை அப்படியே விட்டுவைத்திருந்தனர். கைவெளியே நீண்டதன் கருத்தையும் நோக்கத்தையும் உணர்ந்த படிக்காசர் அம்மோதிரத்தைச் சீதக்காதி வள்ளலின் நன்கொடையாகக் கழற்றிக் கொண்டார். உடனே கை உள்ளே போய் மறையச் சமாதி மேடை மூடிக்கொண்டது. இவ்வாறு வழங்கும் வரலாற்றின் இயற்கை நம்பக் கூடாததாக இருப்பினும் தெய்வத்திருவருளை நோக்குமிடத்து நிகழக் கூடியதே.

## நமசிவாயப் புலவர் பாட்டு

சீதக்காதி வள்ளலால் ஆதரிக்கப்பட்டிருந்த நமசிவாயப் புலவர் சீதக்காதி காலத்திற்குப்பின் துன்புற்றனர்; வறுமையால் வாடிய புலவர்களும்போக்கிடமில்லாமல் ஏக்கமடைந்தனர். சீதக்காதி வள்ளலைக் குறித்து நமசிவாயப் புலவர் பல பாடல்கள் பாடினர். சில பாடல்கள்மட்டும் தனிச்செய்யுட் சிந்தாமணியில் இடம் பெற்றுள்ளன. அவைகளைக்கீழே காண்க.

" பூமா திருந்தென்ன புவிமா திருந்தென்ன பூதலத்தில்
நாமா திருந்தென்ன நாமிருந் தென்னநன் னாவலர்க்குக்
கோமான் அழகமர் மால்சீதக் காதி கொடைமிகுந்த
சீமான் இறந்திட்ட போதே புலமையுஞ் செத்ததுவே." (க)

" மைப்போ தகமும் வளநாடுஞ் செந்தமிழ் வாணர்க்கருள்
கைப்போ தகமனை யான்சீதக் காதியைக் காத்திருந்த
அப்போ தறிந்திலம் இப்பாழ்ம் பணத்தின் அருமையெல்லாம்
இப்போ தறிந்தனம் ஈயாத லோபர் இடத்திற்சென்றே.' (உ)

*சீதக்காதி உயிரோடிருந்த காலத்திற் பாடியன.*

"மாகத்தத் தும்புக ழான்பகை வேந்தர் மகுடம்பொடி
ஆகத்தத் தும்பரி யான்சீதக் காதி அணிமலரி
ஏகத்தத் தும்பி இசைபாடு மார்பனில் என்மகட்கோர்
மோகத்தத் துண்டென்று சொன்னார் இலைமுன்

[மொழிந்தவரே. (௩)

தடக்கும்ப கிம்புரிக் கொம்பா சலப்பெருந் தந்திபட
நடக்குந் துரங்கத் துரைசீதக் காதிநன் னாட்டில்நல
வடக்குங்கு மக்கொங்கை மின்னே அவன்தெரு வாயிலிலே
கிடக்குங் கவியும் பரராச ரத்ந கிரீடமுமே. (௪)

*சீதக்காதியைக் குறித்து வேறொரு புலவர்*

" ஆராயும் வேதியர்க்குள் ஆருமில்லை
அறிவுகெட்ட வலையருமப் படியே ஆவர்
சீராய துருக்கருக்குள் சீதக் காதி
சிறப்புடைய வணிகருக்குள் செந்தில் காத்தான்
காராளர் தங்களுக்குள் வெண்ணெ யூரான்
கருதரிய மறவருக்குள் மூவ ராயன்
பேரான மூங்கிலணை நல்ல காமா
தொட்டியர்க்குள் நீயொருவன் பேர்பெற் றாயே." (௫)

என்று பாடியுள்ளார். இவ்வாறு பலபுலவர்களால் பாடப் பெற்ற சீதக்காதி வள்ளலின் புகழ் இன்றும் அறிஞர்களால் பாராட்டப் பெற்றுவருகிறது.

# க0. வல்லம். காளத்தி முதலியார்

## தோற்றம்

தொண்டை மண்டலத்திலே செங்கற்பட்டுக்கு நான்குமைல் தொலைவில் உள்ள வல்லம் என்னும் ஊரிலேகாளத்தி முதலியார் வேளாண்மரபிற் செல்வக் குடும்பத்திற் பிறந்து கல்வி கற்றுச் சிறந்த அறிவாளியாகவும் கொடையாளியாகவும் விளங்கினர்.

## வாழ்க்கை

காளத்தி முதலியார் கொடையாளியாக விளங்குகிறார் என்னுஞ் செய்தி எங்கும் பரவியது.வறிஞர்களும் அறிஞர்களும் காளத்தியைக்கண்டு நன்கொடை பெற்றுச் சென்றனர். அந்நாளிற் படிக்காசுப் புலவர் கல்வியறிவிற் சிறந்து திருமணம் முடித்து இல்வாழ்விற் புகுந்து நல்வாழ்வை மேற்கொண்டிருந்தார். வறுமை என்னுந் தறுகணாளன் படிக்காசுப் புலவரைப் பற்றிக் கொண்டு அல்லலுக்குள்ளாக்கினன்.

## கற்ரு வழங்கினர்

வறுமையால் வாடியிருந்த புலவருக்குப் பிள்ளை யொன்றுபிறந்தது.அப்பிள்ளைக்குத் தாயிடம்பாலில்லை. பலநாள் வறுமையில் உழன்ற புலவர் பிறகு ஒருவாறு உள்ளந் துணிந்தார். எவரிடமேனும் கற்ரு ஒன்றைப் பெறுதல் வேண்டுமென்று முடிவு செய்தார். சிலர் வல்லமாநகர்க் காளத்தி முதலியாருடைய நல்லியல்பைக்கூறினர்கள். அவரிடஞ் சென்ருல் பாற்பசுபெற்று

வரலாம் என்று கூறினார்கள். படிக்காசுப் புலவர் வல்ல மாநகரை அடைந்து காளத்தி முதலியாரைக் கண்டார். பாவாணர்களானோர் செல்வர்களிடஞ் சென்றால் தமது நிலைமையைப் பாவினாலேயே பகருவது வழக்கம். படிக்காசுப் புலவர் தமது குறையை.

"பெற்றாள் ஒருபிள்ளை என்மனை யாட்டிஅப் பிள்ளைக்குப்பால்
பற்றாது கஞ்சி குடிக்குந் தரமல்ல பாலிரக்கச்
சிற்றாளும் இல்லையிவ் வெல்லா வருத்தமுந் தீரஒரு
கற்றா தரவல்லை யோவல்ல மாநகர்க் காளத்தியே"

என்னுஞ் செய்யுளால் விளக்கினார். படிக்காசுப் புலவரின் நிலைமையைக்கேட்ட காளத்திமுதலியார் உள்ளம் உருகினார். ஒருபசுக்கேட்ட புலவருக்குப் பலபசுக்களைக் கொடுத்தார். பசுக்களைக்கொடுத்து விட்டாற்போதுமா? பிறகு அவைகளைப் பாதுகாப்பதற்கு ஆவன செய்ய வேண்டுமன்றோ? காளத்தி முதலியாருக்கு இவ்வெண்ணமும் உண்டாயிற்று. ஆக்களை மேய்ப்பதற்கு இடையர்களையும் அவ்விடையர்களைப் பாதுகாத்தற்குப் பொருள்வளத்தையும் தக்கவாறு வழங்கிப் புலவரைப் பெருஞ்செல்வராக்கி விட்டார். இச்செயலைப் பிறகு படிக்காசுப் புலவர் தாம் பாடிய தொண்டைமண்டல சதகத்தில்;

"கொல்லையிற் பாற்பசு மேய்ப் போன் கறப்பவன்
[கொண்டு சென்றே
எல்லையிற் சேர்ப்பவன் பாலடு வோனிவை இத்தனையும்
சொல்லையிற் பாவலன் ஓரோர் கவிசொல்லச்
[சொல்லநல்கும்
வல்லையிற் காளத்தி வாழ்வா னதுந்தொண்டை
[மண்டலமே"

என்னுஞ் செய்யுளால் விளக்கினார்.

## பாராட்டுரை

காளத்தி முதலியாரிடம் பாற்பசுவைப் பெற்ற படிக்காசுப் புலவர் தமது நன்றியறிதலை ;

" வழிமேல் விழிவைத்து வாடாமல் என்மனை யாளுமற்றோர்
பழியாமற் பிள்ளையும் பாலென்றழாமல் பசிரெனுஞ்சொல்
மொழியாமல் என்னை வரவிட்ட பாவி முசித்துச்சதை
கழியாமல் ஆஅளித் தாய்வல்ல மாநகர்க் காளத்தியே."

" நற்றோ ரணவீதி நண்ணும்வல்லைக் காளத்தி
கற்றோர் தமக்களிக்குங் கையேகை—மற்றோர்கை
வேங்கை அலகைமுகை வேட்கை பலகைநகை
காங்கை அழுகைவிழு கை."

என்னுஞ் செய்யுட்களால் வெளிப்படுத்தினர். இதன் பிறகு வல்ல மாநகர்க் காளத்தி முதலியாரும் படிக்காசுப்புலவரும் நெருங்கிய நட்பினர்களாக அமைந்து நின்றனர். படிக்காசுப் புலவர் அடிக்கடி காளத்தி முதலியாரைக் கண்டு உரையாடித் தமிழினிமையை அவருக்கு நன்கு விளக்கினர். வேறுபல புலவர்கள் காளத்தி முதலியார்மீது பாடியபாடல்களில் திருக்குறுங்குடி நம்பி என்பவர் பாடிய இரண்டு செய்யுட்கள் அடியில் வருகின்றன.

" பொரடக் கயம்பிடி என்றன் மதனும்இப் பூவையுமா
தரடக் கமுஞ்சற் றறிந்தில ளேதனைத் தாள்பணியா
முரடக் கவுடக் கெடிமண்ட லீகர் முடிபிடுங்கும்
கரடக் கடாக்களிற் றுய்வல்ல மாநகர்க் காளத்தியே."

" பள்ளமே செய்யுட் பயிரையெல்லாங் கொள்ளுமுடி
வெள்ளமே உம்மையுநாம் வென்றோமே—புள்ளலம்பும்
பொற்காவி வல்லநகர்ப் பூபதிகா ளத்தியெனும்
நற்கார் நெடுமுடியை நட்டு."

## ஓலைக்கவி

படிக்காசுப்புலவர் மாந்தை மகாசனத்தலைவருக்கு எழுதிய சீட்டுக்கவியில், காளத்தி முதலியாரையுங் குறிப்பிடுகிருர்.

"தூளிபட வேவந்த கவிவாணர்
கவியெலாம் சூறையிடு கவிஞர்சிங்கம்
துட்டநிட் டூரகவி சுப்ரதீ
பக்கவி துறைக்கெலாம் துள்ளுசேட்டு
வாளைகுதி பாய்கின்ற மாந்தைகுடி
மேவிய மகாசனத் தலைவருக்கு
மட்டுலவு சோலைக் களந்தைப்
படிக்காசு வரவிட்ட விஞ் ஞாபனம்,
காளமே கம்போல வசைபாட
யாமும்இக் காசினியில் அவதரித்தோம்
காளத்தி அப்பன்மேல் கவிதையும்
மேலுமுள கவிதையும் அறிந்ததிலையா
ஆளனும் இருக்கவே செய்தகரு
மங்களுக் கழிவுதே டுதலாகுமோ
ஆகாத காரியம் போகாது வீணிலே
அபகீர்த்தி நிலைநிற்குமே."

# கக. புதுவை ஆநந்தரங்கப் பிள்ளை

## தோற்றம்

சென்னை மாநகரைச்சேர்ந்த பிரம்பூரிலே யாதவ குலத்திலே 1709 ஆம் ஆண்டு (சர்வதாரி ஆண்டு பங்குனித் திங்கள் 21 ஆம் நாள் சனிக்கிழமை) ஆநந்த ரங்கப்பிள்ளை பிறந்தார். இவருடைய தந்தையார் பெயர் திருவேங்கடப்பிள்ளை.

## புதுச்சேரிக்குக் குடியேறுதல்

திருவேங்கடப் பிள்ளையின் மைத்துனராகிய நைனியப்ப பிள்ளை என்பவர் புதுச்சேரியிலே தங்கியிருந்தார். அவருடைய விருப்பப்படி திருவேங்கடப் பிள்ளையும் தம்முடைய குடும்பத்தாரோடுபுதுச்சேரிக்குக் குடியேறினர். குடியேறியவர் அங்கு மக்களுக்கு நன்மைகள் பலசெய்தார். அதனல் மக்களுடைய அன்பையும் ஆதரவையும் பெற்றவரானர். இவருடைய உதவியைப் பெற்ருல் தமது வாணிகம் நன்கு சிறந்து வளரும் என்று எண்ணிய பிரஞ்சுக்காரர்கள் இவரைத் தமது வாணிகத்திற்குத் தரகராக ஏற்படுத்தினர்கள். இவருடைய வேலை நாட்டுமக்களுக்கும் பிரஞ்சுக்காரருக்கும் இடையேநின்று வாணிகப் பெருக்கத்திற்கு ஆவன செய்தலாகும். சிறிது காலத்திற்குப்பின் தரகு வேலையை நீக்கிக் கிழக்கிந்தியக் கம்பெனியாரின் திவான் வேலையைக் கொடுத்தார்கள்.

## ஆநந்தரங்கப் பிள்ளை

ஆண்டுகள் சில சென்றன. திருவேங்கடப் பிள்ளை காலமானார். 1747 ஆம் ஆண்டில் ஆநந்தரங்கப் பிள்ளை திவான் அலுவலை மேற்கொண்டார். இவர் தம் முடைய தந்தையார் திவானாக இருந்தபோதே அவருக்கு உதவியாக இருந்து திவான் வேலையை நன்கு பழகியிருந்தபடியால், அவ்வேலையைத் திறமை யாகவும் எளிதாகவும் பார்த்தார். பிரஞ்சுக்காரர்களுக்கு உண்மையாளராக நடந்து அவர்களுடைய நம்பிக் கைக்கு உரியவரானார். பிரஞ்சு ஆட்சியாளர்களுக்கும் இந்தியச் சிற்றரசர்களுக்கும் மனவேறுபாடு ஏற்பட்ட சமயங்களிலெல்லாம் அவ்வேறுபாட்டை நீக்குவதற்கு உறுதுணையாக அமைந்து நின்றார். பிரஞ்சுக்காரர் களின் ஆட்சிக்குப் பெருந்துணையாக அமைந்து நின்ற இவர் அவர்களால் உயர்ந்த பட்டங்களைப் பெற்றார். பிறகு செங்கற்பட்டுக் கோட்டைக்குத் தளபதியாகவும் செங்கற்பட்டு மாவட்டம் முழுமைக்கும் சாகீர்தார் ஆகவும் ஏற்படுத்தப்பட்டார். இவற்றால் இவருடைய பெருமை மிகவுஞ் சிறந்து விளங்குவதாயிற்று.

## பிள்ளையுங் கவர்னரும்

அந்நாளில் புதுச்சேரியிற் கவர்னராக இருந்த டியூப்ளே என்பவர் ஆநந்தரங்கப் பிள்ளையை புதுச் சேரியில் வாழ்ந்த இந்தியமக்களின் தலைவராக ஏற்படுத் தினார். அக்காலத்தில் மற்றவர்கட்கு இல்லாத உரிமை கள் பல ஆநந்தரங்கப்பிள்ளைக்கு உண்டாயின. கவர்னர் நாள்தோறும் ஆநந்தரங்கரை அழைத்து நாட்டு நட வடிக்கைகளையும் அரசியல் நிகழ்ச்சிகளையும் உசாவுவார். ஊரில் நேரும் வழக்குக்களை உசாவி முடிவுகூறும் நீதிக்

தலைவர் வேலையையும் இவரே மேற்கொண்டிருந்தார். அரசியல் செய்திகள் யாவற்றையும் ஆநந்தரங்கர் ஒருவர்தாம் அறிந்து அதற்காவன புரியும் ஆற்றலுடையவராக விளங்கினர். பிரஞ்சுக் கவர்னருக்கு உள்நாட்டு அமைச்சரைப் போலவும் வெளிநாட்டு அமைச்சரைப் போலவும் அமைந்திருந்த இவருடைய உதவி யில்லாமல் பிரஞ்சுக்கவர்னர் எக்காரியத்தையுஞ் செய்ய முடியாதவராக இருந்தார். மேலும் இவர் நோக்கத்திற்கு மாறுபாடாக நடப்பின் மக்கள் குழப்பம் உண்டாகச்செய்தாலும் செய்வார்களோ என்னும் அச்சமும் கவர்னருக்கு ஏற்பட்டிருந்தது. அந்நாளில் புதுச்சேரியில் வழங்கிய நாணயங்களை அச்சடிக்கும் தங்கசாலையின் பொறுப்பும் ஆநந்தரங்கரிடமே யிருந்தது. மற்றும் அந்நாளில் நிகழ்ந்த போர்கட்குப் படைதிரட்டுதல், படைத்தலைவர்களை ஏற்படுத்துதல், போரைப்பற்றிய சூழ்ச்சித்திறன்களைப் புகலுதல், போர் நிகழுங் காலங்களில் போர் நடவடிக்கைகளை மேற் பார்த்தல், இன்றியமையாத உதவிகளைச் செய்தல் முதலிய எல்லாச் செயல்களும் ஆநந்தரங்கப் பிள்ளையினுடைய பொறுப்பாகவே யிருந்தன. சில ஊர்களின் ஆட்சிப் பொறுப்புஞ் சிலகாலம் ஆநந்தரங்கரின் ஆட்சியின்கீழ் இருந்தது.

## பொருள்வளம்

ஆநந்தரங்கர் அரசியல் அலுவல்களோடு அமைதி பெற்று விடவில்லை வாணிகத்தையும் மேற்கொண்டிருந்தார். இரண்டொரு கப்பல்களையும் வைத்திருந்தார். பாக்கு வாணிகத்தைத் தொடங்கிப் பாக்குக்களை மிகுதியாக வாங்கி விற்பனை செய்துவந்தார். இவைகளாலும், பிரஞ்சுக்காரருக்குத் துணிமணிகளை வாங்கி

யனுப்பித் துணிவணிகஞ் செய்துவந்தபடியாலும், புதுச்சேரியைச் சூழ்ந்த பல சிற்றூர்களிலும் சாயத் தொழிற்சாலைகள் ஏற்படுத்தி நடத்திவந்தபடியாலும் அவருக்குப் பெரும்பொருள் கிடைத்தது. பிரஞ்சுக்காரர் களிடமிருந்து தரகு வேலையின் பொருட்டும் பெரும் பொருள் கிடைத்தது. நெசவுத் தொழிற்சாலைகள் பல வற்றைத் தம்மேற்பார்வையில் ஏற்படுத்தி நடத்தினர். இதனாலும் அளவற்ற பொருள் குவிந்தது. மேலும் பிரஞ்சுக்காரர்கள் பல ஊர்களின் ஆட்சிப்பொறுப்பை ஆநந்தரங்கரிடம் ஒப்புவித்திருந்தார்கள். காரைக்காலும் அதனைச் சேர்ந்த ஊர்கள் பலவும் ஒரு சமயம் இவ ருடைய பொறுப்பில் இருந்தன. புதுச்சேரிப் பக்கத்தி லும் பல சிற்றூர்கள் இவருடைய பொறுப்பில் இருந் தன. வரிவசூல் முதலியன இவருடைய மேற்பார்வை யிலேயே இருந்தன. அவ்வூர்களின் வருமானத்தின் ஒரு பகுதி இவருக்குக் கிடைத்தது.

## நிலங்கள்

ஆநந்தரங்கர் நன்செய் நிலங்களையும் புன்செய் நிலங்களையும் மிகுதியாக வாங்கி வைத்திருந்தார். சில சிற்றூர்கள் முழுமையுமே அவருக்கு உரிமையாக அமைந்திருந்தன. பிள்ளைசாவடி, பிள்ளைதோட்டம், முரட்டாண்டி சாவடி, வேங்கடம்மாப்பேட்டை, ஆய் குப்பம், சேதுராப்பட்டு என்பன அவற்றுள் முக்கிய மானவைகள். செங்கற்பட்டும் ஒரு காலத்தில் அவருக்கு உரிமையாக இருந்தது. இவ்வாறு எல்லாத் தொழில் துறைகளிலும் புகுந்து பொருள் திரட்டத் தொடங்கிய ஆநந்தரங்கர் அளவற்ற பொருள்களைக் குவித்தார் என்பதில் வியப்பொன்றும் இல்லை.

## வீடுவாசல்கள்

ஆநந்தரங்கர் எல்லாத்துறைகளினும் புகுந்து பொருளைத் தேடித் திரட்டிக் குவித்ததற்கு ஏற்ப வாழ்க்கை முறைகளையும் மேற்கொண்டார். கண்டார் வியக்குமாறு மிகப்பெரிய இல்லத்தைத் தாம் குடியிருத்தற் பொருட்டுக் கட்டினர். அவ்வில்லம் அவருடைய செல்வச் சிறப்புக்கு ஏற்றவாறு எல்லா நலங்களும் அமையப் பெற்று விளங்கியது. தாம் வெளியே புறப்படுவதற்காகப் பல்லக்கு, யானை, குதிரை முதலிய ஊர்திகளை அக்கால வழக்கப்படி வைத்திருந்தார். (இக்காலமாக இருப்பின், பக்கத்து ஊர்களுக்கும் உள்ளூரிலும் செல்வதற்குப் பல மோட்டார் வண்டிகளையும் சில ஏரோப்பிளான்களையும் உடையவராக இருப்பார்.) கவர்னரிடஞ் செல்லும்பொழுது பல்லக்கிற் செல்வார். ஊருக்கு வெளியே போவதானல் குதிரை மீது செல்வார். நெடுந்தொலே போகவேண்டியதாக ஏற்பட்டால் யானைமீது செல்வார். இவர் தமது வீட்டில் நிகழ்ந்த திருமணம் முதலிய சிறப்புக்களைத் தம் செல்வ நிலைமைக்குத் தக்கவாறு கணக்கற்ற பொருள்களைச் செலவிட்டு நடத்தினர்.

## தருமங்கள்

செல்வர்களில் ஒரு வகுப்பினர், தாம் நுகர வேண்டிய இன்பங்கள் எல்லாவற்றையும் அளவின்றி நுகர்ந்த பின் அதற்குமேலே யாதுசெய்வதென் றறியாமல் அறஞ் செய்யத் தொடங்குகின்றனர். மற்ருெரு வகுப்பினரோ பெரும் பொருளைத்தேடிக் குவித்ததும் முன்னதாகவே ஒருபகுதியைத் தருமச் செயல்களுக்கு என்று பிரித்து ஒதுக்கி விடுகின்றனர். இன்னொரு வகையார் ஏழை

எளியவர்களுடைய அல்லல் பொறுக்காமலும்கட்டாயத் தின்மீதும் அறஞ்செய்யத் தொடங்குகின்றனர், அறம் புரிதலாலும் இன்பமுண்டாகும் என்னுஞ் செய்தி பிறகு தான் அவர்களுக்கு விளங்குகின்றது. அதன் பிறகு மிகுதியாக அறஞ்செய்யத்தொடங்குகின்றார்கள். ஆநந்த ரங்கர் கல்வி கற்ற நல்லறிவாளராகையால் பொதுமக் களுக்குப் பயன்படுமாறு அறம்பல புரிதல் வேண்டும்; செய்யும் அறங்கள்தாம் உயிரைப் பற்றித்தொடர்ந்து நன்மை விளைவிக்கக்கூடியது என்றுஉணர்ந்தார். அறச் செயல்கள் பலவற்றை மேற்கொள்ளத் தொடங்கினர்.

## அறச்சாலைகள்

புதுவையில் இருந்து சென்னை முதலிய பல ஊர்களுக்குச் செல்லும் வழிகளிலே அறச்சாலைகள் பல வற்றை ஏற்படுத்தி அவைகளில் வழிப்போக்கர்கள் ஒருநாளைக்குத் தங்கி ஓய்வு பெறுதற்கும் உணவு பெறு தற்கும் ஏற்பாடு செய்தார். 'புகைவண்டி' மோட்டார் வண்டி, முதலிய ஊர்திகள் இல்லாத அக்காலத்திலே கால்நடையாக நடந்து செல்பவர்களின் எண்ணிக்கை மிகுதியாகும். அந்நாளில் ஆநந்தரங்கரின் அறச் சாலைகள் மக்களுக்குப் பேருதவியாக அமைந்து நின்றன என்பதை நாம் இங்கு எடுத்துக்கூற வேண் டியதில்லை. ஆநந்தரங்கரின் அறச்சாலைகளில் ஒன்று புதுச்சேரி திண்டிவனம் பாதையில் அமைந்திருந்தது. மற்றொன்று பிள்ளைசாவடி என்னும் சிற்றூரில் இருந்தது.

## கோவில் திருப்பணிகள்

ஆநந்தரங்கர் ஆயர்குலத்தினராகலின் வேணு கோபாலனிடத்துப் பேரன்பு கொண்டவர். வேணுகோ

பாலருக்குக் கோவில் ஒன்று அமைத்து நாள்வழிபாடு முதலியன சிறப்பாக நடைபெறுதற்கு ஏற்பாடு செய்திருந்தார். மற்றும் புதுச்சேரியில் உள்ள சில பெருமாள் கோவில்களுக்குக் கட்டளைகள் ஏற்படுத்தி அக்கட்டளைகள் தொடர்ந்து நடைபெறுவதற்கும் ஏற்பாடு செய்தார்.

## பாவாணர்கட்குப் பரிசு

ஆநந்தரங்கர் காலத்திலே பாவாணர்கள் பலர் இருந்தனர். அவர்கட்குப் பரிசில்வாழ்க்கையே பிழைப்புக்குரிய தொழிலாக இருந்தது. செல்வர்களிடம் பரிசு கிடைக்காத காலங்களில் அவர்கள் வறுமைக் கொடுமையால் பெருந்துன்பத்திற் குள்ளாயினர். ஆநந்தரங்கர் அரசியல் துறையில் ஈடுபட்டவராகலின் பல மொழிகளைக் கற்றறிந்திருந்தார். இவருக்குத் தமிழ்மொழி தான் தாய்மொழி. தமிழ்மொழியிற் பற்று மிகுதியாக உண்டு. தமிழ்நூல்களை நன்ருகப் படித்தவர்களைக் கண்டால் மிகுந்த அன்புடன் உரையாடுவார். நன்கொடையும் வழங்கி யனுப்புவார். புலவர்கள்பலர் ஆநந்தரங்கர் மீது பாக்கள் பல பாடிச் சென்று பரிசு பெற்றனர். நூல்கள் சில இவருடைய அவைக்களத்திலே அரங்கேற்றப் பெற்றதாகவும் தெரிகிறது. சீகாழி அருணசலக் கவிராயர் என்பவர் இயற்றிய இராமநாடகம் இவர் முன்பும் படிக்கப்பட்டதாகத் தெரிகிறது. அறிஞர்களைக் காப்பாற்ற வேண்டும் என்னும் எண்ணங் கொண்ட இவர் புலவர்களின் புலமைக்கும் பெருமைக்கும் ஏற்றவாறு பொருள் வழங்கினர். நாளடைவில் ஆநந்தரங்கருடைய பெயர் நாடு முழுவதும் பரவிவிட்டது. புலவர்கள் ஆநந்த

ரங்கரிடம் மிகுதியாக வரத் தொடங்கினர். ஆநந்த ரங்கர் சிறிதுஞ் சலிக்காமல் வழங்கி வள்ளல் என்னும் பெயரும் பெற்றார்.

## இராமகவிராயர்

இராம கவிராயர் என்னும் புலவர் ஒருவர் அந் நாளில் வறுமையால் மிகுந்த துன்பப்பட்டார். ஆநந்த ரங்கப் பிள்ளை சிறந்த கொடையாளராக விளங்குகிறார் என்னுஞ் செய்தி அவருக்கு எட்டியது. ஆநந்தரங் கரைப் பார்த்துப் பரிசுபெறலாம் என்று எண்ணினர். புறப்பட்டுப் பட்டினியும் பசியுமாக வழிநடையை மேற் கொண்டு புதுச்சேரியை அடைந்தார். புலவர் சென்ற பொழுது ஆநந்தரங்கர் வீட்டில் இல்லை. "எங்கே சென்றுளார்?" என்று வீட்டில் இருந்தவர்களிடம் உசாவினர். அறுவடை நடைபெறுவதால் வயலுக்குச் சென்றுளார் என்று தெரிந்தது. புலவர்க்கோ அளவு கடந்த பசி பசியுடன் வயலுக்குச் சென்றார். அறு வடை வேலை நடைபெற்றுக்கொண்டிருந்தது. வயலில் இறைந்து கிடந்த நெற்களை ஆநந்தரங்கர் பொறுக்கிக் கொண்டிருந்தார். அவர் நெற்களைப் பொறுக்கிக் கொண்டிருத்தலைக்கண்ட இராம கவிராயர் மிகுந்த வியப்படைந்தார். பெருங் கொடையாள ரென்று எல் லோருஞ் சொல்லுகிறார்கள்; இவரோ வயலில் இறைந்து கிடக்கும் நெற்களைப் பொறுக்கிக் கொண்டி ருக்கிறாரே என்று எண்ணமிட்டார். பிறகு ஆநந்தரங் கரைப் பார்த்துத் தமது வறுமைக் கொடுமைகளை யெல்லாம் விரித்துரைத்தார் ஆநந்தரங்கர் எல்லா வற்றையுங் கேட்டார். "சரி, இரும் போவோம்" என்று

கூறிவிட்டு மேலும் நெல் பொறுக்குவதிலேயே கண்ணுங் கருத்துமாக இருந்தார்.

## ஏன் பறக்கிறீர் ?

புலவருக்கோ பசி பொறுக்க முடியவில்லை அவர் ஆநந்தரங்கரைப் பார்த்து, "என்ன புறப்படமாட்டீர் களா!" என்றார். உடனே ஆநந்தரங்கர், "ஏன் பறக் கிறீர்?" என்று கேட்டார். புலவருடைய பசிக்கொடுமை புலவருக்குத்தானே தெரியும். ஆநந்தரங்கர் ஏன் பறக் கிறீர் என்று கூறியதைக்கேட்டவுடனே அவரிடமிருந்து பாட்டொன்று புறப்பட்டது. அவர் ஆநந்தரங்கரைப் பார்த்து,

"கொக்குப் பறக்கும் புறுப்பறக்கும்
　　குருவி பறக்கும் குயில்பறக்கும்
நக்குப் பொறுக்கி களும்பறப்பர்
　　நானேன் பறப்பேன் நராதிபனே
திக்கு விசயஞ் செலுத்தியுயர்
　　செங்கோல் நடாத்தும் அரங்காநின்
பக்கம் இருக்க ஒருகாலும்
　　பறவேன் பறவேன் பறவேனே."

என்று ஒரு செய்யுளைப் பாடினார். இதனைக் கேட்டு ஆநந்தரங்கர் மிகுந்த வியப்படைந்தார். பிறகு புல வரை அழைத்துக்கொண்டு தம்முடைய வீட்டிற்குப் புறப்பட்டார். சமையற்காரனை அழைத்து விரைவாகப் புலவருக்கு உணவளிக்குமாறு கட்டளையிட்டார். சமை யற்காரன இலைபோட்டுவிட்டுச் சோறு எடுத்துக் கொண்டுவரச் சென்றான். ஆநந்தரங்கர் ஒரு தட்டு நிறையத் தங்கக் காசுகளை அள்ளிக் கொண்டுவந்தார்.

அவைகளைப் புலவரின இலையிற் கொட்டினர். இதனைப்பார்த்த புலவர் திடுக்கிட்டார். ஒன்றும் விளங்காமல் விழித்தார். மாறிமாறி ஆநந்தரங்கருடைய முகத்தைப் பார்த்தார்.

## நெல்லின் அருமை

புலவரின் திகைப்பைக் கண்ட ஆநந்தரங்கர், "புலவரே! ஏன் சும்மா உட்கார்ந்திருக்கிறீர்? தங்கக் காசுகளை அள்ளிச் சாப்பிடுங்கள். நம்மிடந்தங்கக் காசுகள் இருப்பினும் அதனுல் என்ன பலன் ஏற்படும்? நெல்மணியன்றே நம்முடைய பசியைத் தீர்க்கும் மாண்புடையது. நான் பொன்மணிகளைவிட நென்மணிகளின் சிறப்பையுணர்ந்துதான ஒரு நெனமணிகூட வீணுகப் போகாவண்ணம் பொறுக்கித் தொகுக்கும் வழக்கத்தை மேற்கொண்டிருக்கிறேன்." என்று கூறினர். பிறகு பொன்மணி போட்ட இலையை அப்பால் இழுத்து விட்டு வேறு இலையைப் போட்டு உணவுகளைப் பரிமாறச் சொன்னர். புலவர் சாப்பிட்டு எழுந்தபிறகு இலையில் பரிமாறப் பட்டிருந்த பொற்காசுகளையும் புலவருக்கே வழங்கி அவரை அனுப்பிவைத்தார்.

## மதுரகவிராயர்

ஆநந்தரங்கர் காலத்தில் இருந்த மதுரகவிராயர் என்பவர் பரிசுபெறும் பொருட்டு நல்லசகுனங்களைப் பார்த்துக்கொண்டு புறப்பட்டார். புறப்பட்டபொழுது நல்ல சகுனமாக இருந்தது. ஆநந்தரங்கர் இல்லத்திற்குச் சென்று அவரைப் பார்த்தார். அவர்மிகுந்த மகிழ்ச்சியோடிருந்தார். உடனே இம் மதுரகவிராயர்,

" உலங்கொண்ட மணிப்புயனே! பிரம்பூரா
 னந்தரங்கா உன்பான் மேவ
வலங் கொண்ட கருடனையாம் இடங்கொண்டோம்
 எழில்நரையான் வலத்தே கண்டோம்
பொலங்கொண்ட மணிமாட மீமிசையில்
 புயல்தவழும் புதுவை யென்னும்
தலங்கண்டோம் நினதுநகை முகங்கண்டோம்
 இனிவேண்டுந் தனங்கண் டோமே"

என்னும் பாடலைப் பாடியதுடன்,

" துங்கவரை மார்பா துரை ரங்க பூபதியே
இங்கோர் புதுமை இயம்பக்கேள் – பங்கயக்கை
ஆயிழைக்கு நான்குநுதல் ஐந்துகுழை ஆறுமுலை
மாயவிழி ஏழா மதி"

(1)

" கார்படைத்த கரதலத்தான் துரைதிருவேங்
 கடமளித்த கன்று எங்கும்
பேர்படைத்த ஆநந்த ரங்கமகி
 பாலா நின் பிரம்பூர் நாட்டில்
நேரிழைக்கு விழியேழு முலையாறு
 காதைந்து நெற்றி நான்கு
பாரிடத்தில் இப்புதுமை கண்டுவந்தேன்
 இதன்பயனைப் பகர்ந்தி டாயே."

(2)

என்பன போன்ற இனிய பாடல்களைப் பாடினர்.

1. வரை-மலை. பங்கயக்கை - தாமரைமலரைப் போன்ற கை, ஆயிழை - பெண். (கன்னி) நான்குநுதல் - கன்னிக்கு நான் காவது ராசியான வில் நெற்றி; ஐந்துகுழை - ஐந்தாவது ராசியாகிய மகரம் காதணி. ஆறு முலை - ஆருவது ராசியா

கிய கும்பம் போன்றதனம். விழி ஏழு - கண்கள் ஏழாவது ராசியாகிய மீன்.

2 நேரிழை – பெண். (கன்னி) கன்னிக்கு ஏழாவது இராசி மீன், ஆருவது இராசி குடம், ஐந்தாவது ராசி மகரம், நான் காவது ராசி வில்.

இவருக்கு ஆநந்தரங்கர் பொருள், அணிகலம், ஆடை முதலியவைகளை வழங்கினர். புலவர் மகிழ் வுடன் பெற்றுச் சென்ருர்.

## இவர் பெற்றநூல்கள்

பல புலவர்களிடமிருந்தும் இவர் நூற்றுக்கணக் கான பாடல்களைத் தனித்தனியாகப் பெற்ருர். அவை களில் இரண்டொரு பாடல்கள் தனிப்பாடல் திரட்டில் காணப்பெறுகின்றன. எஞ்சியவை மறைந்து போயின போலும். "ஆநந்தரங்கக் கோவை" என்னும் பெய ருடன் இவர்மீது கோவைநூல் ஒன்றை இலக்கண விளக்கம் வைத்தியநாததேசிகர் மகன் சதாசிவ தேசிகர் இயற்றியிருப்பதாகவும், அஃது இன்னும் அச்சேற வில்லை என்றுஞ் சொல்லுகிருர்கள். இக்கோவையை அன்றி இன்னும் ஒரு கோவையும் சிறுநூல்கள் சிலவும் இருக்கின்றனவாம்.

## இறுதி

ஆநந்தரங்கர் மகிழ்ச்சியாகக் காலந்தள்ளிக் கொண்டிருந்தபடியே மேலும் இருப்பதற்கு இயல வில்லை. பிரஞ்சுக்காரர்களுக்கும் ஆங்கிலேயர்கட்கும் அடிக்கடி போர்மூண்டது. ஆங்கிலேயர்கள் பிரஞ்சுக் காரர்களோடு பெரும்போர் செய்து பலவிடங்களில் பிரஞ்சுக்காரர்களைத் தோற்கடித்தார்கள். புதுச் சேரியையுஞ் சுற்றிவளைத்துக்கொண்டு பெரும் போர்

செய்யத் தொடங்கினார்கள். வறியவர்களைவிடச் செல் வர்களுக்குத்தான் தொல்லை மிகுதியாயிற்று. ஆநந்த ரங்கர் சென்னைக்குப்போய்விட முடிவுசெய்தார். நகை பொருள் முதலியவைகளோடு மனைவியைச் சதுரங்க பட்டினத்திற்கு அனுப்பிவைத்தார். தாம் கடல்மார்க்க மாகச் சென்னையை அடைவதற்கு ஏற்பாடு செய்தார். புதுச்சேரியின் பெரும்பகுதி ஆங்கிலேயர் கையில்சிக்கி விடவே ஆநந்தரங்கருக்குத் தளர்ச்சியுங் கவலையும் மிகுதிப்பட்டன. அதனால் அவருக்கு நோயுண்டாயிற்று. எண்ணியவாறு புறப்பட்டுச் சென்னையை அடைய முடியவில்லை. 1761 ஆம் ஆண்டு சனவரித்திங்கள் பதினொன்றும்நாள் தமது ஐம்பத்திரண்டாவது அகவையில் மண்ணுலக வாழ்வை நீத்து விண்ணுலகம் சென்றார். அவர் காலமான இரண்டொரு நாட்களில் புதுச்சேரி பகைவர்களால் பிடிக்கப்பட்டு விட்டது.

## வழி முறையினர்

இப்பொழுதும் ஆநந்தரங்கருடைய இல்லம் புதுச்சேரியில் உள்ளது. அவருடைய வழிமுறையினர் சிலரும் இருப்பதாகத் தெரிகிறது. ஆநந்தரங்கரால் புதுவைப் பெருமாள்கோயில் ஒன்றில் ஏற்படுத்தப் பட்ட கட்டளை இக்காலத்திலும் நடைபெறுவதாகச் சொல்லுகிறார்கள்.

# கஉ. பச்சையப்ப முதலியார்

## தோற்றம்

தொண்டை நாட்டிலே பெரியபாளையம் என்னும் ஊரிலே பச்சையப்ப முதலியார் 1754 ஆம் ஆண்டில் பிறந்தார். இவருடைய தந்தையார் பெயர் விசுவநாத முதலியார் தாயார் பெயர் பூச்சியம்மாள்.

## காஞ்சீபுரம்

பச்சையப்ப முதலியாருடைய தந்தையாராகிய விசுவநாத முதலியார் தமது குடும்பத்துடன் காஞ்சீபுரத்திலே வாழ்ந்திருந்தார். அங்கு அவருக்குப் பெரும் பொருள் ஒன்றுமில்லை. சிறு வருவாயைக்கொண்டே விசுவநாத முதலியார் தமது குடும்பத்தைக் காப்பாற்றிக்கொடிருந் தார். அவருக்குச் சுப்பம்மாள் அச்சம்மாள் என்னும் பெயருடைய பெண்மக்கள் இருவர் தோன்றினர். பச்சையப்ப முதலியார் கருப்பத்தில் இருக்கும்போது விசுவநாத முதலியார் விண்ணகம் புகுந்தார்.

## ரெட்டிராயர்

பூச்சியம்மாள் திக்கற்றவளானார். சென்னை பெரிய பாளையத்திலே ரெட்டிராயர் என்னும் பெயரு டையவர் ஒருவர் விசுவநாத முதலியார் குடும்பத்திற்கு நெருங்கிய பழக்கமுடையவராக இருந்தார். பூச்சியம் மாள் தன்னுடைய பெண்களை அழைத்துக்கொண்டு பெரியபாளையத்திற்குச் சென்று ரெட்டிராயருடைய ஆதரவிலே தங்கியிருந்தார். அங்குத்தான் பச்சையப்ப

முதலியார் முற்கூறிய ஆண்டிற்பிறந்தார். ரெட்டிராயர் ஈகைக்குணம் அமையப் பெற்றவராக இருந்தார். பச்சையப்பன் என்னும் குழந்தையிடம் மிகுந்த அன்பு காட்டினர். பச்சையப்பரும் சுப்பம்மாள் அச்சம்மாள் ஆகியவர்களும் சிறப்போடு வளர்தற்குத் தக்க ஆதரவு காட்டினர்.

## கல்வி

பச்சையப்பருக்கு அகவை ஐந்து நிரம்பியது. அவர் தெலுங்கு தமிழ் ஆகியவைகளைக் கற்கத் தொடங்கினர். மேலுஞ் சிறிது காலம் ரெட்டிராயர் உயிரோடிருந்திருப்பாராயின் பூச்சியம்மாளுக்கும் குழந்தைகளுக்கும் மிகுந்த உதவியாய் இருந்திருக்கும். ஆனல் தெய்வத் திருவருள் வேறு விதமாக இருந்தது. திடீரென்று ரெட்டிராயர் இவ்வுலக வாழ்வைத் துறந்தார். இதனல் ரெட்டிராயருடைய குடும்பத்தினரைப் பார்க்கிலும் பூச்சியம்மாளுக்கு மிகுந்த வருத்தம் உண்டாகியது. பூச்சியம்மாள் இனிமேல் யாதுசெய்வதென்று உள்ளம் வருந்தினர். தமது சிறுபொருளையும் இழந்து தாமுந் தங்குழந்தைகளும் எங்கே தெருவில் அலையுமாறு நேரிட்டுவிடுகிறதோ என்று அவர்மிகவும் அஞ்சினர்.

## பௌனி நாராயணபிள்ளை

தன்குழந்தைகளை அழைத்துக்கொண்டு பூச்சியம்மாள் சென்னை நகரத்தை யடைந்தார். முன்பின் தெரியாத அந்த நகரத்தில் யாரை நம்புவது என்று பூச்சியம்மாளுக்குத் தெரியவில்லை. அப்பொழுது அங்கு பௌனி நாராயணபிள்ளை என்னும் பெயருடைய

நல்ல மனிதர் ஒருவர் இருந்தார். அவர் மிகுந்த செல்வர்; பெயரும் புகழும் உடையவர்; இரந்தவர் கட்கு இல்லையென்று இயம்பாதவர்; நேர்மையான சொல்லுஞ் செயலும் உடையவர். பொதுவான உலகியலுக்கு வேண்டிய அளவு ஆங்கிலமுந் தமிழுங் கற்றிருந்தார். அவர் வணிகத்தொழிலை மேற்கொண்டிருந்தார். ஆங்கில வணிகர்கட்கும் உள்நாட்டு வணிகர்கட்கும் நடுவே மிகத்திறமைவாய்ந்த இருமொழிப் பேச்சாளராக இருந்தார். இதனால் அவர் அளவுகடந்த பொருள் தேடினார். இவருக்கிருந்த ஆங்கில உணர்ச்சி அக்காலத்தில் இருந்த பெரியதுரைகளுடனெல்லாம் பழகுவதற்கு மிகுந்த உதவியாக இருந்தது. அவர் பலருக்கு வேலைமுதலியன தேடிக்கொடுத்து உதவி செய்தார்.

## நாராயண பிள்ளையின் ஆதரவு

நாராயணபிள்ளை பௌனி என்னும் துரைக்கும் அவருக்குப்பின் அவருடைய மனைவிக்கும் இருமொழிப் பேச்சாளராக இருந்து மிகுந்த பொருள் தேடினார். அறவழிகளிலும் அவர் தமது செல்வத்தைத் தக்கவாறு செலவிட்டார். நாராயண பிள்ளையின் பெருந்தன்மைகளைப்பற்றி நன்கு கேள்வியுற்ற பூச்சியம்மாள் தம்மக்களுடன் போய் நாராயணபிள்ளையைப் பார்த்தார். பூச்சியம்மாளைத் தம்முடன் பிறந்தாளைப் போல் நடத்தினார். பூச்சியம்மாள் கொடுத்த அவருடைய பொருளைப் பாதுகாத்துப் பெருக்கினார். பச்சைப்ப முதலியாருக்குக் கல்வி கற்பித்தார். பச்சையப்பர்மீது நாராயண பிள்ளைக்கு மிகுந்த அன்பும் ஆதரவும் நாள் தோறும் வளர்ந்து கொண்டு வந்தது. பச்சையப்பரும்

நாராயணபிள்ளையிடம் அன்பாகவும் பணிவாகவும் நடந்துகொண்டார். இருவரும் மிகுந்த ஒற்றுமையோடு நெருங்கிப் பழகினார்கள். இதனால் நாராயண பிள்ளையுடைய வணிகத்தொழில் நுட்பங்களும் இருமொழிப் பேச்சு முறைகளும் பச்சையப்பருக்கும் அமைவதற்கு ஏதுவாகஇருந்தது. பச்சையப்பர்பின்னர் முன்னுக்கு வருவதற்கும் மிகுந்த பொருள் தேடுவதற்கும் நாராயண பிள்ளையின் கூட்டுறவே காரணமாக இருந்தது.

## தமக்கையர்

பச்சையப்பருடைய பெரியதமக்கையாகிய சுப்பம்மாள் புங்கத்தூர்த்தெய்வநாயகமுதலியார் என்பவரைத் திருமணஞ்செய்துகொண்டாள். அவளுக்கு அய்யாளம்மாள் என்னும் பெயருடைய மகளொருத்தி பிறந்தாள். சுப்பம்மாள்தன்னுடைய மகளையும் அழைத்துக்கொண்டு சிறிது பொருளோடு தாய்வீடு வந்துசேர்ந்தாள். சிறிய தமக்கையாகிய அச்சம்மாள் கூடலூர்த் தெய்வநாயக முதலியார் என்பவரை மணந்து முத்தைய முதலி என்னும் மகனைப்பெற்றுவிட்டு விண்ணுலகம் அடைந்தாள்.

## பொருள் தேடுதல்

நாராயணபிள்ளை பச்சையப்ப முதலியாரை இளமைப் பருவத்திலேயே நன்னிலைக்குக் கொண்டு வரத்தொடங்கினார். அக்காலத்தில் சென்னையில் பீங்கான்கடை ஒன்றிருந்தது. வணிகர்கள் பிறநாட்டுப் பொருள்களை அங்கே கொண்டுவந்து சில்லரையில் விற்பது வழக்கம். சாமான் வாங்குவதற்கு அவ்விடத்திற்குப் பல ஐரோப்பியர்கள் வருவார்கள். அந்தஐரோப்

பியர்களுக்கும் கடைக்காரர்களுக்கும் பச்சையப்பர் இரு மொழிப் பேச்சாளராக அமர்ந்து தரகுவேலை செய்யத் தொடங்கினர். முதலியார் நன்னடக்கையும் இனிமை யாக உரையாடுதலும் உள்ளவராக இருந்தார். இவை கள் இவரை எல்லோரும் விரும்புமாறு செய்தன. தமிழ் மொழியைத்தாய் மொழியாகஉடைய முதலியார்தெலுங் கிலும் ஆங்கிலத்திலும் கற்றது சிறிதே. அந்தப் பயிற் சியும் இலக்கண இலக்கியப் பயிற்சியோடு பொருந்திய ஆழ்ந்த பயிற்சியன்று எழுதப்படிக்கத் தெரிந்திருந்தார் என்று சொல்லலாம். முதலியார் மிக நுண்ணறிவு அமையப் பெற்றவர். இயற்கையறிவின் நலத்தி னலேயே அவர் பெரும்பொருள் திரட்டினர்.

## இளமையிலேயே அறம்

பீங்கான்கடைத் தரகுவேலையால் முதலியார் பொருள் தேடத்தொடங்கியவுடன், ஏழை எளியவர் களுக்குத் தம்மாலான உதவிசெய்து அறவழிகளினுஞ் செலவு செய்யத் தொடங்கினர். அவ்வாறு செய்தது போக எஞ்சியதைத் தம் தாயாரிடங்கொடுத்து வந்தார். தமது குடும்பத்திற்குத் தந்தையைப் போலிருந்து உதவி செய்த பௌனி நாராயணபிள்ளையிடம் மிகுந்த அன்பும் பணிவும் உடையவராக இருந்தார். நிக்கலஸ் துரை என்பவரிடம் சிறிதுகாலம் இருமொழிப் பேச் சாளராக அமர்ந்து சிறிது பொருள் தேடினர். பலவழி களினும் பச்சையப்பருக்குச் சிறிது சிறிதாகப் பொருள் சேரத் தொடங்கியது.

## திருமணம்

பச்சையப்பர் திருமணப் பருவத்தை அடைந்தார். திருமணத்திற்கு வெளியிலே பெண் தேடவேண்டிய

வேலை இல்லாமற் போய்விட்டது. பச்சையப்பருடைய தமக்கையார் மகள் அய்யாளம்மாள் என்பவளையே பச்சையப்பருக்குத் திருமணஞ் செய்வதென்று முடிவாயிற்று. அப்பெண் தன் தாயுடன் தன்னுடைய மாமனாராகிய பச்சையப்பருடைய இல்லத்திற்கு வந்து சேர்ந்த செய்தி முன்னரே கூறப்பட்டிருக்கிறது. திருமணம் மிகுந்த பொருட்செலவும் ஆடம்பரமும் இல்லாமல் எளிய முறையிலேயே நடத்தப்பட்டது. இக்காலத்திலேயே பச்சையப்பர் பணக்காரராக இருந்தும் வீண் செலவுகளில் பொருளைச் செலவிட விரும்பவில்லை.

## முதலாவது நல்லறம்

இல்லற வாழ்வில் புகுந்த பச்சையப்பர் நல்லறம் ஒன்றை உடனே செய்யத்தொடங்கினர். தமது ஊரான காஞ்சி ஏகாம்பரேசுவரர் கோயிலில் சிவகாமியம்மை, பலிநாயகர் என்னும் இரண்டு செப்பு விக்கிரகங்களைச்செய்து அமைத்து 1774 ஆம் ஆண்டு மார்ச்சுத் திங்கள் 27 ஆம் நாள் மிகச்சிறப்புடன் குடமுழுக்குச் செய்வித்தார். அன்றே அக்கோயிலில் பங்குனி உத்தரத் திருமண மண்டபம் ஒன்று கட்டுவதற்கு அடிப்படைக்கல் நாட்டித் திருப்பணி தொடங்கினர். பிறகு இத்திருப்பணி நிறைவேற்றப்பட்டது.

## பெரும் பொருள் தேடுதல்

பசசையப்ப முதலியார் காலம் ஆநந்தரங்கப் பிள்ளையின் காலத்தைப் போல் அரசியல் கொந்தளிப்பு மிகுந்த காலமாயிருந்தது. முகமதிய அரசர்களும் ஆங்கிலேயர்களும் பலவிடங்களிலும் மாறுபட்டு

நின்றார்கள். ஆயினும் பச்சையப்பர் தமது வேலையைக் கண்ணுங் கருத்துமாகப் பார்த்துக் கொண்டிருந்தார். இருமொழிப் பேச்சாளராக அமைந்து நின்று பொருள் தேடியதல்லாமல், வேறு சிலரையுந் துணைசேர்த்துக் கொண்டு அரசாட்சியாளருடைய மேல்வாரநெல் முதலானவைகளைக் குத்தகை யெடுத்தலையும் மேற் கொண்டார். மற்றும் அவ்வச் சமயங்கட்கு ஏற்றவாறு தொழில் புரிதலையும் மேற்கொண்டார். இவைகளால் முதலியார் அளவுகடந்த பொருளைத் தேடிக்குவித்தார். அந்நாளில் பல குறுநில மன்னர்களும் பாளையக்காரர் களும் இருந்தார்கள். அவர்கள் மிகுந்த கொடுமை யுடையவர்களாக இருந்தார்கள். அத்தகையோர் பச்சை யப்பமுதலியாருக்கு நண்பர்களாக இருந்தார்கள். அவர் களுக்கு ஆகவேண்டிய காரியங்கள் பலவற்றையுங்கூட முதலியார் முன்னின்று முடித்துக் கொடுத்தார். மேலும் அவர்களுக்கு வேண்டிய பொருளுதவியைக் கூடத் தக்க சமயத்திற் செய்து பிறகு அவர்களால் நல்ல ஊதி யத்தை அடைந்தார். தஞ்சையரசர் ஆங்கிலக் கம்பெனி யார்கட்கு ஆண்டுதோறும் பணங் கொடுக்கவேண்டியவ ராக இருந்தார். செலுத்த வேண்டிய தொகையைத் தம் நாட்டு நாணயங்களாகவும், பூவராகன்களாகவும் உண்டியல் களாகவும் அவர் கொடுத்துக்கொண்டிரு ந்தார். அதனால் பலவகையானதொல்லைகள் ஏற்பட்டுக் கொண்டிருந்தன. பச்சையப்பர் பல வகையான தென்னாட்டு நாணயங்களைப் பெற்றுக்கொண்டு அவை கட்குப் பதிலாகப் பூவராகன்களும் உண்டியல்களும் கொடுத்துக்கொண்டு வந்தார். இதனாலும் நல்ல ஊதியங் கிடைத்தது. முதலியார் தாம் தேடியபொருள் களைத் தென்னாட்டிலிருந்து உடனுக்குடன்தக்கவாறுகச்

சென்னையில் இருந்த பௌனி நாராயணபிள்ளைக்கு அனுப்பி விடுவது வழக்கமாக இருந்தது. பெருந் தொகைகளுக்கு அவர் உண்டிகள் எழுதுவதும் உண்டு. இவ்வாறு முதலியார் தமது பெருந்திறமையாலும் நுண்ணறிவினாலும் அளவற்ற பொருள்களைத் திரட்டினார். தஞ்சையில் நல்ல மெத்தைவீடு ஒன்று கட்டிக் கொண்டு அதில் நலத்துடன் வாழ்ந்திருந்தார்.

## பச்சையப்பரின் குணநலன்கள்

பச்சையப்பர் இயற்கையாகவே அருள் உள்ளம் படைத்தவர். சூது வாது முதலிய தீக்குணங்கள் அவரிடம் அணுவும் இல்லை. பொறாமை வஞ்சனை முதலியவைகளைக் கனவினும்எண்ணார். பிறர் பொருளையும் சிறிதும் விரும்பார் கனவிலும் எண்ணார். விடத்தொன்று பேசமாட்டார். எத்தகையோருக்குந் தீமைசெய்ய மாட்டார். பெரும்பாலும் எல்லோரிடமும் இன்சொலாகவே உரையாடுவார். சில சமயங்கள் சினம் மட்டும் முதலியாருக்கு உண்டாகும். பெரியோர், சிறியோர், அனைவோரிடத்திலும் பணிவாகவே பேசுவார். தம்மிடம் உதவியை எதிர்பார்ப்பவர்களின் தன்மையைச்சீர்தூக்கிப் பார்ப்பார். செய்யவேண்டியது இன்றியமையாத தென்று கண்டால் உடனே செய்வார். தம் பகைவர்கட்கு நன்மை செய்தலை முதலியார் பெரிதும் விரும்பினார். நன்மையினால் பகையைப் போக்கிக் கொள்ளலாம் என்பது அவருடைய எண்ணம். மூடத்தனமான பழக்கவழக்கங்கள் பலவற்றை முதலியார் அடியோடு வெறுத்தார். திருமணங்களில் விலை மகளிரை ஆடச்செய்தல், சாவுவீட்டில் பெண்பிள்ளைகள் ஒப்பாரிவைத்து இழவெடுத்தல்

முதலியவைகளை முதலியார் வெறுத்தார். செத்துக் கிடக்கும் பிணத்தருகே இனிச் சாம்பிணங்கள் கத்திக்கதற வேண்டியது இல்லையென்பது முதலியாருடைய திடமான எண்ணம். பட்டினத்தடிகள் முதலிய மெய்யறிவாளர்களும் இத்தகைய செயல்களைக் கண்டித்திருக்கிறார்கள்.

## இரண்டாவது மணம்

பெருஞ் செல்வர்கட்கு மக்கட்பேறு உண்டாவது அருமை. பச்சையப்பருக்கும் நீண்டநாள் மக்கட் பேறு உண்டாகவில்லை. மக்கட்பேற்றைக் கருதிப் பச்சையப்பர் மறுமணம் செய்துகொள்ள எண்ணினார். திருமறைக் காட்டில் இருந்த சோழிய வேளாளர் ஒருவருடைய பெண்ணாகிய பழனியாயி அம்மாள் என்பவளை இரண்டாவது மனைவியாகத் திருமணஞ் செய்து கொண்டார். இப்பெண்ணின் வயிற்றில் பொன்னாயி என்னும் பெயருடைய பெண் குழந்தை ஒன்றுபிறந்தது. ஆண்குழந்தையை அவாவுடன் எதிர்பார்த்திருந்த பச்சையப்பர் பெண்குழந்தை பிறந்ததைக் கண்டு ஏமாற்றம் அடைந்தார்.

## கவர்னர் சூழ்ச்சி

பச்சையப்பர் தஞ்சையில் தங்கியிருந்தபோது அமர்சிங்கு என்னும் பெயருடையவர் தஞ்சையரசராக அரியணையேறினார். இதன்பிறகு முதலியார் சில வேலைகளை முன்னிட்டுச் சென்னைக்குச் சென்றார். அந்நாளில் சென்னையில் ஆர்சபெல் காமத் என்னும் பெயருடையவர் சென்னைக் கவர்னராக இருந்தார். பச்சையப்ப முதலியார் சென்னைக்கு வந்திருந்தலை

யுணர்ந்த கவர்னர் முதலியாரைத் தம்மிடம் அழைப் பித்து நன்கு வரவேற்ருர். கவர்னர்கள் அரசர்கள் முதலிய பெருஞ்செல்வர்களிடமெல்லாம் பச்சையப்பர் தாராளமாகவும் சமமாகவும் பழகும் இயல்புடையவர். அவர்கள் இவருடைய தகுதியையுஞ் சிறப்பையும் பொருள்வளத்தையும் நன்ருக அறிந்தார்கள். சென்னைக் கவர்னர் முதலியாரை வரவேற்றுப் போற்றி அளவளாவினுர். பிறகு அவர் பச்சையப்பரைப்பார்த் துத் "தங்களுக்குஅதிகாரம் கொடுக்கிருேம். தஞ்சாவூர்ச் சாகுபடி வருமானங்களை யெல்லாம் நீங்கள் வாங்கி ஆங்கில அரசாங்கத்திற்குப் பணஞ் செலுத்தும் பொறுப்பை ஏற்றுக்கொள்ள வேண்டும் என்று வற் புறுத்திப் பெரிதும் வேண்டிக்கொண்டார். தஞ்சாவூர் அரசரிடமிருந்து நேரே வரிப்பொருளைப் பெறுவது ஆங்கில அரசினருக்குப் பெருந்தொல்லையாக இருந்தது. எப்படியாயினும் தஞ்சைவரிப் பொருளை வாங்கிவிட வேண்டுமென்றுதான் கவர்னர் பச்சையப் பரைப் பிடித்து இந்தச் சூழ்ச்சியைச் செய்தார். ஆனல் பச்சையப்பரோ இவ்வளவு பெரிய வேலையைச் செய்து முடிக்கத் தம்மால் இயலாது என்று கையை விரித்து விட்டார். ஆயினும் கவர்னர் விடவில்லை. வேறுசில ரோடு பச்சையப்பரையுஞ் சேர்த்துத் தஞ்சைக்கு அனுப் பினுர்.

## அரசர்க்குக் கடன்

தஞ்சையரசர் வரவுக்குமேல் செலவு செய்து தொல்லையில் மாட்டிக்கொண்டிருந்தார். யாராவது அர சருக்குக்கடன் கொடுத்து உதவி செய்தால்தான் அரசர் தமது வரிப்பொருளைக் கொடுத்துத் தீர்க்கமுடியும். தஞ்

சையரசர் தமக்கு நூறாயிரம் வராகன் கடன் கொடுத்து உதவ வேண்டுமென்று பச்சையப்ப முதலியாரைக் கேட்டுக்கொண்டார். சிலசிற்றூர்களை அடைமானமாகப் பெற்றுக்கொண்டு பச்சையப்ப முதலியாருங் கடன் கொடுத்தார். மேலுந் தஞ்சையிலேயே தங்கித் தம்முடைய வாணிகமாகிய பணங்கொடுக்கல் வாங்கல் முதலியவைகளை நடத்திக் கொண்டிருந்தார். மேலும் அந்நாளில் மணலி சின்னையா முதலியார் சுப்பாராவ் என்பவர்களும் தஞ்சையரசருக்குப்பெருந்தொகைகளைக் கடனாகக்கொடுத்து அதற்கு ஈடாகச்சிற்றூர்களை அடைமானமாகப் பெற்று அதனால் வருகிற விளைபொருள்களை மிகஉயர்ந்த விலைக்கு விற்றுப் பெருத்த ஊதியந் தேடிக்கொண்டிருந்தார்கள். இதனால் அச்சிற்றூர் மக்கள் சொல்ல முடியாத துன்பத்தை அடைந்து வருத்தப்பட்டார்கள். அரசரோ கடனில்மூழ்கியிருந்தார். தஞ்சையி லிருந்த ஐரோப்பியர்கள்' இங்குள்ளவட்டித் தொழிலாளர்களாகிய இருமொழிப் பேச்சாளர்களாலே தான் இவ்விடத்து மக்கள் பெருத்த தொல்லைக்கு உள்ளாகிறார்கள் என்றும், இவர்களை உடனே ஊரை விட்டு விரட்டவேண்டும் என்றும் சென்னை அரசாங்கத்தாரிடம் வற்புறுத்தினார்கள். அதன்மேல் சென்னை அரசாங்கத்தார் தஞ்சையில் இருந்த ராம், புல்டன் என்பவர்களுக்கு 1791 ஆம் ஆண்டில் கடிதமெழுதிப் பச்சையப்பர், சின்னையா முதலி, சுப்பாராவ் ஆகியவர்களைச் சென்னைக்கு அனுப்பிவிடுமாறு கண்டிப்பான கட்டளையனுப்பினார்கள். மேற்கூறிய ராம் புல்டன் என்னும் இருவரும் சென்னை அரசாங்கக் கட்டளையைக் காட்டி மூவரையும் சென்னைக்குச் செல்லுமாறு வற்புறுத்தினார்கள்.

பச்சைப்பர் தாம் அளவுகடந்த வட்டி வாங்கி ஊரைப் பாழ்படுத்தவில்லையென்றும், சுப்பாராவ், சின்னையா முதலியார் ஆகியவர்கள்மீது மக்கள் குற்றங் கூறுவதைப்போல் தம்மீது யாருங்குற்றங் கூறவில்லை யென்றும், தஞ்சையரசரிடமிருந்து மேலும் தமக்கு ஐம்பதினாயிரம் வராகன் கடன் வரவேண்டுமென்றும், தாம் உடனே புறப்பட்டுப் போய்விட்டால் அக்கடன் அப்படியே நின்று போய்விடும் என்றும், தஞ்சைக்குவர விருப்பமில்லாத தம்மைச் சென்னைக் கவர்னராகிய காமெல் துரைதான வருமாறு வற்புறுத்தினரென்றும் பலவாறு மறுமொழி பகர்ந்தார். அதிகாரிகள் பச்சை யப்பர் பகர்ந்ததைக் கேட்கவில்லை. அதிகாரிகள் வற் புறுத்திப் பச்சையப்பரையுஞ் சென்னைக்கு அனுப்பி விட்டார்கள்.

## தில்லையிற் கட்டளை

பச்சையப்பர் வைணவம், சைவம் ஆகிய இரண் டையும் ஒரு நிகராகப்போற்றியவர். பச்சையப்பர் சைவ சமயத் தினராக இருந்தும் இவ்வாறு நின்றது சைவ சமயத் தினரின் பண்பாட்டை நன்கு விளக்குவதாகும். சென்னையை அடைந்து தங்கியிருந்த பச்சையப்பர் திருத்தில்லையிற் சில அறங்களைச்செய்ய எண்ணினர். அப்பொழுது அங்குக் கோவிந்தராசர் கோயில் வைண வர்களும்அம்பலவாணர் கோயில்தீட்சிதர்களும் போரிட் டுக் கொண்டிருந்தார்கள். பச்சையப்ப முதலியார் தம் நண்பராகிய மணலி சின்னையா முதலியாரோடு ஒன்று கூடித் தில்லைப் போராட்டத்திற்கு ஓர் எல்லைகண்டார். தேர் முதலியனவைகளைப் புதிதாகச்செய்து 1791 ஆம் ஆண்டு சூன் திங்களில் ஆனித் திருவிழாவை மிகச்

சிறப்பாக நடத்தினர். மக்கள் பச்சையப்ப முதலி யாரைப் பாராட்டிப் போற்றினர்கள்.

## உடல்நலக்கேடு

தஞ்சையில் நடத்திய வட்டித்தொழிலில் பச்சை யப்பர் தீமை யேதேனும் செய்தாரா என்று ஆராய்ச்சி யோடு உசாவியதில் பச்சையப்பர்மீது எத்தகைய குற்றமும் ஏற்படவில்லை. சென்னையில் தங்கியிருத்தல் பச்சையப்பருடைய உடல்நலத்திற்கு ஒத்து வராமை யால் அவர் மீண்டுந் தஞ்சையை அடைந்து தங்கி யிருக்க விரும்பினர். எல்லாச் செய்தியையும் சென்னை அரசியலாருக்குத் தெரியப்படுத்தித் தஞ்சை மாவட்டத் திலே தங்கியிருப்பதற்கு உடன்பாடு பெற்ருர். 1792 ஆம் ஆண்டு, சூன் திங்களில் பச்சையப்பருக்குப் பாரிச வாயு என்னும் நோய் உண்டாகியது. நோய் கடுமை யாக இல்லாதபடியால் சிறிது நாள் தமது கொடுக்கல் வாங்கல்களைத் தஞ்சையில் நடத்திக்கொண்டிருந்தார். வேறுபல நோய்களும் பச்சையப்பருக்கு உண்டாயின. இடம் மாறியிருத்தல் நலம் என்று எண்ணிய பச்சை யப்பர் திருக்குடந்தையை அடைந்து அங்கே தங்கி யிருந்தார். தாம் முன்னரே திட்டமிட்டிருந்தபடி அறச்சாலைஒன்றை அந்நகரில் கட்டிக்கொண்டிருந்தார் அவருடைய நோய்கள் நாளும் வளர்ந்து கொண்டி ருந்தன. எந்தச் சமயத்திலும் தான் விண்ணுலகம் எய்த நேரிடும் என்பதை உணர்ந்துகொண்ட அவர் தமது இறுதிமுறியை (மரணசாதனத்தை) 1794 ஆம் ஆண்டு மார்ச்சுத் திங்கள் இருபத்திரண்டாம் நாள் எழுதிவைத்தார்.

## இறுதி முறி

" சிவமயம். பிரமாதீச ௵ பங்குனி ௴ 12௳ கும்பகோணத்திலே நமக்கு சரீரம் சொஸ்தமில்லாமல் எதுவானுலும் அபாயங்கள் வந்தாஞல் என் காரியபாகங்கள் சகலமும் M. போனி-நாராயண பிள்ளையவர்களும் அவர்குமாரன் அய்யாப் பிள்ளையவர்களும் பார்த்துக்கொள்ளுவது. நானிதுவரைக்கும் சம்பாதித்ததிலே ஒருலக்ஷம் வராகன் பணத்துக்கு லயமில்லாத இடத்திலே வட்டிக்கு வைத்து அதிலேவருகிற வட்டியைக் காசிமுதல் ராமேசுவரம் வரைக்கும் முன் நான் எழுதியிருக்கிற ஸ்தலங்கள்தோறும் கட்டளை வைத்து அபிஷேக நைவேதனம் நடக்கும்படி பண்ணவும். சிதம்பரம் ஸ்ரீசபாபதி கீழ்கோபுரம் கட்டி முடிகிறதற்கு இப்போது பூவாளூர் ஐயன்செட்டி மாரிபத்தில் பதினோராயிரத்துமுந்நூறு வராகன் வைத்து வேலைநடந்துகொண்டு வருகிறதானபடியினுலே அந்தப் பணம் ஆய்ப்போனவுடனே, என்சொந்த ஆஸ்தியிலே முன் சிவ தர்மத்துக்கு வைத்திருக்கிற லக்ஷம் வராகனை யல்லாமல் வேறே இருக்கிறதிலே, அந்தக் கோபுரத்திருப்பணி முடிகிறதற்குச் செல்லுமானது இருபதினுயிரம் முப்பதினுயிரம் வேண்டியதைக்கொடுத்து, கோபுரத்தைக் கட்டி முடித்துச் சிவதருமத்தை நிறைவேற்றிப் போடவும். எங்கள் குருக்களையா வீடுகட்டிக்கொள்ளுகிறதற்கு ஆயிரம்வராகன் கொடுக்கவும். அவருக்கு நெல்லுக்கும் மனைச் செலவுக்கும் மனைவிருத்தி நடக்க வட்டிக்கு வைத்துக்கொள்ள ஆயிரம்வராகன் கொடுக்கவும். ஆக இரண்டாயிரம் வராகன் அகத்தியம் கொடுக்கவும். என்னண்டையிலே வெகுநாளாய் ராயசமெழுதிக் கொண்டிருந்த விநாயக மூர்த்தியா பிள்ளைக்கு மனைவிர்த்திக்கும் சிவ பூசைக்கும் நடக்க வேண்டியதற்கு ஆயிரம் பூவராகன் வட்டிக்கு வைத்துக்கொள்ளச் சொல்லிக் கொடுக்கவும். திருவையாற்றிலே யிருக்கிற பண்டார சன்னதி திருக் கூட்டங்களுக்கும் மயேசுர பூசை செலவுக்கும் ஆயிரத்

1,16,300 பூவராகன் இருக்கின்றன என்றும் கொடுக்கல்வாங்கலில் இருப்பவை 1,20,214 பூவராகன் என்றும் தெரியப்படுத்தினர். தருமங்களைப் பச்சையப்ப முதலியார் பேரால் நீடூழிகாலம் நிகழுமாறு நடத்த வேண்டுமென்று நாராயண பிள்ளையிடம் ஓர் உடன் படிக்கையைச் செய்து கொண்டார்கள். அதன் பிறகு முதலியாரின் பெரிய மனைவி அய்யாளம் மாள் சிதம்பரம் கோபுரத்து வேலையை முடிக்கவேண்டு மென்று எண்ணினள். வெகுநாட்களாக இழுத்துப் பறித்துக்கொண்டு கிடந்த கோபுர வேலை விரைவாக நடைபெறத் தொடங்கியது. மிக அழகாகவும் விரை வாகவும் கோபுரம் கட்டி முடிக்கப்பட்டது.

## பொருள் நீதிமன்றஞ் சென்றது

1802 ஆம் ஆண்டில் நாராயண பிள்ளை கால மானர். பச்சையப்பருடைய பொருள்கள் நாராயண பிள்ளையின் மகன் பொறுப்பில் இருந்தது, மகனுங் காலமாகவே அண்ணுச்சாமிப் பிள்ளை என்பவருடைய பொறுப்புக்கு மாறியது. பிள்ளையற்ற பச்சையப்ப முதலியாருடைய பொருளை எத்தனையோ பேர் உண்டு ஏப்பமிடுதற்கு முயன்றும் அப்பொருள் எல்லோரையும் ஏய்த்துக் கொண்டே வந்தது. ஆனல் மேன் மேலும் அப்பொருளைக் குறித்துவம்பு தும்புகளும் வழக்குக்களும் புதிதுபுதிதாக உண்டாகிக்கொண்டேயிருந்தன. பச்சையப்பரின் முதல் மனைவி ஒரு பிள்ளையை வளர்ப் பெடுத்து அவனுக்குத் திருமணம் முதலியன செய்து வைத்து வளர்ப்பு மகனை வைத்திருந்தனள். அவனுங் காலமாகிவிட்டான். பச்சையப்பரின் இரண்டாவது மனைவி, அவளுக்குப் பிறந்த பெண்குழந்தை, முதல்

மனைவி, அவளுடைய தாயாகிய பச்சையப்ப முதலி யாரின் தமக்கை முதலிய எல்லோரும் விண்ணுலகஞ் சென்றனர். பச்சையப்பரின் பொருளைப் பாதுகாத் திருந்த அண்ணுச்சாமி அப்பொருளை நீதிமன்றத்திலே ஒப்படைத்து விட்டார். அப்பொருள் நீதிமன்றத்திலே ஏறக்குறைய நாற்பத்தைந் தாண்டுகள்வரை உறங்கிக் கொண்டிருந்தது.

## பயன்படத் தொடங்கியது

பிறகு சிலர் நீதிமன்றத்தில் உறங்கிக் கொண்டிருக் கும் பொருளை வெளிப்படுத்த வேண்டுமென்று நீதிமன் றத்தில் வழக்குத்தொடுத்தனர். நீதிமன்றம் பச்சையப்ப முதலியாருடைய பொருளைப் பாதுகாத்து அறநெறி யிலே செலவிடுதற்கு ஒன்பதுபேர்களடங்கியஅறச்செய லாளர் கூட்டத்தை நிறுவியது. அக்கூட்டத்தினர் தற்காலத்திற்கு இன்றியமையாத அறநெறிகளில் பொருளைச் செலவிடத் தொடங்கியதுடன் திருக் கோவில்களுக்கு முதலியாரால் ஏற்படுத்தப்பெற்ற அறங்களையும் கண்காணித்து ஒழுங்காக நடைபெறச் செய்யலாயினர். மற்றும், காஞ்சிபுரம், சிதம்பரம், சென்னை மாநகரம் ஆகியவைகளில் பச்சையப்பருடைய பெயரால் கல்லூரிகளையும் அமைத்துத் திறமையாக நடத்தத் தொடங்கினர். அக்கல்லூரிகள் நாளுக்கு நாள் உயர்ந்தோங்கி இந்நாளில் மிகச்சிறந்த நன்னிலை யிலே திகழுகின்றன. பச்சையப்பர் நோய்வாய்ப்பட்டு எதுவுஞ் செய்தற்கு எண்ண முடியாத நிலைமையில் பொருளை விட்டுச் செல்ல, அப்பொருள் அவருடைய பெயருக்குப் பெரும் புகழுண்டாகும் வகையில் பயன் படத் தொடங்கியது பச்சையப்பருடைய நல்வினைப்பய னேயாகும்.

## கரு. வி. விநாயக முதலியார்

### பிறப்பு

விநாயக முதலியார் 1803 ஆம் ஆண்டு, அக்டோபர்த் திங்கள் (உருத்திரோற்காரி ஆண்டு ஐப்பசித் திங்கள் பன்னிரண்டாம் நாள்) சென்னைத் திருமயிலையில்பிறந்தார் இவருடையதந்தையார் பெயர் அருச்சுன முதலியார். தாயார் பெயர் நாகாத்தம்மாள். அருச்சுன முதலியார் சென்னைக்கு அண்மையில் உள்ள வியாசர்பாடியில் சிலகாலம் வாழ்ந்திருந்தமையின் விநாயக முதலியார், வியாசர்பாடி விநாயக முதலியார் என்று வழங்கப்பெற்றார்.

### கல்வி

விநாயக முதலியார் நாளொருமேனியும் பொழுதொரு வண்ணமுமாக வளர்ந்தார். உரியகாலத்திற் கல்விப்பயிற்சி முதலியன செய்விக்கப்பெற்றார். தமிழில் தேர்ச்சிபெற்றுச் சிறந்து விளங்கினர். தமது பதினெட்டாம் அகவையில் தந்தையையும் இருபத்திரண்டாம் அகவையில் தாயையும் இழந்தார்.

### பொருள்தேடல்

தந்தையார் காலஞ்சென்றபின் விநாயகமுதலியார் தாமே குடும்பத் தலைவராக இருந்து குடும்பக்காரியங்களை மேற்கொண்டார். உடன்பிறந்தவர்களாகிய சுப்பராய முதலியார், அப்பாச்சாமி முதலியார், சபாபதி முதலியார், வள்ளியம்மாள், கற்பகம்மாள் என்பவர்

களைக் காக்கவேண்டிய பொறுப்பு இவருக்கு உண்டா யிற்று.

அக்காலத்தில் திருவல்லிக்கேணியில் புகழ்பெற்ற வணிகராக இருந்த தேசிங்கு என்பவரிடத்தில் அலுவ லில் அமர்ந்தார். அவருடைய கட்டளைப்படி நாள் தோறும் நபாப்பின் அரண்மனைக்கு வேண்டியபொருள் களைத் திரட்டியனுப்புவதிலும், பொருள் வசூல் செய் வதிலும் மிகுந்த கெட்டிக்காரராக வேலைபார்த்துக் கொண்டிருந்தார். துலுக்கு மொழியில் நன்றாகப்பேசவும் வல்லவரானார். அக்காலத்தில் நபாப்பிற்குரிய பல பெரிய கட்டிட வேலைகளையும், பாதுகாப்பு வேலைகளை யும் செய்துவந்த அதிகாரியாகிய கான்ஸ் துரை என் பவர் நாளடைவில் விநாயகமுதலியாரின் திறமையை உணர்ந்தார். தம்மிடத்தில் வேலையில் இருக்குமாறு செய்துகொண்டார். முதலியார் துரையினுடைய வேலைகளை விழிப்புடன் பார்த்துவந்ததோடு வேலை களை நுட்பமாகவும் அருமையாகவும் செய்து முடிக்குந் திறத்தினும், திட்டங்கள் போடுவதினும் கட்டிடங்கள் அழகாக எழுதுவதினும் மிகவல்லவராக விளங்குந் தன்மையைக்கண்டு துரை களிப்புற்றார். தம்மோடு பங்காளியாக இருந்து வேலைபார்த்துவருமாறு ஏற்பாடு செய்து கொண்டார். முதலியாருக்கு வேண்டிய பொரு ளுதவியையுந் தாமே செய்தார். தமக்குவரும் ஊதியத் தில்மூன்றில் ஒருபங்கை முதலியாருக்குக் கொடுத்தார். சிலநாளைக்குள்ளாக முதலியாரைத் தனியே வேலை பார்த்துவரும்படி சில பெரிய கட்டிடங்களின் பாது காப்பு வேலையை ஒப்புவித்தார். முதலியாரும் அவ் வாறே செய்து முடித்துச் சீர்த்திபெற்றார். துரை இறந்

தார். நபாப்பு வீட்டுத் திவான் கசான்சி ஆகியோர் முதலியாரின் திறமையை நன்கு அறிந்தவர்களாதலால் அவரை யழைப்பித்துத் துரை பார்த்துவந்த வேலையை யெல்லாம் அவரிடம் ஒப்புவித்தனர்.

அதுமுதல் முதலியார் தம்முடைய உடன் பிறந்தார்களை உதவியாகவைத்துக்கொண்டு பற்பல அரிய பெரிய கட்டிடங்களை யெல்லாம் யாவருங்கண்டு வியப்படையுமாறு கட்டிமுடிக்கலானார். அதனால் மகிழ்ச்சி யடைந்த நபாப், தங்கத்தோடா, பாசிபந்து, சால்வை முதலியவைகளைப் பரிசளிக்க, முதலியார் அவற்றைப் பெற்று மகிழ்ந்தார்.

## வீடுகள்வாங்குதல்

முதலியார் தம் வழிமுறையினர் தங்கியிருத்தற்கும் வாழ்க்கை வருமானத்திற்கும், திரு ம யி லை யி லு ம் சென்னையிலும் பலவீடுகளைவாங்கினார். மாவட்டத்தலைவரின் உறுதிமொழிப்பத்திரங்களோடு வழிமுறையினர் பெயருக்கு உரிமைப்படுத்தி வைத்தார்.

## ஓவிய அறச்சாலை

பிறகு திருமயிலையில் தெற்குத் தெருவில் ஓர்இடத்தைவாங்கினார். அந்த இ ட த் தி ல் கருங்கற்களால் விசாலமானகட்டிடம் ஒன்று கட்டினார். அதிற் பலவகையான ஓவியங்களை எழுதச் செய்தார். பல பதுமைகள், இரசகுண்டு, லஸ்டர், வால்ஷெட், குளோப் முதலியவைகளும் அமைத்தார். கண்டோர் வியக்கத்தக்கவாறு விளக்குகளுடன் அழகுசெய்து சித்திரச்சத்திரம் என்று பெயரிட்டார். இச்சத்திரத்தின் வேலைப்பாடுகளைப் புகழ்ந்து மகாவித்துவான் மீனாட்சிசுந்தரம் பி ள் ளை

யவர்கள் 'சித்திரச் சத்திரப் புகழ்ச்சிமணி மாலை' என்னும் பெயரோடு புகழ்ச்சிமாலை ஒன்றுபாடினார்.

கபாலீசுரருக்கு ஆண்டு தோறும்பங்குனித் திங்களில் நடக்கும் பெரிய திருவிழாவில் சுவாமி எழுந்தருளிவருகையில் அறச்சாலையில் மேளதாளங்களோடு கற்பூர ஒளிவழிபாடு நடப்பதற்கு ஏற்பாடு செய்தார். கடவுள்வழிபாட்டின் பொருட்டுவருபவர்கட்குஅந்தணர்களைக்கொண்டு தண்ணீர் கொடுக்கவும், ஒவ்வொரு திங்களிலும் வரும் இரண்டு துவாதசித் திதிகளிலும் அந்தணர்க்கு உணவிடுதற்கும் ஏற்பாடு செய்து அதன் பொருட்டுப் பொருள் வருவாய்க்கும் ஏற்பாடு செய்தார்.

## புலவர்கட்கு நன்கொடை

விநாயகமுதலியார் தமிழையும் நன்குகற்றுத் தமிழ்ப் பாக்களின் பொருளையறியத்தக்க தமிழறிவு பெற்றிருந்தார். முதலியாரின் பெருமையை உணர்ந்ததும் அவர் காலத்தில் இருந்த புலவர்களில் ஒருவர் எஞ்சாமல் எல்லோரும் முதலியாரைப் புகழ்ந்துபாடிப் பெரும் பரிசில்பெற்றுக் களித்தனர். தமிழ்நாட்டு வள்ளல்களில் இவரைப்போல் பாடல் பெற்ற செல்வர்கள் இல்லையென்று துணிவாகக் கூறலாம்.

## புலவர்கள் புகழ்ச்சி

இவருடைய அறச்செயல்களை வியந்து மகாவித்துவான் மீனாட்சிசுந்தரம் பிள்ளை சித்திரச் சத்திரப்புகழ்ச்சி மணி மாலை என்னும் நூலைப்பாடியதுடன் வியாசைக் கோவை என்றொரு கோவையினையும் பாடத்தொடங்கினார். ஆனால் அதனை அவருடையமாணவராகிய தியாகராசச்செட்டியார் முடித்தார். மற்றும் இவரைப் புகழ்ந்து

1 சித்திரச் சத்திரச்சிந்து, 2 விநாயக ரகப்பொருட் கோவை, 3 சிலேடைச் செய்யுட்கள், 4 பின்முடுகுச்சந்த வெண்பா, 5 சிங்காரச் சந்தவெண்பா, 6 கொம்பில்லா வண்ணம், 7 பதங்கள், சிலதனிப்பாடல்கள் முதலியன இயற்றப் பெற்றுள்ளன. இவருடைய அறச்செயல் களைப் புகழ்ந்து பாடியவர்களிற் சிலர் பெயர் இப்பொழுது அறியப்படுகிறது.

1. மகா வித்துவான் மீனாட்சிசுந்தரம் பிள்ளை, 2 தியாகராசச்செட்டியார், 3 வேலூர் சுப்பராய்முதலியார் 4 காஞ்சிபுரம் வித்துவான் க்ச்சபாலையர், 5 புரசைஅட்டாவதானம் சபாபதி முதலியார் 6 கல்போது பிச்சுவையர், 7 துரிதகவி திருமலைக்கொழுந்துக் கவிராயர், 8 தஞ்சை அரங்கநாதக் க்விராயர், 9 சேற்றூர் இராம சாமிக் கவிராயர், 10 திருவாவடுதுறையாதீனம் வித்துவான் தாண்டவராய சுவாமிகள், 11 வல்லூர் தேவ ராசபிள்ளையவர்கள் 12 திருவீழிமிழலைசாமிநாதக் கவிராயர், 13 புதுவை சவரிராயலு நாயகர், 14 திரிசிரபுரம் குப்பமுத்தாப்பிள்ளை, 15 திருத்தணிகை விசாகப்பெருமாளையர், 16 அட்டாவதானம் வீராச்சாமிச் செட்டியார், 17 புதுவை பொன்னுச்சாமி முத்லியார், 18 சிதம்பரம் தளவரிசை 19 சுப்பிரமணிய பண்டிதர் சென்னை அப்பாவு, உபாத்தியாயர் முதலியோர் விநாயக முதலியாரைப் புகழ்ந்து பாடியவர்களிற் சிலராவர்.

வியாசைக் கோவை

பொன்னை மறைத்தல்செய் யாமல் வழங்கிப் புலவர்கவி
தன்னை மறைத்த விநாயக மால்வெற்ப தண்மலர்வாழ்
மின்னை மறைத்தவன் செல்வப் பயன்பெற மேவெலாக்கும்
என்னை மறைத்தென்செல் வத்தின்ப நீபெற எண்ணியதே.

பிச்சுவையர் தனிப்பாடல்

நீதியருச் சுனமகிபன் உதவுவிநா யகசுமுக
நிருபா உன்மேல்
ஆதியினுன் கோவையெனும் பிரபந்தம் ஒன்றுரைத்தேன்
அதனுக்காக
வேதிரவி யங்கொடுத்தாய் வதுவைசெய்தேன் என்சேய்க்கு
மேனுளந்த
மாதிருது வானதினுல் சாந்திமுகுர்த் தஞ்செயப்பொன்
வழங்கு வாயே

## இறுதி

பலவகையான தான தருமங்களையும் நடத்திக் கொண்டு புலவர்க்கருந்துணையா யிலகிநின்ற இவர் 1868 ஆம் ஆண்டு டிசம்பர்த் திங்கள் 21 ஆம் நாள் (விபவ ஆண்டு மார்கழித் திங்கள் 8 ஆம் நாள்) தமது 66 ஆம் அகவையில் இறைவன திருவடி நீழலை யடைந்தார்.

## கச. செங்கல்வராய நாயகர்

### தோற்றம்

பி. டி. லீ. செங்கல்வராய நாயகர் 1829 ஆம் ஆண்டில் சென்னை மாநகரிற் பிறந்தார். இவருடைய தந்தையார் பெயர் பெருமாள் நாயகர். தாயார் பெயர் தேவயானையம்மாள்.

### கல்வி

இளம்பருவத்திலேயே செங்கல்வராய நாயகர் கல்வியை நன்கு கற்றுத் தேறினர். எல்லோரிடத்தினும் மிகுந்த அன்புடையவராகவும் பணிவுடையவராகவும் விளங்கினர். நாயகருக்கு அகவை முப்பது நடந்து கொண்டிருக்கும்போது அவருடைய தந்தையார் விண்ணுலகஞ் சென்றார். பெருமாள் நாயகர் காலஞ்சென்றபொழுது பெருஞ் செல்வத்தை வைத்துவிட்டுப் போகவில்லை. அவர் விட்டுச் சென்ற பொருள் பதினாயிரம் ரூபாய்தான்.

### நாயகர் பொருள்தேடல்

உடன் பிறந்தார்களோடு தந்தையாரின் பொருளைப் பங்கிட்டுக்கொண்ட பிறகு நாயகர் வாணிகத்தில் தமது கருத்தைச் செலுத்தத் தொடங்கினர். மெஸர்ஸ் ஷாண்ட் அண்ட் கம்பெனியின் இருமொழிப் பேச்சாளராக நெடுநாள் அமர்ந்து பெரும்புகழ் அடைந்தார். பச்சையப்பன் அறநிலையப் பாதுகாப்புக் குழுவின் தலைவராகிய திருமலைப்பிள்ளையின் தந்தை

யாராகிய பசுவப்பிள்ளை என்பவருடன் சேர்ந்து வாணிகம் நடத்தினர். திருமகளின் அருட்பார்வை செங்கல்வராய நாயகர்மீது திரும்பியது. அளவு கடந்த பொருளை மிகுவிரைவில் தேடிக்குவித்தார்.

## நாயகர் தன்மை

செல்வத்தைத் தேடிக் குவித்த நாயகர் செல்வர்கள் அடைகிற தீக்குணங்களை அடையவில்லை. பிறருக்கு உதவிசெய்யுந் தன்மை யமைந்தவராக இருந்தபடியால் எல்லோரும் நாயகரைப் பாராட்டிப் போற்றினர். அருள்உள்ளம் அமையப் பெற்றவர்களை எல்லோரும் மதித்து நடத்தல் உலக இயற்கையே. நாயகர் ஏழை எளியவர்கட்கு இடைவிடாது நன்மை புரிந்துகொண்டிருந்தார். தெய்வ வழிபாடு செய்வதும் புராண நூல்களைப் படிப்பதும் நற்செயல்களில் கருத்தைச் செலுத்துவதும் நாயகருக்கு இயற்கையாக இருந்தன. நாயகர் சாதிமத வேறுபாடுகளைச் சிறிதுங் கருதாது எல்லோரையும் ஒரே தன்மையாக நோக்கி உதவி புரிந்து வந்தார். தாய்தந்தையர்களிடத்தில் மிகுந்த நன்மதிப்பு வைத்திருந்தார். தமது பெயருக்குமுன் பி. டி. லீ. என்னும் எழுத்துக்களைச் சேர்த்தே எழுதி வந்தார். பி. என்பது பெருமாள் நாயகர் என்பதைக் குறிக்கும் (p.) டி. என்பது தாயார் பெயராகிய தேவயானையம்மை என்பதைக் குறிக்கும் (T) லீ. என்பது நாயகருடைய தாய் தந்தையர்கள் நாயகரைச் செல்வமாக அழைத்த பெயர். இவைகளைக் கொண்டே இவருடைய குறிப்பெழுத்துக்கள். (P. T. L.) என வழங்கின.

## ஏழைகட்கு உதவி

வறியவர்களிடத்தில் நாயகர் மிகுந்த அருளுடைய வராக விளங்கினர். 1867 ஆம் ஆண்டில் அட்சய ஆண்டுக் கறுப்பு நேர்ந்தது. அஃது எல்லோரையும் வாட்டி வருத்தியது. அப்பொழுது நாயகர் தமது வீட்டிற்குப் பக்கத்தில் ஒருகொட்டகை கட்டி எல்லாக் குலத்தினருக்கும் சிறிதும் வேறுபாடில்லாமல் வந்து கேட்டபொழுதெல்லாம் உணவளித்துக் கொண்டிருந் தார். சிறப்போடு வாழ்ந்திருந்த சிலர் வறியரான பின் தமது பெருமையை விட்டு நேராகத் தாமேவந்து உண வருந்திப் போதற்கு மிகவும் நாணியிருந்தனர். அத்த கையோர்களுக் கெல்லாம் அவர்களிருப் பிடத்திற்கே அரிசியும் பணமும் அனுப்பி உதவி செய்தார். வேலை யற்றிருந்தவர்களுக்குத் தாம் தம்முடைய பணத்தைப் பொறுப்புக்கட்டி வேலை வாங்கிக் கொடுத்தார். சில சமயங்களில் தாமேபொறுப்பாகவும் இருந்து உதவி புரிந்தார்.

## நூல்கள் வெளியிடுதல்

வைணவ சித்தாந்த நூல்களையும், ஆழ்வார்கள் வரலாறுகளையும், வேதாந்த நூல்களையும் அச்சிற்பதிப் பித்து வெளியிடவேண்டுமென்று சில அன்பர்கள் விரும்பினர். உடனே நாயகர் அதற்கு இணங்கினர். இதற்காகக் கழகம் ஒன்று அமைக்கப்பட்டது. கற்றறிந்த அறிஞர்கள் பலரைக்கொண்டு நூல்களை ஆராய்ந்து வெளியிடும் வேலை தொடங்கப்பட்டது. அரியநூல்கள் பல வெளிவந்தன. நாயகரின் இக்கலைத்தொண்டு பெரும் பயனையளித்தது. மக்கள் குறைந்த விலையிலும்

இனமாகவும் நூல்களைப் பெற்றுப் படித்து மகிழ்ந்தனர்.

## இறுதி

உடல் நீர்க்குமிழியைப் போன்றது. "காய மேயிது பொய்யடா காற்றடைத்த பையடா" என்று பெரியோர்கள் கூறியிருக்கிறார்கள். எச்சமயத்திலும் தமது உடல் நழுவிவிடக் கூடுமென்பதை உணர்ந்த நாயகர் 1870 ஆம் ஆண்டில் தமது நாற்பத்தொன்றும் அகவையில் தம்முடைய 'இறுதிமுறியை எழுதினர். ஏறக்குறைய ஐந்துலட்சம் ரூபா மதிப்புள்ள தமது பொருள்களையெல்லாம் அறநிலையங்கட்கே எழுதி வைத்து விட்டார். இவ்வாறு எல்லா ஏற்பாடுகளையுஞ் செய்து முடித்த நாயகர் 1873 ஆம் ஆண்டு மேத் திங்களில் இவ்வுலக வாழ்வை நீத்தார்.

## நாயகருடைய பலவகை அறங்கள்

சில கோயில்களுக்குக் கட்டளைகள் ஏற்படுத்தினர். திக்கற்ற பிள்ளைகளை வைத்து ஆதரித்து அவர்கட்குக் கல்வி கற்பிப்பதற்கும் கைத்தொழில்கள் கற்றுக்கொடுப்பதற்கும் ஏற்பாடு செய்தார். நோயாளிகளின் நோயைப் போக்குவதற்கு மருத்துவசாலைகள் சிலவற்றை ஏற்படுத்தினர். திக்கற்ற விதவைகளுக்கும் குழந்தைகளுக்கும் தக்கவாறு பொருளுதவி புரிந்தார். ஊவேரி என்னும் இடத்தில் ஓர்அறச்சாலை அமைத்துப் பைராகிகளுக்கு உணவுப்பொருள் வழங்கச் செய்தார்.

## கைத்தொழிற்பள்ளி

நாயகர் விருப்பப்படி 1880 ஆம் ஆண்டில் திக்கற்ற மாணவரில்லமும் கைத்தொழிற்சாலையும் ஏற்படுத்

தப்பட்டன அதில்திக்கற்ற பிள்ளைகளுக்குத்தொடக்கக் கல்வியும் கைத்தொழிலுங் கற்பிக்கப்பட்டு நடந்து வருகின்றன. அந்தக் கைத்தொழிற்சாலை நாளடை வில் வளர்ச்சியடைந்து இப்பொழுது சிறந்து விளங்கு கிறது. இவருடைய கைத்தொழிற் பள்ளியைப்போன்ற பள்ளி சென்னைமாகாணத்தில் வேறெதுவும் இல்லை. தச்சுவேலை, அச்சுவேலை, மோட்டார் ஓட்டுதல், நெசவு வேலை, மெடல், மோல்டிங் முதலிய வேலைகளெல்லாம் அங்கு கற்பிக்கப்படுகின்றன. இருநூறு பிள்ளைகட்கு இனமாக உணவும் உடையும் உதவி அவர்களெல் லோருக்கும் கல்வியுங் கைத்தொழிலும் கற்பிக்கப்படு கின்றன. நாயகருடைய தரும மருத்துவ சாலையில் நாளொன்றுக்கு ஐந்நூறு பேருக்கு மேல் மருத்துவஞ் செய்வித்துக்கொள்ளுகிறார்கள். கைத்தொழிற் பள்ளி யில் கல்விகற்று வெளியேறுகிறவர்கள் நல்ல நிலைமை யில் இருந்து வாழ்க்கை நடத்துகிறார்கள். நாயகர் தம்முடையகுலத்தினருக்குச்சிறப்பாகச் சிலஏற்பாடுகள் செய்துள்ளதாகவுந் தெரிகிறது. நாயகர் அறத்தின் பொருட்டுத்தமது இறுதி முறியில் எழுதிய தொகை, ஐந்துலட்சத்து அறுபத் தொன்பதாயிரத்து ஐந்நூற்று நாற்பத்தேழுரூபாய் பன்னிரண்டணா பத்துப்பை என்று அறியப்பெறுகின்றது.

## கரு. தீ. நா. நாச்சியப்ப செட்டியார்

### பிறப்பு

அறப்பெருஞ் செல்வராக விளங்கிய நாச்சியப்ப செட்டியார் பாண்டிவள நாட்டிலே புதுக்கோட்டைச் சீமையைச்சேர்ந்த இராமச்சந்திரபுரத்திலே 1841 ஆம் ஆண்டு ஜூலைத்திங்கள் நான்காம் நாள் (கலியுகாதி ௪௯௪௨ பிலவ ஆண்டு ஆனித்திங்கள் ௨௧ ஆம் நாள் வெள்ளிக்கிழமை) பிறந்தார். தந்தையார் பெயர் தீர்த்தப்பச் செட்டியார். தாயார் பெயர் வள்ளியம்மை யாச்சி. நாச்சியப் செட்டியாரோடு ஆணும் பெண்ணுமாக உடன்பிறந்தார் எண்மர் பிறந்தனர்.

### கல்வி

புதுமை முதலிய சடங்குகள் நாச்சியப்பருக்கு நன்கு நடைபெற்றன. ஐந்தாம் ஆண்டிற் பள்ளியிற் சேர்த்தனர். அக்கால முறைப்படி கல்வியை நன்கு கற்றுக் கொண்டார். நாச்சியப்பருடைய கணக்குத் திறமை முதலியவைகளைக் கண்டு நாச்சியப்பருக்குக் கல்வி கற்பித்த கணக்காயரே வியப்படைந்தார்.

### வாணிகம்

அக்காலத்தில் நாட்டுக்கோட்டை நகரத்தார்கள் இக்காலத்தைப் போல் முன்னேறிச் சிறந்து விளங்கவில்லை. பலசரக்கு வாணிகங்களை செய்துகொண்டிருந்தனர். அந்நாளில் செட்டியார்களுடைய வீடுகளும் கூரை வீடுகளாகவே விளங்கின. நாச்சியப்பசெட்டியார் பலசரக்குக் கடைவைத்து வாணிகம் நடத்தினர்.

அதனோடு நூல் வாணிகம் முதலியவைகளையும் மேற் கொண்டு தமது செல்வ நலத்தைப் பெருக்கினார். செட்டி யார் மிகுந்த அறிவாளியாகவும் கெட்டிக்காரராகவும் விளங்கியபடியால் செல்வம்மிகுவிரைவாகக் குவிந்தது. நாச்சியப்பர் மரக்கல மேறித் தொலை நாடுகட்குஞ் சென்று பொருளீட்டும் முயற்சியை மேற்கொண்டார்.

"முயற்சி திருவினை ஆக்கும் முயற்றின்மை
இன்மை புகுத்தி விடும்"

எனத் திருவள்ளுவ தேவர் இயம்பிய அறிவுரை பொய்யாகுமோ? சில ஆண்டுகளிலேயே நூறாயிரக் கணக்கான பொருள் குவிந்து விட்டது. ஒருவன் முயற்சி செய்து பொருளைத்தேடுதல் வேண்டும். பொருள் குவிந்த பிறகு அப்பொருளால் ஆம் பயனை அடைதல் வேண்டும். பொருளைத் தேடியவர்கள் அப் பொருளைத்தாமும் நுகர்ந்து அறவழியிலும் தக்காங்கு செலவிடுதல் வேண்டும். இன்றேல் உலகினர் அச் செல்வனுக்குப் "பிசினன்" என்று பெயர் கொடுத்து "எட்டிமரம் பழுத்தாலென், ஈயாதார் வாழ்ந்தாலென்" என்று பழிக்கத் தொடங்கி விடுவார்கள். இதனைக் கருதியே அறிஞர்கள்," செல்வத்துப் பயனேயீதல்" என்றுஞ் செப்பியிருக்கிறார்கள்.

## திருமணம்

நாச்சியப்பருக்கு அகவைஇருபத்தைந்து நிரம்பிய காலத்தில் திருமணம் நடைபெற்றது. வாழ்க்கைத் துணைவியாக அமைந்த இல்லாளின் பெயர் உமை யம்மை. நாச்சியப்பர் அவ்வம்மையோடு சேர்ந்து இல்லறத்தை நல்லறமாக நடத்தியதுடன் பேரறங்கள் பலவற்றையுஞ் செய்யத் தொடங்கினார்,

## செட்டியார் செய்த அறங்கள்; அறக்கோயில்:-

பழுதுபட்டிருக்குங் கோயில்களைச் செப்பனிட்டு ஒழுங்கு செய்து குடமுழுக்குச் செய்தல் அறங்களில் தலையாய அறமென்றுணர்ந்த இவர் 1907-8 ஆம் ஆண்டுகளில் திருப்பணி செய்யத் தொடங்கினர். திருப்பாதிரிப்புலியூர்த் திருக்கோயிலைத் திருப்பணி செய்யத்தொடங்கியவர் பன்னிரண்டு லட்சம் ரூபாய்க்கு மேற் செலவிட்டுத் திருப்பணியையுங் குடமுழுக்கையும் நிறைவேற்றினர். வேறு எவரும் இவ்வளவு பெருந் தொகை செலவிட்டுத் திருப்பணி செய்திலர்.

## ஊர்திக்கொடையும் உணுக்கொடையும்

செட்டியார் தாஞ்செய்த குடமுழுக்கில் புதுமையொன்றைச் செய்தார். குடமுழுக்குப் பார்த்தற்குமக்கள் பெருந்திரளாகவும் எளிதாகவும் வருதற்கு ஓர் அருமையான ஏற்பாடு செய்தார். புகைவண்டிக்காரர்களோடு குடமுழுக்கன்று வரும் மக்களைக் கட்டணம் இல்லாமல் கொண்டுவந்து சேர்க்கும்படியும் அதன் பொருட்டுத்தாம் ஒரு பெருந்தொகை வழங்குவதாகவுங் கூறி அவ்வாறே ஏற்பாடு செய்தார். இதனல் எண்ணற்றமக்கள் குடமுழுக்குக் காண்பதற்கு வந்து கூடினர்கள். பயணச் சீட்டில்லாமையில் கணக்குவழக்கின்றி வந்து குவிந்தமக்கள் உணவுக்குத் திண்டாடாதபடி அறுவகைச் சுவையோடுகூடிய உணவை வந்தமக்கள் அனைவருக்கும் போடுவதற்கு ஏற்பாடு செய்தார். குடமுழுக்கிற்கு வந்த மக்கள் செட்டியாருடைய வள்ளன்மையைப் பாராட்டிப் போற்றினர்கள். மேலும் அக்குடமுழுக்கில், மருத்துவ உதவி, தண்ணீர் உதவி முதலியவைகளையும் ஏற்பாடு செய்திருந்ததோடு களவு

கலகம் முதலியன நேரிடாமல் இருத்தலுக்கும் வேண்டிய ஏற்பாடுகளைச் செய்திருந்தார்.

## பலவகை அறங்கள்

செட்டியாருக்கு அகவை அறுபது நிரம்பியது, மற்றவர்களைப்போல் இவர் அறுபதாண்டு மணங்கொண்டு பெருஞ் செலவு செய்து களிக்க விரும்பாமல் அப்பொருளை நிலையாய பேரறம் ஒன்றில் நிலை நிறுத்த உளங்கொண்டார் நாற்பதாயிரம் வெண்பொற்காசுகள் வரையிலுஞ் செலவு செய்து திருப்பாதிரிப் புலியூர் இறைவிக்குப்பொன் அங்கி ஒன்று செய்து அணிவித்து மகிழ்ந்தார். உச்சிக்காலக் கட்டளையும் குழித்தளிகையும் என்றும் நடைபெறுவதற்கு ஏற்பாடு செய்தார். நாள் தோறும் காசிக் கங்கை நீர்தருவித்துப் பாடலேசுரருக்கும் பிருகந்நாயகிக்கும் நீராட்டுதலுக்கு ஏற்பாடு செய்துவைத்தார். எண்பதாம் ஆண்டு நிகழ்ந்த காலத்திலே சதாபிடேகம் செய்து கொள்ள விரும்பாமல் இதற்குரிய பொருளையும் நிலையான அறத்திலே நிலைநிறுத்த எண்ணினார். அச்சிறப்பு நிகழ்ச்சியின் நினைவுக்குறியாக நூற்றறுபதாயிரம் வெண்பொற்காசுகள் வரையிலுஞ் செலவு செய்து உணவிடும் அறச்சாலை ஒன்றைக்கட்டினார். அதனுள் ஒரு பக்கத்திலே நூல்நிலையமும் படிப்பகமும் அமைத்தார். வெள்ளித்தேர், பசுமடம், நந்தவனம் முதலியனவும் அமைத்தார்.

## ஆகம பாடசாலை

திருப்பாதிரிப்புலியூரில் ஆகமபாடசாலை ஒன்றை ஏற்பாடுத்தி அஃதுஎன்றும் நடைபெறுதற்கு வேண்டிய ஏற்பாடுகளையுஞ் செய்துவைத்தார்.

## திருக்குளம்

திருப்பாதியுப்புலியூர்க் கோயிலை யொட்டியுள்ள திருக்குளம் ஒன்றை, வேறு சில செட்டியார்கள் திருப் பணிசெய்ய விரும்பி இச்செய்தியை நாச்சியப்ப செட்டி யாருக்குத் தெரியபடுத்திஞர்கள். "இந்தநல் வினையைப் பிறர் கவர்வதற்கு இடங்கொடேன். நானே திருப்பணியைச் செய்து முடிக்கிறேன்" என்று அத் திருப்பணியைத் தாமேசெய்து முடித்தார்.

## திருவண்ணுமலையில் திருப்பணி

அவர் தம்முடைய குடும்பப் பொதுவில் திருவண்ணுமலையில் திருமண மண்டபம், பள்ளியறை முதலியன கட்டுவித்தார். நள்ளிரவுக்கட்டளை என்றும் நடைபெறுதற்கு ஏற்பாடு செய்து வைத்தார். வெள்ளித்தேர் செய்துவைத்ததோடு வெள்ளித்தேர்த் திரு விழா எஞ்ஞான்றும் நடைபெறுதற்கு முதற்பொரு ளும் அமைத்துவைத்தார்.

## திருவகீந்திரபுரத்தில் திருப்பணி

திருவகீந்திரபுரத்தில் நந்தவனம், கட்டளை முதலியவைகள் ஏற்படுத்திஞர்.

## பூமீசுரர் திருப்பணி

கடியாரப்பட்டியைச் சேர்ந்த கானப் பேட்டையில் உள்ள பூமீசுரர் திருக்கோயிலை நகரத்தார் உதவி பெற்றுத் திருப்பணி செய்து குடமுழுக்கும் நடத்திஞர். மேற்படி கோயிலுக்கு வெள்ளிக்காளையுஞ் சில அணி கலன்களுஞ் செய்துவைத்தார்.

## கம்பிச் செய்தி

வெளியிடங்களில் இருந்து இராமச்சந்திரபுரத்திற்கு வந்துகொண்டிருந்த கம்பிச் செய்திகள் நேரே அங்கு வராது, காரைடு காத்தானுக்கு வந்து அதன்பின் இராமச்சந்திரபுரத்திற்கு ஆள்வாயிலாக வருவது வழக்கம், செட்டியார் (இவர்) பெரும் பொருள் செலவு செய்து கம்பிச் செய்திநேரே இராமச்சந்திரபுரத்திற்கு வருவதற்கு ஏற்பாடு செய்தார்.

## மற்றும் பலவகை அறங்கள்

புதுக்கோட்டையில் இருந்து திருச்மயம் போகும் நெடுஞ்சாலையில் உள்ள முத்துப்பட்டியில் 'தீர்த்தான் செட்டியார் சரித்திரம்' என்னும் பெயரோடு அறச்சாலை ஒன்று கட்டினர். கால்நடையாகச் செல்லும் வழிப் போக்கர்களுக்குச் சிற்றுண்டி, நீர் மோர் வழங்கினர். அடியவர்கட்குச் சோறிட்டார். திருநாவுக்கரசர் பெயரால் தண்ணீர்ப்பந்தல் ஒன்று அமைத்தார். தரும பாடசாலை ஒன்று ஏற்படுத்தினர். கடியாப்பட்டியில் உயர்தரத் தரும பாடசாலை ஒன்று ஏற்படச்செய்தார். அப்பாடசாலையிற் கல்வி கற்கும் மாணவர் கட்கு உண்வுக்கென இருபதினுயிரம் வெண்பொற்காசு முதல் வைத்தார். பிரமவித்தியா நாய்கி வாசகசாலை என்னும் பெயருடன் வாசகசாலை ஒன்றை நிறுவினர். பலருக்குத் தரும கலியாணஞ் செய்து வைத்தார். உயர்தரப் பாடசாலைகளிலும் கலைக்கழகங்களினும் கல்வி பயிலும் மாணுக்கர் பலருக்குப் பலவகையிலும் உதவிகள் செய்தார். திருச்சிராப்பள்ளியில் தாய் தகப்பனில்லாப் பிள்ளைகட்கென ஏற்பட்ட தருமபாடசாலைக்குத் தக்கவாறு பொருளுதவி செய்தார்.

காசி, திருத்தில்லை, திருக்காளத்தி, சீகாழி, திருமா ணிகுழி, பேரையூர், புதுக்கோட்டை, திருக்கோகர்ணம் திருமெய்யம் முதலிய சிவப்பதிகளில் அகண்ட தீபம், குழித்தளிகை, கஞ்சித்தொட்டி, நந்தவனம், பசுமடம் முதலிய பல அறங்களை இயற்றினர்.

## விலங்குகட்கு

வண்டிமாடுகளும் குதிரைகளும் நீர் வேட்கை போக்கிக் கொள்ளுமாறு புதுக்கோட்டை, மஞ்சக்குப்பம், புதுப்பாளையம், திருப்பாதிரிப்புலியூர் முதலிய நகரங் களில் ஆங்காங்கு தண்ணீர்த் தொட்டிகள் ஏற்படுத்தினர்

## இலண்டன் சங்கத்து அங்கத்தினர்

இலண்டனில் 'இராசீய தொழிலமுறைச் சங்கம்' என்னும் பெயருடன் சங்கம் ஒன்று உள்ளது வாணி கம் கைத்தொழில் பயிர்த்தொழில் முதலியவற்றுள் ஏதேனும் ஒன்றில் மிகவல்லுநராக விளங்குவோர் அச் சங்கத்தின அங்கத்தினராதற்குத் தகுதி யுடையவராவர். ஐந்து கண்டங்களினும் தகுதியுடையார் இருப்பதாகத் தெரியின் அச்சங்கத்தினர் அங்கத்தினராகச் சேர்த்துக் கொள்ளுவர். நாச்சியப்ப செட்டியாருடைய பெருமை யையும், பெருங்கொடையையும், வாணிகத்திறமையை யும், அறிவு நுட்பத்தையும், சென்னைக் கவர்னர் மேற்படி சங்கத்தாருக்குத் தெரியப்படுத்தினர். 1915 ஆம் ஆண்டில் அச்சங்கத்தினர் இவரை அங்கத்தினராக (F. R. S. A.) அறிவித்தனர். நாட்டுக் கோட்டைச் செட்டியார்களுள் இவரே அப்பதவியை முதன் முதலைப் பெற்றவர். இவர் இவ்வாறு அப்பதவியை அடைந்தது செட்டியார்கட்கு மிகுந்தமகிழ்ச்சியைக் கொடுத்தது.

## புலவர்கட்கு நன்கொடை

நாச்சியப்ப செட்டியாருடைய தான தருமங்களை யும் திருப்பணி முதலிய அறச்செயல்களையும் கண்ட புலவர்கள் பலர் செட்டியாருடைய மாண்பையுஞ் சீர்த்தி யையுந் தீஞ்சுவை மிக்க பாடல்களாற் பாடிச் சென் றனர். பாடிச் சென்றவர் பாடாமற் சென்றவர் முதலிய யாவர்க்கும் இவர் நன்கொடைகள் வழங்கிச் சிறப்புச் செய்தார்.

## இறுதி

இவ்வாறு பெருவள்ளலாக விளங்கிய இவர் சில நாள் உடல் நலங்குன்றியிருந்து 1921 ஆம் ஆண்டு சூலைத்திங்கள் இருபத் தொன்றும் நாள் (துன்மதி யாண்டு ஆடித்திங்கள் ஆறும் நாள்) தமது எண்பத் தொன்றும் அகவையில் தம் அருமைப் புதல்வராகிய முத்தைய செட்டியார் மடிமீது முடிசாய்த்து இறைவன் திருப்பெயரைக்கூறி உடல் முழுதும் நீறணிந்து கங்கை நீரையுட்கொண்டு சாவுத்துன்பஞ் சிறிதும்இல் லாமல் இறைவன் திருவடி நீழலை அடைந்தார். அன்று திருக்கோயில்களில் சிறப்புவிளக்குகள் ஏற்றப்பட்டன. கங்கை முதலிய ஏழு நல்வினை யாற்று நீரால் உடல் முழுக்காட்டப்பெற்றது. அன்றும் அறங்கள்பலசெய்யப் பெற்றன. சந்தனக் கட்டையில் உடல்கிடத்தப் பெற்று வெட்டிவேர் சந்தனச்சேறு பனிநீர் முதலியவைகளால் மூடப் பெற்றுத் தீக்கடவுளுக்கு இரையாக்கப்பட்டது.

## குணநலன்கள்

"ஏதிலா ராரத் தமர்பசிப்பர் பேதை, பெருஞ் செல்வம் உற்றக் கடை" என்றார் திருவள்ளுவர். நாச்

சியப்பர் தம் உறவினர் அனைவரையும் சூழவிருக்கச் செய்து போற்றினார். பெருமை பாராட்டுவது இவருக்குப் பிடிக்காது. தமது செல்வ நிலைக்கேற்றவாறு ஆடம்பரத்தை மேற்கொள்ள மாட்டார். நடந்து செல்வது சிறுமையன்று என்று செல்லக்கூடிய இடங்கட்கு நடந்தே செல்வார். தம்மையடுத்துத் தொழில் புரிவோர் குற்றம் புரியினும் அக்குற்றத்தைப் பெரிதாக மதித்துப் பாராட்டார். நோயுற்றால் அதனைத்தீர்க்கத் திருவருட்டுணையே சிறந்ததென்று எண்ணி மருந்துகளைக் கூடியவரை விலக்கினார் எப்பொழுதும் ஏதேனும் ஒருவேலையைச் செய்துகொண்டே யிருப்பார். இவர் சோம்பியிருந்ததை யாரும் பார்த்ததில்லை.

" ஒருவன திரண்டு யாக்கை
ஊன்பயில் நரம்பின் யாத்த
உருவமும் புகழு மென்றாங்
கவற்றினூழ் காத்து வந்த
மருவிய உருவம் இங்கே
மறைந்துபோம் மற்ற யாக்கை
திருவமர்ந் துலகம் ஏத்தச்
சிறந்துபின் நிற்கும் அன்றே."

சூளாமணி.

## கசு. முறையூர் சண்முகஞ் செட்டியார்

### தோற்றம்

பாண்டிவள நாட்டிலே கொடுங்குன்றம் என்னும் பிரான்மலைக்கு அண்மையில் உள்ள முறையூரிலே 1875 ஆம் ஆண்டு சனவரித் திங்கள் இருபத்தாறும் நாள் சண்முகஞ் செட்டியார் பிறந்தார். குலம் நாட்டுக் கோட்டைத் தனவைசியர் குலம். இவருடைய தந்தையார்பெயர் இராமன் செட்டியார். இராமன் செட்டியாருடைய தமையனார் சின்னையச் செட்டியார். சின்னையச் செட்டியாருக்கு ஆண்மக்கட் பேறில்லையாகையால் சண்முகஞ்செட்டியார் தம்முடையபெரியதந்தையாருக்கு வளர்ப்புமகனானார்.

### கல்வி

சண்முகஞ் செட்டியார் உரிய காலத்திலே கல்வி கற்கத் தொடங்கினார். மிகுவிரைவாகக் கற்று நல்ல புலமையடைந்து சிறந்து திகழ்ந்தார்.

### கலைப்பணி

செட்டியார் கலைப்பணியிலே ஆர்வஞ் செலுத்தினார். செட்டியாரிடம் செல்வம் சிறந்து விளங்கியது. செல்வத்துப்பயன் ஈதலாதலால் வறிஞர்கட்கு வள்ளலாக வழங்கினார். கொட்டாம்பட்டி என்னும் ஊரில் கருப்பையாப் பாவலர் என்னும் புலவர் ஒருவர் இருந்தார். அவரைத் தமது அவைக்களப்புலவராக அமைத்துக்கொண்டு நூலாராய்ச்சி தமிழ்த்தொண்டு முதலிய வைகளிலே ஈடுபட்டார். திருப்போரூர்த் திரிபந்தாதி திருப்போரூர் ஆண்டவர் வண்ணங்கள், நாமகள்

இரட்டைமணி மாலை, திருஞான சம்பந்தமாலை, திருக் கோட்டாற்றுக்கலம்பகம், முறையூர்ப் பிரபந்தத்திரட்டு, குமண சரித்திரம் முதலிய பல நூல்கள் அச்சாகி வெளிவரச் செய்தார்.

## புலவர்கள்

இவருடைய காலத்திலே சே. ரா. சுப்பிரமணியக் கவிராயர், மு. ரா. அருணாசலக் கவிராயர், மு ரா. கந்தசாமிக் கவிராயர், மகிபாலன் பட்டி பண்டிதமணி மு. கதிரேசச்செட்டியார், சோழ வந்தான் அரசன் சண்முகனார், பீமகவிப்புலவர், செம்பூர் வித்துவான் ஆறுமுகஞ் சேர்வை முதலிய புலவர்கள் புகழுடன் விளங்கியிருந்தார்கள். இவர்களுடைய கூட்டுறவுஞ் செட்டியாருக்கு ஏற்பட்டது. மதுரைத் தமிழ்ச் சங்கத்திலும் தொடர்பு கொண்டிருந்தார்.

## புலவர்கட்கு கொடை

வறுமையால் வாடிய புலவர்களும் வேறுவகையால் துன்புற்ற புலவர்களும் சண்முகஞ்செட்டியார் மீது செய்யுட்கள் பாடிக்கொண்டு வந்து தக்கவாறு நன்கொடை பெற்றுச் சென்று செட்டியாருடைய புகழ் எட்டுத் திக்குகளினும் எட்டுமாறு செய்தார்கள். சே. ரா. சுப்பிரமணியக் கவிராயர் செட்டியாரைப் பார்க்கவந்த பொழுது பின்வருஞ் செய்யுள்களைப் பாடிக்கொண்டு வந்தார்.

"சீர்கொண்ட சேறையம் பதியிலுயர் நீதியில்
சிவபத் தியிற்பெ ருமைசேர்
செல்வன்முத் துச்சாமி துரையவன் சேயெனத்
திகழ்பா ரதத்துரை யெலாம்

தேர்ந்தசுந் தரதாசு துரையவன் செம்மலாஞ்
சேவகப் பாண்டி யனெனச்
செப்புமொழி மாருவ ரிச்சந் திரன்சீர்
செழித்தவிம் மூவ ருக்கும்
சேர்வித்து வான்கவி மழைப்புயல் எனப்புலவர்
தெரிராம சாமி கவிஞன்
சிறுவர்களில் நடுவாக வந்திப முகற்கிளைய
தேவன்நா மம்பு னைந்து
செகமதில் விளங்கும்நாம் எழுதிவிடு பாசுரம்
தென்கயிலை கோமுத் தியாச்
சிந்தைகொண் டுற்றன்ப ருக்கருள உமைமேவு
திருவுரு மறைத்து மனிதப்
பேர்கொண்ட வடிவுற்ற தேசிக னெனச்சொல்சுப்
பிரமணிய குருசா மிதன்
பின்னமசி வாயதே சிகனுதவு கல்வியைப்
பெட்பினவ் வாதீ னம்வாழ்
பெரியவடி யாரேனை யோர்கட்கு நன்குகற்
பிக்கவேண் டுமென வோதப்
பிறங்குமவ் வாக்கின் படிக்கவ ணிருந்துபல
பேர்க்குமே கற்பித் தனம்
பீடுபெறும் அவர்களில் பலர்கலா சாலையில்
பேசுபண் டிதரா யினர்
பின்னரிது நிற்கமீ னுட்சிசொக் கேசரடி
பேணியென் றும்பணி குவோம்
பெறுநன்றி யிலர்பிதா சோதரர்க ளாயினும்
பெரிதுள் வெறுத்து விடுவோம்
பிசியுரைக் கிமலஃதுரைப்பார்கண் அன்பிலோம்
பிங்கலன் போற்செல் வராய்.

ஏர்கொண் டிருக்கினும் கல்வியறி வில்லரேல்
　　எள்ளளவும் என்றும் மதியோம்
இயம்புமுன் பின்னுள்ள கவிஞர்போல் பொருள்வேண்டி
　　எவர்மீதும் நற்கவி சொலோம்
இன்னும்நாம் கற்றநூல் யாவுநம் பாற்கற்பர்
　　ஏவரென எண்ணு கின்றோம்
இனியசிவ பத்தியால் கல்வியால் நற்குணத்
　　திசை நண்பி னுற்றன்னை நேர்
இல்லையிந் நாள்மன்ன வர்க்குளென வந்தபாண்
　　டித்துரைதென் மதுரை தன்னில்
இரீஇயநான் காஞ்சங்க மதனிற்க லாசாலை
　　யினிலெவரு மெச்சும் வண்ணம்
இருபொருட் சைவநூற் பரிசோ தகப்பெயரை
　　யீந்துவைத் தானென் றுமே
இதுவரையும் ஓரேழு வருடமா யினதவண்
　　இருந்துவாழ் கின்றே முயர்
தார்கொண்ட சோலைசூழ் அரிமழந் தனிலிருந்
　　தருளுமீ னுட்சி பிள்ளைத்
தமிழெனும் பிரபந்தம் அதுவொன்று செய்தனம
　　தனையரங் கேற்றி வந்தோம்
தயையுடன் தருதலால் தருமன்மிகு பொறுமையால்
　　தருமன்மாப் போக மதனுல்
தருமனு வலர்புகழ் தருமன்மிகு புண்ணியத்
　　தருமன்பி னுலு ரைக்கத்
தக்கவன் தானென்று முறையூரார் போலெத்
　　தலத்தாரும் ஏத்து கின்ற
தகைமையோ னெனவணிகர் திலகமாயுறுதலால்
　　சார்ந்துனைக் காண வந்தோம்

சண்முக வசீகர குஞ்சுகர தயாபர
சலாபசந் தான வள்ளால்
தருபுண் ணியம்புகழ் உனக்கெய்தி நிலவித்
தழைக்குமுல குளமட் டுமே ”

(அ—ரை.) கோமுத்தி - திருவாவடுதுறை பிசி — பொய். பிங்கலன் — குபேரன். சைவநூற்பரி சோதகர்— 1 சைவநூற் பரிசை ஓதும் அகத்தையுடையவர் 2 சைவநூலைப்பரி சோதிப்பவர். தருமன் — 1 தருகின்றமன். தருமராசன் ௨ இந்திரன்.

“ மானிடராய் வரலரிது வடிவுகுணம்
கல்விசெல்வம் வந்துற் றாலும்
தானமுஞா னமுஞ்சிவநே சமும்பெறுதல்
அரிதாமித் தனையி லொவ்வொன்
றேனையமாப் பிரபுவென்பா ரெய்தினர் நீ
யிவையெல்லாம் எய்தப் பெற்றாய்
ஆனதனல் முறையூர்ச்சண் முகவேளிந்
நாளுன்பேர் அதிகந் தானே.

எல்லார்க்கும் எலாங்கொடுப்பான் முறையூர்ச் சண்
முகவேளென் றிசைப்பர் அந்தச்
சொல்லாகும் முற்றும்மை ஒரோவழிஎச்
சப்பொருளும் தோன்றும் என்ன
நல்லார்சொல் இலக்கணத்தின் படியமிழ்தத்
தமிழறிந்த நன்று வல்லீர்!
பொல்லாத பகைவர்வரில் புறங்கொடான்
என்றுநாம் புகலு வோமே.

உலகுபணி சிவனுரை யிரவலரை
மருவலரை உரிமை யாக
நலமருவு நல்லாரை அன்பினுற்
கருணையினுல் நவில்கோ பத்தால்
பலமுதவு மகிழ்ச்சியினுல் பார்க்குமறு

மாதர்களைப் பரிசுற் றலும்
மலமருவப் பாராது முறையூர்ச்சண்
முகவேள்கண் ணுமென் பாரே.
மன்னுமா தவனெனலான் மன்மதனைப்
பெறலாகு மருவு கல்வி
அன்னபண வரவுமே லுறலானம்
பால்நேயம் ஆர்த லாலப்
பன்னுபொறை மேற்கொள்கையால் முத்தமிழார்
கலியகற்றும் பான்மை யாலே
தென்னவனு முறையூர்ச்சண் முகவேளை
முகுந்தனைப் போற் செப்ப லாமே."

(அ—ரை) இதில் முகுந்தனைக் குறிக்குமிடத்து, மாதவன்—திருமகள் தலைவன், மன்மதன்—மாரன். பணவரவு—படத்தை யுடைய பாம்பு. அம்பானேயமார்தல்—அழகிய பாலும் நெய் யும் உண்ணுதல். பொறைமேற் கொள்கை—மலையைக் குடை யாக மேற் கொண்டகை. ஆர்கலியகற்றல்—கடலைவற்றச் செய்தல் : பாட்டுடைத்தலைவனைக் குறிக்குமிடத்து உமாதவன் எனலால்—உமாதவன் என்று போற்றுதலால். மன்மதன்—மிக்கவலி. பணவரவு—பொருள் வருவாய். நம்பால் நேயம் ஆர்தல்—நம்மிடத்து அன்புநிறைதல் பொறைமேற் கொள்கை —பொறுமையை மேற்கொண்டிருத்தல், கலியகற்றல்—வறு மைமை நீக்கல் எனவும் பொருள் கொள்க.

இச்செய்யுள்களைச் சண்முகஞ் செட்டியார் கேட்டு மகிழ்ந்தார். அவர் கவிராயரைப் பார்த்து, "நான் உங்களைப்பற்றி நீண்டகாலமாகவே கேள்விப்பட்டிருக் கிறேன். உங்களுடைய பெருமையையும் உங்களுடைய தமையனாராகிய அருணசலக்கவிராயர் அவர்களுடைய பெருமையையும் இங்குவருகிற புலவர்கள் எல்லோரும்

மிகவும் பாராட்டுதலைக் கேட்டுமகிழ்ந்து உங்கள் இரு வரையும் என்னிருகண்மணியாக நினைத்துப் பாராட்டிக் கொண்டிருக்கிறேன். இன்று உங்களைக்காணநேர்ந்தது பற்றி மிகவும் மகிழ்கிறேன்" என்று கூறிப்பாராட்டிய தோடு நன்கொடைகள் வழங்கிச் சிறப்புச் செய்தார். செட்டியார் செயல் கவிராயருக்கு மிகுந்த மகிழ்ச்சியை அளித்தது அவர் மீண்டும்;

"என்னையும்என் தமையனையும் உன்னிருகண்
மணியாக இசைத்தாய் யாங்கள்
உன்னுசிந்தா மணியாக உன்னையிந்த
உலகமெலாம் உரைக்கின் றேமால்
இன்னவகை நண்புகொண்ட செல்வமுறு
வணிகரையும் எந்த நூலும்
பன்னுகவி வாணரையும் கண்டிலஞ் சண்
முகமுறையூர்ப் பதிக்கோ மானே"

என்று பாராட்டிப் பாடினர்.

## திருமணம்

சண்முகஞ் செட்டியார்க்கு 1901 ஆம் ஆண்டு (பிலவ) வைகாசித்திங்கள் இருபத்து மூன்றும் நாள் திருமணம் நடைபெற்றது. மணமகளாக அமைந்த மாதரசி முறையூர் அருணசலஞ் செட்டியாரவர்கள் திரு மகள் செல்வி உண்ணமுலையம்மை, திருமணம் பெருஞ் சிறப்பாக நடைபெற்றது. பல புலவர்கள் திருமண வாழ்த்துக் கூறினர். அத்திருமணச் சிறப்பைப் பற்றிக் கொட்டாம் பட்டிக் கருப்பையாப் பாவலர்;

"மதுரையை நிகர்த்த முறைசைமா நகரின்
மகிழ்வொடு மணந்தவெங் கோமான்
குதிரையி லேறி வந்ததோர் பவனிக்

கோலம்மா தசரதன் மதலை
மிதுலையின் மறுகில் சனகியை மணந்து
விளங்குலாப் போந்ததை நிகர்க்கும்
இதுவரை இந்த வகையுலாப் போந்தார்
எவர்கொலோ இப்புவி யிடத்தில்

மங்கல முகூர்த்த மணவிழாச் சிறப்பை
வழுத்துதற் கெளிதன்று யினுநான்
இங்குநேர் கண்ட தினிற்சிறி துரைப்பன்
இயல்வல்லீர் மகிழ்வொடு கேண்மின்
தங்குபொன் னிந்த்ர விமானமோ தனதன்
தனதுபுட் பகவிமா னமதோ
எங்கள்பூ மான்றன் மணவிழாக் காட்சிக்
கெய்தியாங் கிலங்குமண் டபமே.

அன்னமுஞ் சொனமும் ஆடையும் வந்தோர்க்
கன்பொடு கோடிகோ டியதாய்
இன்னமு தெனவே ஈத்துவந் திடுபே
ரின்பதை யியம்புதற் கெளிதோ
முன்னர்சண் முகவேள் தெய்வகுஞ் சரியை
முறையொடு மணந்துல கினிலே
நன்னய இன்பங் காட்டக்கண் டாங்கு
நாங்கண்டு களித்தது நலமே."

என்று பாராட்டிப் பாடியுள்ளார்.

## கோயில் திருப்பணி

முறையூர்க் கோயில் திருப்பணியைச் சண்முகஞ் செட்டியாரின் தந்தையார் செய்யத் தொடங்கிச் செய்து கொண்டிருந்தார். திருப்பணி நிறைவேறுவதற்குள் அவர் காலமானபடியால் செட்டியார் அத்திருப்பணி

யைத் தொடர்ந்து நடத்தி முடித்துச் சிறப்பாகக் குட முழுக்கும் நடத்தினர்.

## அறச்சாலை

முறையூருக்குத் தெற்கே மூன்று கல் தொலைவில் உள்ள சத்துருசங்காரக்கோட்டை என்னும் ஊரில் அறச்சாலை கட்டி அதில் வழிச் செல்வார்க்கு உண விடுவதற்கும் ஏற்பாடு செய்தார். இந்த வகைகளுக்கு மூன்றரை இலட்ச ரூபாவரையில் செலவு செய்தார். மதுரை மாவட்டத்தைச் சேர்ந்த மேலூரில் செல்வர் சூப்ளி மண்டபங் கட்டுவதற்கும் மதுரைப் பெரிய மருத்துவசாலையில் மகப்பேற்று விடுதியமைக்கவும் பெரும் பொருள் வழங்கினர்.

## புலவரைப் போற்றுதல்

இவரிடம் செய்யுள் பாடிப் பரிசு பெற்ற புலவர் களுக்குக் கணக்கு வழக்கில்லை. புலவர்கள் தமக்குப் பொருட் கவலையேற்பட்ட போதெல்லாம் இவரிடமே வந்தனர். முதுகுளத்தூர் ஆறுமுகம் பிள்ளை யென்பவர் சரவணப் பெருமாட் கவிராயரிடம் கல்வி கற்றவர் சிறந்த அறிவாளி. ஊழ்வினை வயத்தால் இவர் நோயும் பாயுமாகவே கிடந்தார். அப்பொழுது பொரு ளுதவியை நாடி;

" கண்முகம்போல் பாவாணர் களைநோக்கும்
கருணைமலர்க் கற்ப கக்கைச்
சண்முகவே ளிடத்தடைந்தென் சஞ்சலமும்
படுக்கையிலே சார்ந்த வாறும்
பண்முகமா யவன்சமுக நற்சமயம்
பார்த்துரைத்துப் பரிசு பெற்று

வண்முகமா யுத்தரவு வாங்கி யென்பால்
சீக்கிரத்தில் வருதி மானே."

என்னுஞ் செய்யுளை எழுதியனுப்பினர். பிறகு ஒரு முறை இந்தப் புலவருடைய இல்லத்திலே தீப்பிடித்து வீடு முழுதும் எரிந்து பொருள்கள் முற்றும் அழிந்து போயின. அப்பொழுது ;

"இந்தமதி யீரைந்தாந் தேதி யந்தோ
என்வீட்டில் தீப்பிடித்தே இடை விடாமல்
வெந்ததனுல் சாமான்கள் எல்லாம் வெந்து
வேட்டிவெந்து சேலைவெந்து வெறும்வீ டாக்கிச்
சந்தியிலே விட்டுவிடத் தேம்பித் தேம்பித்
தாரமழ மக்களழச் சார்ந்தோர் ஏங்க
வந்திடுமித் துயர்சகிக்க முடியா தாகி
வள்ளால்நின் இடத்திலிதை வழுத்தி னேனே.

தீப்பிடித்த என் குடிலைச் செத்தையினுல் மூடுதற்கும்
மாப்பிடித்த மார்பா வழியுமிலை—யேய்ப்புமிலை
எந்தமட்டில் சித்தம் இரங்குமோ நாயேனுக்
கந்தமட்டும் போதும் அருள்.

சேயும்மனை யும்நானும் சேர்ந்தழத் தீப்பிடித்துப்
பாயுந் துணிமணியும் பாழாக்க—நோயும்
தணியாது நெஞ்சந் தளர்வேற்கே தேனும்
மணியார்டர் செய்தனுப்பு வாய்."

என்னுஞ் செய்யுட்களை எழுதியனுப்பினர். சிவ கங்கைப் பிரிவிலுள்ள செம்பூர் வித்துவான் ஆறுமுகஞ் சேர்வை என்பவர் சிலகாலம் சண்முகஞ் செட்டியார் சமுகத்தை அடுத்திருந்து நல்ல உதவிகள் பெற்றுர். அவர் சண்முகஞ் செட்டியாரைப் பாராட்டிப் பாடிய பாடல்களில் இரண்டு அடியில் வருகின்றன.

"மல்லோங்கி மதியோங்கி மதிக்கும் நல்ல
வனப்போங்கி மகிழோங்கி வண்மை யோங்கிச்
செல்லோங்கிப் பொழியவரு விளைவை யீட்டிச்
செருக்குற்ற தொழுவர்மன்னித் திகழும் வேதச்
சொல் லோங்கி ஒலிக்கின்ற முறையூர் வாழும்
துரையே நீ கொடுத்தபொருள் தனக்குத் தூய
நெல்வாங்கி வீடுகொள்ள நிறைத்தேன் அன்றே
நெடியபசிப் பிணியும் விட்டு நீங்கிற் றம்மா.

உற்றதுணை சிறிதுமிலாச் சுற்றத் தாரும்
உயர்நலமே புரியாத ஊரில் உள்ள
மற்றவரும் பகையாகிக் கெடும்பே செய்ய
வலியிழந்து மதியிழந்து மயக்க மார்ந்
அற்றமதி லேயெனக்குஞ் சட்டை பண்ணி
அளித்தன்போ டப்பாநீ போய்வா என்னச்
சொற்றமொழி அருமைதனை நினைந்தே நாளும்
துதிக்கின்றேன் தொழும்புசெய மதிக்கின் றேனே."

வயி. நாக. ராம. இராமநாதன் செட்டியார் என்பவர் சண்முகஞ் செட்டியாருக்கு ஆருயிர் நண்பராக அமைந் திருந்தார். ஒருசமயம் சண்முகஞ் செட்டியார் முதுகில் கட்டியொன்று புறப்பட்டது. அக்கட்டி செட்டியாரைச் சின்னாள் வருத்திப் பிறகு நீங்கியது. இச்செய்தியைப் பிறகு உணர்ந்த இராமநாதன் செட்டியார்;

" விண்முகமெல் லாம்புகழும் வீயாக் கொடைபடைத்த
சண்முகநண் பாதின் தனியுடம்பில்—புண்முகமாய்
ஓர் சிரங்கு தோன்றி உறுத்தியதிந் நாள் காறும்
ஆர்சொலவுங் கேட்டேன் அலேன்.

அங்கயற்கண் அம்மை அணையுமண வாளன்அடிப்
பங்கயத்தை அர்ச்சனைசெய் பான்மையால் - துங்கமிகு

சாந்துபட்டர் சொல்லச் சவுக்கியங்கேட் டுக்களித்தேன்
சந்தவருக் குண்டோ இடர் ? "

என்னுஞ் செய்யுட்களை எழுதியனுப்பினர்.

## முடிசூட்டு மெடல்

1911-ஆம் ஆண்டில் ஐந்தாம் சார்ச் அரசருக்கு தில்லி மாநகரில் முடிசூட்டு விழா நடைபெற்றது. அப்பொழுது இவருக்கும் அழைப்பு வந்தது. முடிசூட்டு விழாவுக்குச் சென்று அதிற் கலந்து கொண்டார். அதன் நினைவுக் குறியாகச் செட்டியாருக்கு மெடல் வழங்கப்பட்டது.

## தனிச்செய்யுட் சிந்தாமணி

புலவர் பெருமக்கள் அவ்வக்காலங்களில் பாடிய தனிப் பாடல்களை ஒன்றுபடுத்தி ஒரே புத்தகமாகச் செய்யவேண்டும் என்னும் எண்ணம் முதன் முதலில் பொ. பாண்டித்துரைத் தேவருக்கு உண்டாகியது. அதன் பலனாய்த் தனிப்பாடல் திரட்டு இரண்டு பாகங்கள் வெளியாயின. அவை பொதுமக்களால் நன்கு விரும்பி வரவேற்கப்பெற்றன. அதன்பின் சண்முகஞ் செட்டியார் கொட்டாம்பட்டி கருப்பையாப் பாவலரைக் கொண்டு, முன் தனிப்பாடல் திரட்டில் மேலும் பல பாடல்களைச் சேர்த்துத் தனிச் செய்யுட் சிந்தாமணி என்னும் பெயரோடு அதனை வெளியிட்டார். அதற்குப் பின் பாடப்பட்ட மற்றைப் பாடல்களையும் திரட்டி நூலைப் பெரிதாக்கி ஒரே புத்தகமாக வெளியிடுமாறு மு. ரா. கந்தசாமிக்கவிராயரைக் கேட்டுக் கொண்டார். கந்தசாமிக் கவிராயரும் அவ்வாறே பாடல்களை மேலுந் திரட்டி 3815 பாடல்களாக்கி 1908-ஆம் ஆண்டில்

இரண்டாம் பதிப்பாக வெளியிட்டார். அந்நூல் 182 புலவர்களுடைய தனிப்பாடல்களைக் கொண்டதாகச் சிறந்து விளங்குகிறது. இவ்வாறு செட்டியார் தமிழ் மொழிக்கும் தமிழ்ப் புலவர்கட்கும் செய்த நன்மைகள் பல.

## இறுதி

செட்டியார் புலவரைப் புரக்கும் புரவலராக விளங்கியிருந்து 1930-ஆம் ஆண்டு ஜூலைத் திங்கள் ஒன்பதாம் நாள் இவ்வுலக வாழ்வைத் துறந்து இறைவன் திருவடி நிழலையடைந்தார்.

## பிற்கால நிலை

இப்போது செட்டியாரின் வழி முறையினரும் உறவினரும் உள்ளனர். சண்முகஞ் செட்டியாரின் இளவல் கருப்பஞ் செட்டியார். கருப்பஞ் செட்டியாரின் திருமகன் இராமசாமிச்செட்டியார். இவர் வள்ளலின் வழி முறையினர்க்கேற்ற குண நலத்துடன் திருவாதவூரடிகள் தோன்றியருளிய திருவாதவூரிலே அருள் நெறித் திருக்கூட்டம் அமைத்து அதற்குத் தலைமை தாங்கித் தொண்டாற்றிச் செந்நெறியில் சீரிய முறையில் வாழ்க்கை நடத்துகிறார். வள்ளலின் வழி முறையினர் வளத்துடன் சிறந்து வாழ்க.

[இவ்வரலாற்றுக் குறிப்புகள்மேற்படி திரு. இராமசாமிச் செட்டியார் அவர்களால் எழுதியனுப்பப் பெற்றன.]

# தமிழ்நாட்டு வள்ளல்கள்

[இரண்டாம் புத்தகம்]

## க. தீ. நா. முத்தைய செட்டியார்

### பிறப்பு

முன்பு புதுக்கோட்டைத் தனியரசைச் சேர்ந்திருந்த இராமச்சந்திர புரத்தில நாச்சியப்ப செட்டியாரின் அருந்தவப் புதல்வராக முத்தைய செட்டியார் 1883- ஆம் ஆண்டு ஜூலைத் திங்கள் இருபத்தேழாம் நாள [சுபானு ஆண்டு ஆடித் திங்கள் பதின்மூன்றும் நாள் பரணியில்] பிறந்தார். தாயார் பெயர் உமையம்மை.

### கல்வி

ஐந்தாம் ஆண்டில் முத்தையா பள்ளிககுஅனுப்பப் பெற்றார். அப்பொழுது மற்றைப் பிள்ளைகளைப் போல், விளையாட்டிலும் வீண் பேச்சிலும் இவர் ஈடுபடாமல் மிகு கருததுடன் கல்வியைக் கற்றார். உரிய காலததிற் பள்ளிக்குச் செல்வதும் அங்கு ஆசிரியர் கற்பித்த பாடங்களைப் படிப்பதும் குறித்த காலத்தில் வீடு செல்வதும் எப்பொழுதும் ஏடுங்கையுமாகவேயிருந்து படிப்பதுமே இவருடைய வேலைகளாக இருந்தன. இதனால் இவர்மிகவிரைவில் கல்வியை நன்றாகக்கற்றுக் கொண்டார். கல்வியறிவிற் றந்தையினும் சிறந்து விளங்கினார். "மகனறிவு தந்தையறிவு" என்பர் பெரி

யோர். அம்மொழி முத்தைய செட்டியாரிடம் நன்கு பொருந்தி விளங்கியது.

## திருமணம்

இவருக்கு அகவை பன்னிரண்டு நடந்தபொழுது முதன் முறை திருமணம் நடைபெற்றது. மணமகளின் பெயர் உண்ணுமுலை. மணமானபின் தொழில் முறைகளையெல்லாம் நன்கு பயின்று தம் தந்தையாருடைய தொழில்களை மேற்கொண்டார். இவர் வாணிகத் திறமை நன்கு அமைந்தவராக விளங்கினர். வணிகர்களிடம் அவர்கட்குத் தக்கவாறு பேசும் வன்மை இவரிடம் மிகுந்திருந்தது. ஆகவே தந்தையார் ஈட்டிய பொருளை மேன்மேலும் பெருகச் செய்தார்.

## அறச்செயல்கள்

தந்தையார் இயற்றிய அறச்செயல்களையெல்லாம் தாம் நன்கு பாதுகாத்ததுடன் தாமும் பல அறச்செயல்களை மேற்கொண்டார். இவர் அறஞ்செய்கையில் பலரும் அறிந்துகொள்ளுமாறு செய்யார். வலது கை வழங்குதலை இடதுகை உணர்ந்து கொள்ளாதவாறு செய்வார். முகிலானது உலகத்திற்கு நீர் வழங்கும் போது அஞ்சத்தக்கவாறு இடித்து முழங்கி மக்களை அச்சுறுத்தி வழங்கும். ஆனல் இவர் வன்சொல்லோ முகக் கடுகடுப்போ இல்லாது இனிய முகத்துடன் நோக்கி அன்புடன் வழங்குவார். தாய் தந்தையர்க்குரிய பணிகளைப் பணியாட்களைக்கொண்டு புரியாது தாமே புரிந்து மகிழ்வார். ஐரோப்பியப் போர் நிகழ்ந்த சமயத்தில் நம் நாட்டில் விளைவின்மையால் வற்கடம் ஏற்பட்டது. செல்வர்களும் வறியவர்களும் நெல்லும்

அரிசியும் பெருது அல்லலுக்காளாயினர். அப்பொழுது முத்தைய செட்டியார் உள்ளம் இரங்கினர். தமது களஞ்சியத்தில் இருந்த நெல் முழுவதையுங் குறைந்த விலைக்கு விற்ருர். இரங்கூன் முதலிய இடங்களில் இருந்து அரிசியை மிகுதியாகத் தருவித்தார். வாங்கிய விலைக்குங் குறைவாக விற்று நல்வினையையே ஊதிய மாகப்பெற்ருர். இவர் தகுந்த சமயத்தில் செய்த பேருத வியை எல்லோரும் பாராட்டினர்.

## சிறப்பு

இவருடைய குணம், அறம் முதலியவைகளை நன் குணர்ந்த புதுக்கோட்டையரசர் பிரகதம்பாதாச ராசா, சர். மார்த்தாண்ட பைரவத் தொண்டைமான் பகதூர்; இனிமேல் முத்தையா செட்டியாரவர்கள் நீதி மன்றங் களுக்கு நேரில் வரவேண்டியதில்லையென்றும் உடன் பாடு பெற்றவர் ஒருவரை அனுப்பி வைத்தாற் போது மென்றும் கட்டளையிட்டு இச்செய்தியை எங்கும் தெரி யப்படுத்தினர். இதனல் புதுகோட்டைச் சீமையில் இவருடைய மதிப்புஞ் செல்வாக்கும் மிகுதிப்பட லாயின. 1913 ஆம் ஆண்டில் புதுக்கோட்டை மன் னருக்கு நடந்த ஆண்டுக் கொண்டாட்டத்தில் முத்தையா செட்டியாரை நாட்டின் முதன்மையான அரச உரிமை நேயர்களில் ஒருவராகத் தேர்ந்தெடுத்த தோடு, வெடிக்குண்டுக் கருவியை உரிமைப் பத்திரம் பெருமலே வைத்திருக்கும் உரிமையையுங் கொடுத்தார். தீ. சொ. முரு. முருகப்ப செட்டியார் காலமான பிறகு திருப்பாதிரிப்புலியூர்க் கோயில் தருமத் தலைவர் பதவி யையும் இவரே பெற்றுக் கோயில் காரியங்களைச் சீருஞ் சிறப்புமாக நடத்தினர். ஞானியாரடிகளை ஒரு முறை

இராமச்சந்திரபுரத்திற்கு அழைத்துப் பெருந்தொகை காணிக்கை கொடுத்துப் போற்றி வழிப்பட்டுச் சிறப்புக்கள் பலசெய்தார். தாம் திருப்பாதிரிப்புலியூர்க் கோயில் தருமத் தலைவரானபின் ஐம்பெருங் கடவுளர் திருவுலா முதலியவைகளைக் காலாகாலத்திற் செய்து பேரும் புகழும் பெற்றார்.

## கலைத்தொண்டு

முத்தையா செட்டியார் புலவரல்லாவிடினும் கலை வளர்ச்சிக்குத் தம்மால் இயன்ற பணியைப் புரிந்தார். பெரியநாயகி யம்மைமீது பிள்ளைத்தமிழ் நூல் ஒன்றைக் காரைக்குடி பாலசுப்பிரமணிய ஐயர் என்பவரைக் கொண்டு இயற்றச்செய்து சிவசண்முக மெய்ஞ்ஞான சிவாசாரிய அடிகள் தலைமையில் அரங்கேற்றச் செய்தார்.

## இராமலிங்க அடிகள் அருட்பா

திருவருட் பிரகாச வள்ளலார் என்னும் இராம லிங்க அடிகள் திருவாய் மலர்ந்தருளிய திருவருட்பாப் பாடல்களை யெல்லாம் நல்ல தாளில் ஒரே புத்தகமாகப் பெரும் பொருள் செலவுசெய்து அச்சிற் பதித்துவழங் கினர். இதனால் இராமலிங்க அடிகளின் பாடல் நாடெங்கும்பரவவுஞ் சிவமணங் கமழவும்நல்லவாய்ப்பு ஏற்பட்டது. இந்நூலையே யன்றி வேறு பல நூல்கள் வெளிவருதற்கும் இவர் பொருள் உதவிபுரிந்தார்.

## தருமபூடணம்

இவருடைய அறப்பெருஞ் செயல்கள் யாண்டும் பரவவே இவருக்குத் தருமபூடணம் என்னுஞ் சிறப்புப்

பெயர் தானே வந்தியைந்தது. அரசினர் திவான் பகதூர் என்னும் பட்டமும் வழங்கினர்.

## மற்றும் பலவகை அறங்கள்

புதுக்கோட்டை அரசினர் ஏழைமக்கட்கு இல்லம் ஒன்று அமைக்க எண்ணினர். செட்டியார் முதலில் தாம் இருபதினாயிரம் வெண்பொற்காசுகள் வழங்கியதுடன் மற்றவர்களிடமிருந்தும் ஒன்றரைலட்சம் வெண்பொற் காசுகள் வரை திரட்டிக்கொடுத்து இல்லத்தைத் தொடங்கச் செய்தார். சென்னை திருமயிலை இராம கிருட்டிண மாணவர் இல்லத்திற்கும், மதுரை கிறித்துவ இளைஞர் மன்றத்திற்கும் நன்கொடைவழங்கினர். இலண்டன் மாநகரில் உள்ள அரசியல் கலைக்கழகக் கட்டிடநிதிக்கு ஐந்நூறு பொன் கொடுத்தார். கும்பகோணம் மடத்தின் கட்டிடத்திற்கு இருபத்தையாயிரம் வெண்பொற்காசுகள் அளித்தார்.

## உமையாள்புரம்

இராயவரத்திற்கும் இராமச்சந்திரபுரத்திற்கும் இடையில் உமையாள்புரம் என்னும் புதிய ஊர் ஒன்றை முந்நூறாயிரம் வெண்பொற்காசுகள் வரை செலவுசெய்து ஏற்படுத்தி அங்கு மக்கள் பலரைக் குடியேற்றினர். அங்கு அமைக்கப்பட்ட திருக்கோயிலில் தம்முடைய தாய் தந்தையர்களின் உருவச்சிலையை அமைத்தார்.

## இறுதி

அறச்செயல்கள் புரிவதில் முப்பத்திரண்டு லட்சம் வெண் பொற்காசுகள் வரை செலவு செய்தஇவருடைய

பெயர் உலகம் எங்கும் பரவியதில் வியப்பொன்றும் இல்லை. இறைவன் திருவடியிலே உறுதியான பற்றுக் கொண்ட இவர் 1936 ஆம் ஆண்டு செப்டம்பர்த் திங் களில் ஒருநாள் மாலையில் திருக்கோவிலுக்குச்சென்ருர் இறைவனைப் போற்றி வழிபட்டார். பிறகு உடலால் உருண்டு உடல்வலம் வந்தார். வரும்போதே உணர் வற்ற நிலையிற் காணப்பட்டார். உடனே இல்லத் திற்குக்கொண்டு செல்லப்பட்டார். அங்கு அவருடைய உயிர் இறைவன் திருவடி நீழலை அடைந்தது.

மக்கள் யாக்கையைப் பெற்றவர்கள் அறங்களை முறையாகச் செய்து யாக்கையின்பயனை அடைதல் வேண்டும். அவ்வாறு அடையார்களாயின் அவர்கள் யாக்கை பெற்ற பலனை இழந்தோராவர் இவ்வெண் ணம் நல்வினையாளர்களாகிய சிலருக்குத்தான் ஏற் பட்டு உடல் பெற்ற பயனை அடைகிருர்கள். அத்தகை யோருள் இச்செட்டியாரும் ஒருவர் ஆயினர்.

## உ. காசிவாசி சாமிநாதஅடிகள்

### தோற்றம்

இப்பெரியார் சோழவள நாட்டிலே தஞ்சைமா வட்டத்திலே குடந்தைக்கு அண்மையில் உள்ள கொட்டையூரிலே, கொட்டையூர்ச் சிவக்கொழுந்து தேசிகர் வழி முறையில் 1893 ஆம் ஆண்டு சூலைத்திங்கள் ஆறும் நாள் (விசய ஆண்டு ஆனித்திங்கள் உச ஆம் நாள்) பிறந்தார். தந்தையார் பெயர் சிவக்கொழுந்து தேசிகர் தாயார் பெயர் சுவர்ணத்தம்மாள்.

### முன்னோர்

அடிகளாரின் முன்னோராகிய சிவக்கொழுந்து தேசிகர் முத்தமிழ்ப் புலமை நிரம்பப்பெற்றவர். தஞ்சை சரபோசிமன்னரின் அரசவைப் புலவராகவிளங்கியவர். திருவிடைமருதூர்ப் புராணம், திருப்பெருமணநல்லூரார்ப் புராணம், கோடீச்சுரக் கோவை, தஞ்சைப் பெருவுடையார் உலா, சரபேந்திர பூபால குறவஞ்சி நாடகம், சரசக்கழி நெடில் முதலிய நூல்களை இயற்றிப் புகழ்பெற்றவர். சிலகாலம் சென்னை மாகாணக் கல்லூரியில் தமிழாசிரியராகவும் அமர்ந்திருந்தார். திருவாசகத்தை முதன்முறையாக அச்சிற் பதிப்பித்து வெளிப் படுத்தியவர் இவரே என்பர்.

### கல்வி

சாமிநாத அடிகள் தமிழறிவு சான்ற வழிமுறையில் தோன்றியவராகலின் இயற்கையாகவே தமிழறிவு

நிரம்பப் பெற்று விளங்கினர். பிறகு திருப்பனந்தாளில் பதினெட்டாம் பட்டத்தில் விளங்கிய சொக்கலிங்க அடிகளை அடுத்துப்பல தமிழ்நூல்களைப் பாடங் கேட்டார். இவருடைய பேரறிவும் பெருந்தன்மையும் சொக்கலிங்க அடிகளுக்கு மகிழ்ச்சியை உண்டாக்கின. தமக்குப்பின் காசி மடத்தின் தலைமைப் பதவியைப் பெறுதற்கு இவரே தகுதியுடையவரென்று முடிவுசெய்தார். 1922 ஆம் ஆண்டில் இவருக்குச் சின்னப்பட்டம் வழங்கப் பட்டது.

## சீர்திருத்தங்கள்

சின்னப்பட்டத்தில் அமர்ந்ததுமுதல் அடிகளார் மடத்தின் ஆட்சிப்பொறுப்புக்களை ஏற்றுக்கொண்டார். சிக்கலாக இருந்த மடத்தின் செயல்முறைகளை ஒழுங்கு படுத்தினர். ஒவ்வொரு காரியத்திற்குந் தக்க அலுவலாளர்களை ஏற்படுத்தி எல்லாக்காரியங்களும்ஒழுங்காக நடைபெறுவதற்கு ஏற்பாடு செய்தார். எல்லாச் செயல் முறைகளும் தெளிவாகவும் விளக்கமாகவும் நடைபெறலாயின.

## தமிழின்பம்

அடிகளார் மடத்தின் ஆட்சிப் பொறுப்பை மேற்கொண்டவுடன் அதில்மூழ்கி அமிழ்ந்து தமிழ்மொழியை மறந்து விடவில்லை. ஒருசிறு குடும்பக் காரியத்தை நடத்தத் தொடங்கியவர்கள் தங்களுடைய முழுநேரமும் குடும்ப அலுவல்கட்கே போதாமல் வேறொன்றையும் கவனிக்க முடியாதவர்களாகப் போய்விடுகிறார்கள், ஆனல் அடிகளார் ஒரு பெரிய அறநிலையத்தின் பொறுப்பை மேற்கொண்டிருந்தும் தமிழ் நூல்களை

ஆராய்ந்து இன்பந் துய்ப்பதிலேயே பெரும்பாலான பொழுதைப் போக்கினார். தமிழின் சிறப்பையும் இன்பத்தையும் இவர் நன்குணர்ந்தவர். கம்பராமாயணம் முதலிய நூல்களில் அடிகளுக்குப் பற்று மிகுதியாக இருந்தது. கம்பர்கவிச்சுவையை நுட்பமாக ஆராய்ந்து விரித்துரைப்பதில் அடிகளார்க்குத் தனிச் சிறப்பு அமைந்திருந்தது. இலக்கிய நூல்களில் இருந்த அரிய செய்யுட்கள் பலவும் இவருக்கு மனப்பாடமாக அமைந்திருந்தன. தம்மோடு உரையாடிக் கொண்டிருக்கும் புலவர்களோடு இனிய செய்யுட்களை அடிக்கடி கூறி மகிழ்தல் அடிகளார்க்கு இயல்பு. கலைமருத்துவர் பெரும்பேராசான் உ. வே. சாமிநாதையர் அடிகளாரின் புலமை நலத்தை அடிக்கடி பாராட்டி மகிழ்வர்.

## தமிழுக்கு நன்கொடை

ஒவ்வோராண்டிலும் சென்னைப்பல்கலைக் கழகப் புலவர் தேர்வில் முதல்வராகத் தேறுவோர் ஆயிரம் வெண் பொற்காசுகளை நன்கொடையாகப் பெறுதலை எல்லோரும் உணர்வர். அந்த நன்கொடை இந்த அடிகளாரால்தான் ஏற்படுத்தப்பட்டது. தமிழ்மொழிப் பயிற்சியில் எல்லோரும் தளரா ஊக்கங்கொண்டு கற்க வேண்டும் என்னும் நோக்கத்துடனேயே இந்தநன் கொடை அடிகளாரால் அமைக்கப்பட்டது. இந் நன்கொடை எந்நாளும் தொடர்ந்து கிடைப்பதற்கான ஏற்பாடுஞ் செய்யப் பெற்றுள்ளது.

## எல்லாம் பொருளில் இருக்கிறது

இந்த உலகத்தில் பொருள் ஒன்று இருந்து அதற்கு ஏற்றமனப்பான்மையும் இருந்தால் போதும்.

அவன் எத்தகைய காரியங்களையுஞ் சாதித்து விடலாம். பணம் பெற்றவர்களால் சாதிக்க முடியாதது ஒன்று மில்லை. "பணம் என்றால் பிணமும் வாயைத்திறக்கும்" என்பது பழமொழி. தமிழ் வளர்ச்சிக்குச் சரியான வழியும் பொருளில்தான் இருக்கிறதென்பதை அடிகள் நன்குணர்ந்தே மேற்கண்டவாறு பரிசளிக்க முற்பட்டனர். பொருள்மட்டும் இருந்தால் போதாது. உள்ளம் வள்ளல் தன்மை உடையதாகவும் இருக்கவேண்டும். இன்றேல் பொருள் பயனற்றதாகப் போகும். இக் காலத்தில் அடிகளாருக்கு அடுத்தபடியாகத் தலைமைப் பதவியை ஏற்ற உயர்திரு அருணந்தியடிகள் எண்ணற்ற அறங்களை ஏற்படுத்திக் கொண்டு வருதலைப் பார்க்கிறோம். இதற்கு மூலகாரணமாக விதையூன்றிய பெரியார் இவ்வடிகளே என்பதை நாம் மறந்துவிடக் கூடாது. அருணந்தியடிகள் தமக்குப் பின் தம் வழியைப் பின்பற்றித் தருமப் பணிகளைத் தட்டின்றிச் செய்யத்தக்க தண்ணருள் நண்ணப் பெற்றிருத்தலை அறிந்தே அடிகளார் அருணந்தி வள்ளலைத் தமக்குப் பின் தலைவராக ஏற்படுத்தினர்.

அடிகளார் அருளிய அறக்கட்டளைகள் பல. பெரு வள்ளன்மைக் குணம் அமையப்பெற்றவர்கடாம் இத்தகைய அறச் செயல்களில் ஈடுபடுவர். அடிகளாரின் பேரறக்கட்டளைகள் பலவற்றையும் கீழே காண்க.

1—1931 சென்னை மயிலை இராமகிருட்டிணமடம் உயர்நிலைப்பள்ளியில்எஸ். எஸ். எல். சி.வகுப்பில் கல்விகற்கும் மாணவனுக்குக் காசிவாசி சொக்கலிங்க அடிகள் நினைவாகக் கொடுக்கும் உதவிக்கு வெண் பொற்காசுகள். 1000 - 0 - 0

2—1936 ஐந்தாம் சார்ச் அரசர் நினைவாகத் தமிழ்ப் புலவர்கட்கு ரூ 1000- அளிப்பதற்கு— 35000 - 0 - 0

3—1940 சிற்றூரில் உள்ள ஆசிரியர்கள், ஊர்க்கணக்கர்கள், மருத்துவர்கள் ஆகியவர்கட்குத் திங்கட்கு ரூ 30 கிடைக்குமாறு அரசினர் மூலம் ஏற்படுத்திய திட்டத்திற்கு. 100000 - 0 - 0

4—1940- ராசராச அபய குலசேகர சோழமன்னர் நினைவுக்குறியாகத் தேவாரத் திருமுறைப் பரிசும் தமிழ் இலக்கிய இலக்கண வெளியீட்டுத் திட்டமுமாக அமைத்த நிலங்களின் மதிப்பு. ரூ— 75000 - 0 - 0

5—1941- திருவள்ளுவர் நீதிநூற் பரிசுக்கு ரூ— 3500 - 0 - 0

6—1942- சேக்கிழார் நாயனார் நினைவுக் குறியாகக் கொடுக்கும் தமிழ்ப்பரிசுக்கு ரூ- 3500 - 0 - 0

7—1942- காசிவாசி ஆதிகுமர குருபரஅடிகள் நினைவுக் குறித் தமிழ்ப்பரிசுக்கு ரூ- 3500 - 0 - 0

8—1942- கவிச்சக்கரவர்த்தி கம்பர் நினைவுக்குறித் தமிழ்ப்பரிசு ரூ- 3000 - 0 - 0

9—1942- நம்பியாண்டார் நம்பி நினைவுக்குறி பன்னிரு திருமுறைப் பரிசுக்கு ரூ—3000 - 0 - 0

10—1942- கொட்டையூர்ச் சிவக்கொழுந்து தேசிகர் நினைவுக்குறி இசைத்தமிழ்ப் பரிசுக்கு ஏற்படுத்தியது ரூ—3000 - 0 - 0

11—1942- மாணிக்க வாசக அடிகள் நினைவுக்குறி அகப்பொருட்பரிசுக்கு —ரூ3000-0-0

12—1942- காசி வாசி ஆதிகுமரகுருபர அடிகள் நினைவுக்குறி தமிழ்யாப்பிலக்கணப் பரிசுக்கு ரூ—3000-0-0

13—1942- காசி வாசி சொக்கலிங்க அடிகள் நினைவுக்குறி அணியிலக்கணப்பரிசுக்கு— ரூ—3000-0-0

14—1942- கொட்டையூர்ச்சிவக்கொழுந்து தேசிகர் நினைவுக்குறி திருவாசகப்பரிசுக்கு ரூ—3000-0-0

15—1942- மெய்கண்டார் நினைவுக்குறிசைவ சித்தாந்த சாத்திரப் பரிசுக்கு ரூ—3000-0-0

16—1942- மாயூரம் நாஷனல் செகண்டரி பாடசாலை மாணவர் பரிசுக்கு ரூ—5000-0-0

17—1943- காசி வாசி ஆதிகுமரகுருபர அடிகள் நினைவுக்குறி சைவசித்தாந்த சாத்திரப்பரிசுக்கு ரூ—30000-0-0

18—1943- தில்லை நாயக அடிகள் நினைவுக்குறித் தமிழ்ப் பரிசுக்கு ரூ—2000-0-0

19—1943- உ.வே. சாமிநாதையர் ஸ்காலர் ஷிப்புக்கு ஆண்டுதோறும். ரூ—23-0-0

20—1944- திருஞான சம்பந்த மூர்த்தி நாயனார் தமிழ் இசைப்பரிசுக்கு ரூ—30000-0-0

21—1944- அருணந்திசிவாசாரியார் நினைவுக்குறி சைவசித்தாந்த சாத்திரப் பரிசுக்கு ரூ—3500-0-0

இவ்வாறு பலபரிசுத் திட்டங்களை ஏற்படுத்தித் தமிழ்க்கலைக்கு அடிகளார் அரும் பெரும் பணிபுரிந் தருளினர்.

## பலவகை அறங்கள்

மற்றும் அடிகளார் செய்த அறங்கள் பல. சிதம் பரத்தில் அண்ணுமலைபார்க் மண்டபத்திற்காக நாலாயி ரம்ரூபா பெறும் மனையை வழங்கியருளினர். கும்ப கோணம் எக்ஸ்ரே இன்ஸ்டிடியூட்டில் ஒருபகுதியை அமைக்க ரூபா ஆயிரம் தந்தருளினர். சீரங்கம் உயர் நிலைப்பள்ளிக்கு ஏழாயிரம் ரூபாபெறத்தக்க தோட்டத் தையும் பங்களாவையுந் தந்தருளினர். திருப்பனந் தாளிலும் அதைச்சேர்ந்த ஊர்களிலும் உள்ள கோயில் களில் வழிபாடு முதலியன நடைபெறுதற்கும் எளிய வர்களுக்கு உணவளிக்கவும் இருபத்தெண்ணுயிரம் ரூபா பெறக்கூடிய நிலங்களையும் பொருள்களையும் வழங்கியருளினர். கும்பகோணம் கும்பேசுவரக் கடவு ளுக்கு ஏழாயிரம் ரூபாயில் வெள்ளிக்காளை செய்து கொடுத்தார். 17500 ரூபாச்செலவில் வெள்ளித்தேர் செய்துவைத்தார். அபிமுகேசுவரர் கோயிலுக்கு ஏழா யிரம் ரூபாயில் வெள்ளிக்காளை செய்து கொடுத்தார்.

## புலவர்கட் குதவி

அடிகளார் புலவர்கட்கு அடிக்கடி நல்லுதவிசெய் தருளினர். பொது நிலையங்களும் அடிகளாரிடம் இருந்து நல்லுதவி பெற்றன. அடிகளார் வழங்கிய பொருளுதவியைக் கொண்டு உ. வே. சாமிநாதையர் நூல்கள் பலவற்றை அச்சிற்பதிப்பித்து வெளியிட்டார். ஆதிகுமரகுருபர அடிகளின் குருபூசை நாளில் ஆயிரக்

கணக்கான அடியவர்கட்கு அறுசுவையுணவு அறுவை பொருள் முதலியன வழங்கியருளினர்.

## இறுதி

தமக்குப்பின் தமது மடத்துப்பணிகளைத் தக்காங்கு இயற்றவும் தம்மைப் பின்பற்றி நடக்கவும் உயர் திரு அருணந்தியடிகளாரை 4-3-1944இல் ஏற்படுத்தினர். அதன்பிறகு சில நாட்கள் சென்றன. 1944 ஆம் ஆண்டு மார்ச்சுத்திங்கள் இருபத்தாறும் நாள் தமது ஐம்பத்தோராவது அகவையிலே பூதவுடலை நீத்துப் புகழுடலை நிறுத்தி இறைவன் திருவடி நீழலை அடைந்தருளினர்.

## பிற்குறிப்பு

சாமிநாத அடிகட்குப்பின், அவ்வடிகளார் செய்ததைப் போன்ற பேரறங்கள் பல காசிமடத்தில் இருந்து தற்போதைய அடிகளாரால் நன்கு பெருகி வருகின்றன. இவ்வடிகளார் இன்னும் பல்லாண்டு வாழ்ந்து அறப் பெருஞ் செல்வராய் விளங்கத் திருக்கேதாரத்தில் எழுந்தருளிய திருக்கேதார நாதன் திருவருள் புரியவேண்டும்.

## ௩. த. ப. இராமசாமிப் பிள்ளை

### பிறப்பு

சோழவள நாட்டிலே தஞ்சைக் கருந்திட்டைக் குடியிலே, இராமசாமிப் பிள்ளை வேளாளர் குலத்திலே இற்றைக்கு ஏறக்குறைய எண்பதாண்டுகட்கு முன்னர்ப் பிறந்தார். தந்தையார் பெயர் பஞ்சநதம் பிள்ளை. தாயார் பெயர் சுந்தரத்தம்மாள்.

### சென்னைக்குச் செல்லுதல்

இராமசாமி உரியகாலத்தில் கல்விப் பயிற்சி செய்விக்கப் பெற்றுப் பதினறு ஆண்டுவரை தஞ்சையில் இருந்தார். பிறகு சென்னையை அடைந்து பொருள் தேடவேண்டும் என்னும் எண்ணம் உண்டாகியது. புறப்பட்டுச் சென்னையை அடைந்தார். வணிகத் துறையிற் புகுந்து பெரும்பொருள் திரட்டினர். பிறகு மீனம்பாள் என்னும்மெல்லியலைத் திருமணம் புரிந்தார்

### நன்னெறிப் படரல்

நல்லறமாகிய இல்லறத்தை நன்கு நடத்தத் தொடங்கிய இராமசாமிப் பிள்ளை அத்துடன் அமையாது யோகம் பயிலல், நூல் கற்றல், அடியார்க்குணவிடல், சிவவழிபாடு முதலிய நல்லறங்களினும் பெரு விருப்புடையராய் அவைகளையும் மேற்கொண்டார். திருவொற்றியூர்ச் சிவபிரான்மீது பேரன்புகொண்டு நாள்தோறும் திருவொற்றியூரை அடைந்து வழிபாடு புரிதலையும் மேற்கொண்டார். ஒற்றிப்பெருமானுடைய

உயர்ந்ததால் இவருடைய செல்வம நாள்தோறும் பெருகிவந்தது.

## அறச்செயல்கள்

இராமசாமிப் பிள்ளை அறிவு நூல்களையும் நன்கு கற்றுத்தேர்ந்திருந்தாராகையால் அழிதன் மாலையவாய உலகப்பொருளை ஒரு பொருளாக மதிக்கவில்லை. ஒரு பெரியார் ;

"நோக்கிருத்தும் அந்தகராய்க் காதிருந்தும் செவிடராய்
நோய் இல் லாத,
வாக்கிருந்தும் மூங்கையராய் மதியிருந்தும் இல்லாராய்
வளருங் கைகால்.
போக்கிருந்து முடவராய்ப் புலனிருந்தும் இல்லாத
பூட்சி யாராய்,
ஆக்குமிந்தத் தனமதனை ஆக்கமென நினைத்தனையே
அகக்குபரங்கே."

என்று கூறியிருத்தலை எண்ணமிட்டுப்பார்த்தார். பொருள் ஒருவரிடம் நிலைத்திருக்கும் தன்மையுடைய பலரிடமுங் கைம்மாறிச்செல்லும இயல்புடையது. இதனை எண்ணியே அறிஞர்கள் பொருளுக்குச் 'செல்வம்' என்னும் பெயருங் கொடுத்திருக்கின்றனர். நாம் இச்செல்வத்தை மெய்ப் பொருள் என்று நம்பி ஏமாந்து போகக்கூடாது என்று முடிவுசெய்தார். பலவகையான அறங்களினும் செல விட எண்ணினார். சென்னை நகரிலே சிறுசிறு இடங் களிற் குடியிருப்பவர்கள் திருமணக்காரியங்கள் நடத்த வேண்டுமாயின் பெருந்தொல்லைக்கு உள்ளாவர். அவர் களுடைய தொல்லையை நீக்கும் பொருட்டுப் பல

விடங்களில் திருமண இல்லங்கள் அமைத்தார். முற் கூறியவாறே பிள்ளைபெறத் தொடங்குபவர்கட்கும் பல வகைத் தொல்லைகளிருக்கும்; அதன் பொருட்டு மகப்பெறு நிலையங்கள் சில அமைத்தார்.

## திருக்கோயில் திருப்பணி

இவர் ஒருநாள் திருவொற்றியூரையடைந்து பிரம தீர்த்தத்தில் நீராடிக் கரையேறினர். அப்போது ஒரு சிவனடியார் இவர்முன் தோன்றி "ஐய! தாம் திரு வொற்றியூருறை பெருமானிடத்திலே பேரன்புடையீ ராகலின் இத்திருக் கோயிலைத் திருப்பணி செய்க" என்று கூறினர். இக்கட்டளை இறைவன் கட்டளையே என்று கொண்ட இவர் திருப்பணியைச் செய்யத் தொடங்கினர். ஒற்றியூர்ப் பெருமானைப் பன்னிரண்டு ஆண்டுகள் ஒருநாளேனும் இடைவிடாது தொழுது போற்றுதல் வேண்டும் என்னும் உறுதியை மேற் கொண்டு அவ்வாறே செய்தார். ஒருநாள் இவர் இறை வழிபாட்டின் பொருட்டுத் திருவொற்றியூருக்குப் புறப் பட்டபோது இவருடைய ஆண் குழந்தை யொன்று இறந்தது. ஆயினும் இவர் அதன் பொருட்டுத்தடை படாமல் சென்று வணங்கி வழிபட்டுக் கொண்டுவந்து அதன் பின்னரே ஆகவேண்டிய மற்றைக் காரியங் களைச்செய்தார்.

## தருமந் தலைகாத்தது

இவருக்குப் பகைவர்கள் சிலர் தோன்றினர். எவ் வாறேனும் இவரைக் கொன்று தீர்க்கவேண்டும் என்று முடிவுசெய்தனர். கொலைசெய்தற்குக் கூலியாளையும் ஏற்பாடு செய்திருந்தனர். ஒருநாள் மாலையில் இவர்

உந்தூர்தியில் புறப்பட்டுக் கடற்கரையை அடைந்து ஓரிடத்தில் அமர்ந்தார். அக்காலே கொலேசெய்தற் கமர்த்தப்பட்டிருந்த தீயோன் கொடுவாள் ஒனறோடு இவருக்குப் பின்புறமாக வந்து கழுத்தை நோக்கி வெட்டினன். இறைவன் திருவருளால் அவ்வெட்டுக் கழுத்திற் படாமலே தவறிவிட்டது. மீண்டும் இரண்டொரு முறை வெட்டினுன். அவ்வெட்டுக்கள் இவர் மீது எளிதாகவே பட்டன. அதற்குள் இவர் அக் கொலேஞனேக் கெட்டியாகப் பற்றிக்கொண்டதோடு கொடுவாளேயுங் கைப்பற்றிக்கொண்டனர். அதற்குள் பலர் விரைந்து வந்து சூழ்ந்தனர். "தருமந் தலேகாக்கும்" என்பது இவரிடத்தில் நன்ருகப் பலித்தது. இவ்வாறு வெட்டுண்டு மருத்துவசாலேக்குச் சென்ற நாளினும் திருவொற்றியூரை அடைந்து இறைவனே வழிபட்டே மீண்டார். பிறகு இவருடைய பகைவர்களும் இவரை யடைந்து மன்னிப்புக்கேட்டு நண்பராயினர்.

## குடமுழுக்கு

திருவொற்றியூர்த் திருப்பணியைப் பல்லாயிரம் வெண்பொற்காசுகள்வரை செலவிட்டுச்செய்துமுடித்த பின் தமது பெயராலும் ஒரு சிவலிங்கத்தை அதில் அமைத்து 1936 ஆம் ஆண்டு மேத்திங்கள் முப்பத்தோராம் நாள் குடமுழுக்குஞ் செய்தார். மற்றும் சுந்தரமூர்த்திநாயனுருக்குக் கோல்கொடுத்தருளிய இறைவனமர்ந்த திருவெண்பாக்கத் தலத்தினும் திருப்பணிகள் செய்தார்.

## வடமொழிக்கல்லூரி

சென்னேமா நகரில் வடமொழிக்கல்லூரி ஒன்று அமைக்க வேண்டுமென்று சில பெரியோர்கள் பல்

லாண்டுகட்டு முன்னர் எண்ணினர். ஆனல் அச்செயல் முடிவு பெருதிருந்தது. முக்தாநந்த அடிகள் என்னும் பெரியார் ஒருவர் ஒருநாள் இராமசாமியாரைப்பார்த்து உரையாடிக் கொண்டிருந்தார். அப்போது வட மொழிக்கல்லூரி ஒன்றைச் சென்னையில் அமைத்து நடத்துதல் மிக்க சீர்த்தியுடைய தாமெனச் செப்பினர். அதனை மனமுவந்தேற்ற இவர் "திருவொற்றியூரான் சமஸ்கிருத பாடசாலை" என்னும் பெயரோடு பாடசாலை ஒன்றை அமைத்து அதனை மேற்படி முக்தாநந்த அடிகள் என்னும்பெரியாருடையமேற்பார்வையிலேயே நடத்துமாறு செய்தார். அதிற் கற்க விரும்பி வந்த மாணவர்கட்கு வீட்டிலேயே மூன்றுவேளையும் உண வளித்ததோடு பாடசாலையிலேயே தங்கியிருத்தற்கும் வழிசெய்தமைத்தார். சில ஆண்டுகள் சீரியமுறையில் நடைபெற்ற அப்பாடசாலையிலிருந்து பலர் வடமொழி அறிஞர்கள் வெளிப்பட்டனர். ஆனல் அப்பாடசாலை தொடர்ந்து நடைபெருமல் போய்விட்டது.

## வேதமொழி பெயர்ப்பு

வடமொழியில் உள்ள வேதங்களைத் தமிழில் மொழிபெயர்க்கச் செய்து தமிழ் நாடெங்கும் பரவச் செய்ய வேண்டும் என்று இவர் உள்ளத்தில் எண்ணி ஞர். சிவானந்த யதீந்திர அடிகள் என்னும் பெரியார் ஒருவரைக்கொண்டு சாமவேதம் கிருட்டிண எசுர்வேதம் முதலியவைகளைத் தமிழில் மொழிபெயர்க்கச் செய்து பல ஆயிரக்கணக்கான ரூபாய்களைச் செலவிட்டு அச் சிட்டார். அந்நூல்களைத் தக்கார்களுக்கு நன்கொடை யாகவே வழங்கினர். மற்றும் திருவொற்றியூர்ப் புராண வசனம் முதலிய நூல்களையும் வெளியிட்டார்.

## உயர்நிலைப்பள்ளி

மக்கள் தொகை பெருகிவரும் நமது நாட்டிலே மாணவர்கள் பள்ளிகளில் இடங்கிடைக்காமல் அல்லலுறுதலைக் கண்ட இவர் சென்னை வேப்பேரியில், "திருவொற்றியூரான் உயர்நிலைப்பள்ளி" என்னும் பெயருடன் பள்ளி யொன்றையும் அமைத்துச் சீரிய முறையில் நடத்தலானார்.

## உணவு வழங்கல்

ஏழை எளியவர்கட்கு எந்நாளினும் தமது இல்லத்திலேயே நல்லசாப்பாடு வழங்கலானார். திருவிழா முதலிய சிறப்புக்கள் நிகழுமிடங்களினும் உணவிடும் பேரறத்தைக் கைக்கொண்டிருந்தார்.

## புலவர்கட்கு நன்கொடை

இவருடைய வள்ளல் தன்மையை அறிந்த புலவர் பலர் இவர்மீது செய்யுள்கள் பாடிச்சென்று தக்கவாறு பரிசில் பெற்றனர். இவர்மீது இயற்றப் பெற்ற பாடல்கள் பல.

## இறுதி

இவ்வாறு பலவழிகளினும் தமது பெருஞ்செல்வத்தைப் பயன்படுத்திச் சிறந்து விளங்கிய இவர் சில ஆண்டுகட்குமுன் இறைவன் திருவடி நீழலையடைந்தார். இவருடைய திருமகனார் கண்ணன் என்பவர் தந்தையைப் போன்றே எல்லா நற்குணங்களும் இனிது அமையப்பெற்று விளங்குகிறார்.

# சு. இராசா சர்
# அண்ணுமலைச் செட்டியார்

## தோற்றம்

பிற்கால வள்ளல்களில் முதன்மை பெற்றவராகத் திகழ்ந்து முற்கால வள்ளல்களின் மாபெரும் புகழ்களை யெல்லாம் மங்கச் செய்த இராசாசர் அண்ணுமலைச் செட்டியார் செட்டிமார் நாட்டிலே கானடு காத்தான் எனனும் ஊரிலே 1881 ஆம் ஆண்டு செப்டம்பர்த்திங்கள் முப்பதாம்நாள்(விஷு ஆண்டு புரட்டாசித் திங்கள் பதினுரும் நாள்) மூலநன்னுளிலே இவ்வுலகிற் பிறந்தார். இவருடைய தந்தையார் பெயர் முத்தைய செட்டியார்; தாயார் பெயர் மீனுட்சியம்மையார்.

## கல்வி

கற்றற்குரிய இளமைப் பருவத்தில் அண்ணுமலையார் கல்வி கற்கத் தொடங்கினுர். தமது ஊரில் உள்ள தொடக்கப் பள்ளியில் படிப்பைத் தொடங்கினுர். சில ஆண்டுகளில் எழுதப்படிக்கத் தேர்ச்சி பெற்றுர். எண் சுவடிக் கணக்கில் நல்ல திறமைபெற்றுர். தந்தையாராகிய முத்தைய செட்டியார் கரூரில் சிவன்கோயில் திருப்பணி செய்து கொண்டிருந்தார். அண்ணுமலையார் ஆங்குப்போய்ப் பள்ளியிற் சேர்ந்து ஆங்கிலந் தெரிந்த ஆசிரியர்களிடத்தில் தனிமையாகவும் (பிரைவேட்) தமிழ் ஆங்கிலம் முதலியவைகளைக் கற்றுர். இதனுல் இவருக்குத் தேர்ச்சி விரைவாகவும் சிறப்பாகவும்

அமைந்தது. இவ்வாறு கல்விப் பயிற்சியை ஒருவாறு நிறைவேற்றிக் கொண்டபின் தந்தையாரிடமே தொழிற் பயிற்சி பெற்றார். கணக்குகளை விரைவாகவும் கூர்மையாகவும் பார்ப்பதில் தேர்ச்சி இவருக்குநன்றாக அமைந்தது. தொழில் முறையில் தந்தையாருக்கு உதவியாக அமைந்து நின்றார்.

## திருமணம்

அண்ணாமலையார் அகவை பதினைந்தை அடைந்த போது தந்தையார் முத்தையசெட்டியார் இவருக்குத் திருமணஞ் செய்து பார்க்க எண்ணினார். பள்ளத்தூரிற் சிறந்து விளங்கிய பழநியப்ப செட்டியார் என்பவருடைய அருமைத் திருமகளாகத் தோன்றிய சீதையாச்சி என்னும் பெண்மணியை மணமகளாகத் தேர்ந்தெடுத்துத் திருமணஞ் செய்துவைத்தார். பின்னர் தமது அறுபத்திரண்டாம் அகவையில் 1901ஆம் ஆண்டில்இறைவன் திருவடி நீழலை யடைந்தார்.பிறகு சிறிது காலம் அண்ணாமலைச் செட்டியாரும் அவருடைய உடன்பிறந்தார்களும் ஒன்றாக வாழ்ந்திருந்து தந்தையார் தேடிய பொருளைப் பங்கிட்டுக்கொண்டனர்.

## பொருளீட்டல்

அண்ணாமலையார் மிகுந்த ஊக்கத்துடன் மேலும் பொருள் தேடஎண்ணினார். தமது பாகத்திற்குக் கிடைத்த கடைகளையெல்லாம் மேற்பார்க்கும் பொறுப்பைத் தாமே ஏற்றுக்கொண்டார். அக்கடைகள் தென்னிந்தியா, வடஇந்தியா, இலங்கை, பர்மா, மலேயா, சையாம், செய்கோன், கிழக்கிந்தியத் தீவுகள் முதலிய பல இடங்களில் அமைந்திருந்தன. எல்லாக் கடைக்

கணக்குகளையும் செட்டியாரே ஒப்பு நோக்குவார். தம்மிடம் தொழில்புரிவோர் பொருள் போதாக்குறையினால் புரட்டு உருட்டுக்கள் புரியாவாறு எல்லாருக்கும் போதிய அளவு ஊதியமளிப்பார். செட்டியாருடைய கடைகளெல்லாம் செம்மையாக நடைபெற்றன. பிற செல்வர்களைப்போல் இவர்பகட்டானவாழ்வையும்வீண் செலவையும் மேற்கொள்ளாமல் செலவுகளை யெல்லாம் கருத்துடன் செய்தார். தமது வணிகத் தொழில்களைத் தொழிலாளர்களை நம்பிவிட்டு விட்டுத் தாம்கவலையற்றிராமல் தாமே எல்லாவற்றிலும்கருத்துச்செலுத்தி விழிப்புடன் இருந்தார். தாம்செய்யவேண்டிய அலுவல்களையெல்லாம் முறைமையாகவும் ஒழுங்குடனும் நடத்தினர். நேரத்தைச் சிறிதேனும் வீணாக்கமாட்டார். பிறர் தம்மிடம் வந்து தமது நேரத்தை வீணாக்குவதற்கும் இடங்கொடுக்கமாட்டார். காலத்தை இவர் சிறிதும் வீணாக்காமல் மதித்துப் போற்றியபடியால் பத்தாண்டுகளுக்குள் கோடீசுரனாகி விட்டார். இவருக்குப் பர்மாவில் நூறாயிரம் ஏக்கர் நன்செய் நிலம் உண்டு. இலங்கையிலும் மலேயாவிலும் பெரிய தென்னந்தோப்புக்களும் ரப்பர்த் தோட்டங்களும் தேயிலைத் தோட்டங்களும் உள்ளன. தமிழ்நாட்டில் சிற்றூர்கள் பல செட்டியாருக்கு உரிமையாக அமைந்தன. சித்தூர் மாவட்டத்தில் நூற்றுப்பதினைந்து சிற்றூர்கள் உரிமையாயின. செட்டியாருக்குத் தந்தையார் தேடிய பொருளில் இருந்து கிடைத்தது இரண்டொரு இலட்சரூபாக்களேயாயினும் கோடீசுரனாக இவரைச் செய்தது தளராத உழைப்பேயாகும்.

## பொது நலத்தொண்டிற் புகுந்தது

பெரும்பொருளைத் திரட்டிய அண்ணாமலையார் அரும் பொருளையே பரம்பொருளாக எண்ணியிராமல் அதனைமக்களுக்குப் பயன்படுத்தும் துறையிலும் இறங்கலானார். 1910 ஆம் ஆண்டில் காரைக்குடி நகர சபைத்தலைவரானார். மூன்றாண்டுகள் வரையில் அப்பதவியில் அமர்ந்து நகரத்தின் நன்மைக்குப் பல காரியங்களைச் செய்தார். அந்நாளில் மோட்டார்கார் இல்லாதபடியால் கானாடு காத்தானில் இருந்து காரைக்குடிக்கு நாள்தோறும் குதிரைவண்டியிற்சென்று நகரசபையின் அலுவல்களைக் கண்ணுங் கருத்துமாகச் செய்து முடித்தார். பொதுமக்களோடு நன்குகலந்து பழகி நகரத்திற்குத் தேவையான நன்மைகளை நன்குணர்ந்து அவைகளையெல்லாம் செய்தார். மக்கள் செட்டியாருடைய ஆட்சித்திறனை வியந்து பாராட்டினர்.

## ஆண்மைச் செயல்

செட்டியார்கள் தீரமற்றவர்கள் என்று மற்றவர்கள் கூறுவதுண்டு. ஆனால் இது பெரும்பாலான செட்டியார்களிடம் உண்மையாகவே விளங்கியது. ஆனால் அண்ணாமலைச் செட்டியாரோ இதற்கு நேர்மாறாக இருந்தார் இவரிடம் அச்சமின்மையும் ஆண்மையும் நன்கு அமைந்திருந்தன. அக்காலத்தில் அஞ்சல்கள் இரவு நேரத்தில் குதிரை வண்டியில் காரைக்குடிக்கு வருவது வழக்கம். ஒருநாள் இரவு கள்ளர்கள் சிலர் அஞ்சல் வண்டியைத் தடுத்து அஞ்சல் மூட்டைகளை பறித்துச்சென்றனர். இச்செய்தி உடனே செட்டியாருக்குத் தெரிந்தது. இவர் தம் ஆட்கள் பலருடன்

சென்று காடுகரைகளைத் தேடிச் சூழ்ந்து கள்ளர்களைப் பிடித்தது மல்லாமல் அவர்களால் கைப்பற்றப்பட்ட அஞ்சல் பைகளையும் மீட்டுவிட்டார். இவருடைய இச் செயலை அரசினர்உணர்ந்து மிகவும் பாராட்டினர். இவருடைய பொதுநலத் தொண்டுகள் எல்லோருக்குஞ் சிறந்த நன்மையளிப்பவைகளாய் விளங்கியதைக் கண்ட அரசினர் இவருக்கு மேன்மேலும் ஊ க் க ம் அளிக்க விரும்பி இராவ்பகதூர் என்னும் பட்டத்தை வழங்கிப் பாராட்டிப் பெருமைப் படுத்தினர்.

## வெளிநாடு செல்லல்

செட்டியார் இங்கிலாந்து முதலிய வெ ளி நா டு கட்குச்சென்று அந்நாட்டின் பண்பாடுகளையும் முன் னேற்ற வழிகளையும் கண்டுணர விரும்பினூர். தம் முடைய வெளிநாட்டு நண்பர் ஒருவரோடு இங்கிலாந் தி ற் கு ப் புறப்பட்டார். இலண்டன், கேம்பிரிட்ச், ஆக்ஸ்போர்டு முதலிய நகரங்களைப் பார்வையிட்டார். ஆங்கிருந்த தொழிற்சாலைகளையும், பல்கலைக்கழகங் களையும் நூல் நிலையங்களையும் பார்வையிட்டார். அவர் இலண்டனில் தங்கியிருந்தபோது (1911 ஆம் ஆண் டில்) ஐந்தாம் சார்ச் அரசருக்கு முடிசூட்டு விழா நிகழ்ந்தது; அவ்விழாவுக்கு அண்ணுமலைச் செட்டியாரு அழைக்கப்பட்டு முடிசூட்டு விழாவைக்கண்டுகளித்தார். வெளிநாட்டு நாகரிகம் இவருடைய உள்ளத்தைக் குடிகொண்டது. எல்லாவற்றிற்கும்கல்வியறிவே முதற் காரணம் என்பதை நன்குணர்ந்தஇவர்அந்நாட்டுப்பல் கலைக்கழகம் முதலியவைகளைக் கருத்துடன் ஊன்றிப் பார்த்துக்கொண்டு திரும்பினூர்.

## தாமும் முன்னேறுதல்

வெளிநாடு சென்று மீண்ட செட்டியார் நாட்டை யும் முன்னேற்றித் தாமும் முன்னேற எண்ணினர். காரைக்குடி நகரத்தில் சீர்திருத்தங்கள் பலவற்றை மேனாட்டு முறையை ஒட்டிச் செய்தார். மதுரைக் கல்லூரிக் கட்டிடம் கட்டுவதற்கு அறுபதாயிரம் வெண் பொற்காசுகளை வழங்கியதுடன் நிலமும் வாங்கிக் கொடுத்தார். 1912 ஆம் ஆண்டில் தில்லியில் ஐந்தாம் சார்ச் அரசருக்கு முடிசூட்டு விழா நடந்தது. அரசாங்கத்தார் அண்ணாமலைச் செட்டியாரையும் நன்கு மதித்து அழைப்பு அனுப்பினர். செட்டியார் அவ் விழாவுக்குச் சென்று அதிற்கலந்து கொண்டார்.

## இருப்பிடம்

செட்டியார் கானாடு காத்தானில் தமக்கு அழகிய ஓர் இல்லத்தைப் பெரும் பொருட்செலவில் அமைத்தார் அஃது அவருடைய செல்வநிலைமைக்குத் தக்கவாறு சிறப்புடன் அமைந்து பின்னாளில் அரண்மனை எனவும் வழங்கப்படுவதற் குரியதாயிற்று. மாகாணக் கவர்னர் களும் அமைச்சர்களும் பெருஞ்செல்வர்களும் செட்டியா ரோடு அவ்வரண்மனையில் விருந்து சாப்பிட்டுக் களித்தனர்.

## மருத்துவசாலை

செட்டியார் தமது செல்வத்தை நாட்டுமக்கட்குப் பயன் படுத்தும் வகையில் செலவிடவேண்டுமென்று முடிவுசெய்தார். கானாடு காத்தானில் பெண்கள் மருத்துவசாலை ஒன்றை ஏற்படுத்தினர். அம்மருத்துவ

சாலை அவ்வூரிலும் சுற்றுப் புறங்களினும் வசிக்கின்ற மக்கட்குப் பேருதவியாக அமைந்தது.

## கலையறத்திற்கு அடிப்படை

அண்ணுமலையாரின் தமையனராகிய இராமசாமிச் செட்டியார் திருத் தில்லையம்பதியில் தங்கி நகரசபைத் தலைவராக அமைந்து அறப்பணிகள் பல ஆற்றினர். தமது பெயரால் உயர் நிலைப்பள்ளி ஒன்றையும் அமைத்து நடத்திவந்தார். அவர் 1918 ஆம் ஆண்டில் இவ்வுலக வாழ்வைத் துறந்து இறைவன் திருவடி நீழலை எய்தினர். அவருக்கு மக்கட்பேறு இல்லை. ஆதலால்அவருடைய அறங்களை மேற்பார்க்கும் பொறுப்பு அண்ணுமலையார்க்குஏற்பட்டது. அப்பொறுப்பே இவரைப்பெருவள்ளலாக்குதற்குக் காரணமாகஅமைந்தது.

## பலவகைப் பணிகள்

அண்ணுமலையார் தமது குலத்தார்கட்கும் நன்மை புரிய விரும்பினர். செட்டியார்களுடைய வட்டித் தொழிலை ஐரோப்பிய பாங்குகளைப் போலச் சிறப்பாக நடத்துதற்கு வழிகாட்டினர். 1917 ஆம் ஆண்டில் சென்னை மாநகரில் நாட்டுக்கோட்டை நகரத்தார் சங்கம் ஒன்றை ஏற்படுத்தினர். சென்னைச் சட்ட சபையில் நகரத்தார் பிரதிநிதியொருவர் இடம் பெறுதற்கு ஆவனசெய்தார். 1920 ஆம் ஆண்டில் இந்தியாவில் நிலைநாட்டப் பட்ட இம்பீரியில் பாங்கியின் பொறுப்பாளர்களில் ஒருவராக அமைந்து நின்றும் பணி புரிந்தார்.

## மீனுட்சிகல்லூரி

அண்ணுமலையாருக்குக் கல்வியில் மிகுந்த பற்று உண்டு. தம்தமையனர் இராமசாமிச் செட்டியாருடைய

உயர்நிலைப் பள்ளியின் பொறுப்பை யேற்றுக் கொண்டது முதல் தாமுங்கல்வி வளர்ச்சிக்குக் கல்லூரி ஒன்றை ஏற்படுத்தவேண்டுமென்று எண்ணங்கொண் டார். முதலில் மதுரைமா நகரில் கல்லூரியமைப் பதற்கு நினைந்து அதற்கு ஏற்பாடுகளைச் செய்தவர் பிறகு தமது எண்ணத்தை மாற்றிக் கல்லூரியைத் தில்லைப்பதியில் அமைக்கலாம் என்று முடிவு செய்தார். முதலில் மீனாட்சி என்னும் தம்முடைய தாயாரின் பெயரால், மீனாட்சிகல்லூரி என்னும் பெயரோடு சிறிய கல்லூரி ஒன்றைத் தொடங்கினார். அரசினருடைய உடன்பாடும் கல்லூரிக்குக்கிடைத்தது. 24-6-1920இல் மீனாட்சி கல்லூரி தொடங்கப்பட்டது. முதலில் பதினொரு ஆசிரியர்களும் 58 மாணவர்களும் அமைந் தனர். பிறகு ஆண்டுதோறும் வளரத் தொடங்கியது.

## பெரிய இடம்

கல்லூரியின் வளர்ச்சிக்குத் தக்கவாறு செட்டியார் அதற்குத்தக்க இடத்தைத் தேடத் தொடங்கினார். சிதம் பரம் புகைவண்டி நிலையத்திற்குக் கீழ்பால் அமைந்த திருவேட்களம் அவர் மனதிற்குப் பிடித்தமானதாக இருந்தது. அங்கு நூறு ஏக்கர் நிலம் வாங்கிப் பல கட்டிடங்களைத் தம்முடைய மேற்பார்வையிலேயே கட்டினார். நான்கு ஆண்டுகளில் கல்லூரி வளர்ந்து சிறந்த நிலைமைக்கு வந்துவிட்டது. 1924 ஆம் ஆண்டில் மாணவர்கள் தங்கியிருத்தற்கு விடுதிஒன்றும் அமைக்கப்பட்டது. ஆசிரியர்கள் குடியிருத்தற்கு வீடு களும் கட்டிக் கொடுக்கப்பட்டன. 1925ஆம் ஆண்டில் பி. ஏ. ஆனர்ஸ் வகுப்புத் தொடங்கப்பட்டது. அவ் வகுப்பில், ஆங்கிலம், வரலாறு, பொருளாதாரம் ஆகிய

வைகள் கற்பிக்கப்பட்டன. மேன் மேலுங் கல்லூரி வளர்ந்து சிறப்படைந்து கொண்டே சென்றது. இக் கல்லூரியினுல் செட்டியாருடைய புகழ் நாடெங்கும் நாடோறும் நனிவளர்ந்து கொண்டே இருந்தது. செட்டியார் அரசாங்க சபை உறுப்பினர் தேர்தலுக்கு நின்று வெற்றிபெற்று அரசாங்க சபைக்குள்ளும் நுழைந்து நல்ல பணிகள் புரிந்தார். செட்டியாருடைய சீரிய தொண்டுகளை யெல்லாம் கவனித்துக் கொண்டுவந்த அரசாங்கத்தினர் செட்டியாருக்குத் திவான்பகதூர் என்னும் பட்டத்தை வழங்கிச் சிறப்புச் செய்தார்கள். மறு ஆண்டிலேயே 'சர்' என்னும் விழுமிய பட்டமுங் கிடைத்தது.

## மேலுங் கல்லூரிவளர்தல்

நாளொருமேனியும் பொழுதொரு வண்ணமுமாக வளர்ந்து கொண்டுசென்ற மீனுட்சி கல்லூரியில் 1927 ம் ஆண்டில் தமிழ்க்கல்லூரியையும் வடமொழிக்கல்லூரியையும் ஏற்படுத்தினுர். தமிழ்க்கல்லூரிக்கு உ. வே. சாமிநாதையர் தலைவரானுர். வடமொழிக் கல்லூரிக்குத் தண்டபாணித் தீட்சிதர் தலைவரானுர். ஆசிரியப் பயிற்சிக் கல்லூரி ஒன்றும் தொடங்கப் பெற்றது. தமிழ் கற்கவரும் மாணவர்கட்கு உதவிப்பொருளும் வழங்கிக் கல்விகற்கச் செய்தார். 1929 ஆம் ஆண்டில் இசைக் கல்லூரியொன்றும் ஏற்படுத்தப்பட்டது. இக்கல்லூரியின் பொருட்டுச் செட்டியார் ஏறக்குறைய இருபது நூருயிரம் வெண்பொற்காசுகள் வரை செலவிட்டார். இவருடைய பேரறச்செயலைத் தமிழ் நாட்டுமக்கள்மட்டுமன்றிப் பிறநாட்டுமக்களும் பாராட்டினர்.

## அண்ணாமலைப்பல்கலைக்கழகம்

தமிழ் நாட்டிற்குப் பல்கலைக் கழகம் ஒன்று ஏற் படுத்துதல் வேண்டுமென்று அறிஞர்கள் பலரும் எண்ணிக் கொண்டிருந்தனர். அதன் பொருட்டு ஒரு வழியுந் தோன்றாமல் விழித்தனர். இதைக் குறித்துக் கூட்டங்கள் போட்டுச் சிலமுடிவுகளுஞ் செய்தனர். இச்சமயத்தில் செட்டியார் தமது மீனாட்சிகல்லூரியையே பல்கலைக் கழகமாக மாற்றுவதற்கு முடிவுசெய்தார். தமது கருத்தைச் சென்னை யரசாங்கத்திற்குத் தெரியப் படுத்தினார். சென்னை அரசாங்கத்தார் செட்டியாரது பரந்த நோக்கத்தைப் பாராட்டினார்கள். தாமும் பொருள் உதவிசெய்ய முன்வந்தார்கள். இதன் பயனாய்த் தமிழ் நாட்டில் அண்ணாமலைப்பல்கலைக்கழகம் உருவாகியது. செட்டியார் முயற்சியாலும் வள்ளல் தன்மையினாலும் ஏற்பட்ட கழகத்திற்கு "அண்ணாமலைப் பல்கலைக்கழகம்" என்னும் பெயரை அரசாங்கத்தாரே அமைத்தனர். பல்கலைக் கழகத்திற்குரிய சட்ட திட்டங் களும் இயற்றப்பட்டன. அவை சட்டசபையிலும் நிறை வேறின.

## அரசர்பட்டம்

அண்ணாமலைப் பல்கலைக்கழகம் ஏற்பட்டவுடன் செட்டியாருடைய புகழ் எல்லாத்திக்குகளினும் எட்டி யது. அரசர் செட்டியாருடைய பெருங்கொடைத்திறத் தைப் பாராட்டினார். சென்னை அரசினரும் இந்திய அரசினரும் செட்டியாரைப் பாராட்ட எண்ணினார்கள். "அரசர்" என்னும் பட்டத்தை வழிமுறையினரும் அடையுமாறு அண்ணாமலைச் செட்டியாருக்கு அளிக்க வேண்டுமென்று தெரியப்படுத்தினார்கள். அரசரும் அவ்

வாறே 3-3-1929 ஆம் ஆண்டில் " அரசர் " என்னும் பட்டத்தை வழங்கினர். அது முதல் அண்ணாமலைச் செட்டியார், ராசாசர் அண்ணாமலைச் செட்டியார் என்று அழைக்கப்பெறலானர். செட்டிமார்நாட்டினர் அண்ணா மலைச் செட்டியாருக்கு அரசர் என்னும் பட்டங்கிடைத்த தைப்பாராட்டிப் பெருந்திருவிழாக்கொண்டாடினர்கள். எல்லா விடங்கட்கும் செட்டியாரை அழைத்துப்பாராட் டினர்கள்.

## அடையாற்றில் அரண்மனை

செட்டியார் அரசரானபின் அடையாற்றில்இருபது நூறுயிரம் ரூபாச் செலவில் அழகிய அரண்மனை ஒன்றை அமைத்து அதில் வசிக்கலானர். செட்டிமார் நாட்டில் கானடுகாத்தானை அடுத்துள்ள ஓரிடத்தில் செட்டிநாடுஎன்னும் ஓர் அழகியஊரையும் அமைத்தார்.

## திருவேட்களத் திருப்பணி

திருவேட்களம் என்பது சிதம்பரத்திற்கு அண் மையில் உள்ள பாடல் பெற்ற சிவப்பதிகளில் ஒனறு. அஃது இப்போது திருவேட்களம் என்னும் பெயரை யிழந்து அண்ணாமலை நகர் என்னும் பெயரைப்பெற்று விளங்குகின்றது. அக்கோயிலை அண்ணாமலைச்செட்டி யார் புதுப்பித்தார். அக்கோயில் அண்ணாமலைப் பல் கலைக்கழக மாணவர்கட்கு இறைவழிபாட்டிடமாக விளங்குகிறது.

## கோவிந்தராசர் கோயில் திருப்பணி

தில்லைக்கோவிந்தராசப் பெருமாள் திருககோயில் தில்லைக்கூத்தப்பிரான் திருக்கோயிலுக்குள் இருப் பதைப் பலரும் அறிவர். அக்கோயில் மிகப்பழைய தாகியும் வழக்குகளுக்குள் அகப்பட்டும் திண்டாடிக்

கொண்டிருந்தது. செட்டியார் அக்கோயிலைத்திருப்பணி செய்து புதுக்கினர். தீட்சிதர்கட்கும் வைணவர் களுக்கும் நெடுங்காலமாக இருந்த பகையையும்போக்கி ஒருவாறு ஒற்றுமைப்படுத்தினர்.

## பலசிவப்பணிகள்

தாம்புதிதாக உண்டாக்கிய செட்டிநாட்டில் சிவன் கோயில் ஒன்றைக் கட்டினர். கூத்தப்பிரான் திருக் கோயிலுக்குப் பல திருப்பணிகள் செய்தார். இளையாத் தங்குடி சிவன் கோயிலைப் புதுப்பித்துக் குடமுழுக்கு நடத்தினர். கரூரில் உள்ள பசுபதீசுரர் கோயிலுக்கும் வேறுபல திருக்கோயில்கட்கும் பெரும்பொருள் வழங் கினர்.

## வெல்லிங்டன் கிளப்

சென்னையில் இரண்டு நூறுயிர ரூபாச் செலவில் வெல்லிங்டன் கிளப் என்னும் நிலையத்தைப் பெண் மக்களுடைய நலத்தின் பொருட்டு ஏற்படுத்தினர். அக்கிளப்பில் பெண்மக்கள் ஒன்று கூடி இன்பமாகப் பொழுது போக்குகின்றனர்.

## டவுன் ஹால்

சிதம்பரம் என்னும் தில்லைப்பதியில் நகரப்பெரு மக்களுடைய நன்மைக்காக டவுன் ஹால் என்னும் கட்டிடம் ஒன்றை அமைத்தார். இந்த இடம் பொதுக் கூட்டங்கள் நடத்துவதற்கும் பலர் ஒன்று சேர்ந்து பழகிக்களித்தற்கும் ஏற்ற இடமாக அமைந்து சிறந்து விளங்குகின்றது.

## புலவர்களைப் போற்றல்

செட்டியார் பல்கலைக் கழகம் நிறுவிப் பெரும் பணி புரிந்ததோடு நாட்டிலுள்ள அறிஞர்களையும் பாராட்டிப் போற்றினுர். ரா. இராகவ ஐயங்கார் சங்ககால வள்ள லாகிய பாரிவரலாற்றைப் பாரிகாதை என்னும் நூலா கப்பாடி 14-2-1934ல் அண்ணுமலைப் பல்கலைக் கழகத் தில் அரங்கேற்றஞ் செய்தார். அப்போது செட்டியார் குமாரராசா அவர்களை அரங்கேற்று மிடத்திற்கு அனுப் பிப்பெரும் பொருள் பரிசு வழங்கினுர்.

## கவிமணிக்குப் பொன்னுடை

கவிமணி தேசிகவிநாயகம் பிள்ளை அவர்களைத் தனவணிகர்கள் பாராட்டிச் சிறப்புச் செய்ய எண்ணி னுர்கள். அதன்பொருட்டு ஆத்தங்குடி முத்துப் பட்டினத்தில் கூட்டம் ஒன்றைக் கூட்டினுர்கள். அக் கூட்டத்தில் செட்டியார் கவிமணிக்குப் பொன்னுடை போர்த்தினுர்.

## பண்டிதமணிக்குப் பொன்னுடை

பெரும் பேராசிரியர் பண்டிதமணி மு. கதிரேசச் செட்டியார் அவர்களுக்குச் சிறப்புச் செய்யக் காரைக் குடி கதிரேசன் கழகத்தார் ஒரு கூட்டம் கூட்டினர். அங்குஞ் செட்டியார் அவர்கள் பண்டிதமணிக்கு ப பொன்னுடை போர்த்தினுர்.

## இசைவளர்ச்சிக்குத் தொண்டு

தமிழிசை நாள்தோறும் வளர்ச்சி குன்றிவருதலைச் செட்டியார் கண்டார். தமிழிசையை வளர்த்து ஊக்கம்

அளிக்க எண்ணினர். 1941 ஆம் ஆண்டில். அண்ணு மலைப்பல்கலைக் கழகப் பட்டமளிப்பு விழாவில்தமிழிசை நூல்களைவெளியிடுதற்குப் பதினையிரம் வெண்பொற் காசுகள் நன்கொடை வழங்கினர். செட்டியாருடைய முயற்சியாலும் ஆதரவாலும் பல தமிழிசை நூல்கள் வெளிவந்தன. பல இடங்களில் தமிழிசை மாநாடு களைக் கூட்டித் தமிழ்இசை வளர்ந்தோங்குதற்குப் பெரிதும் உழைத்தார். சென்னைமாநகரில் தமிழிசைச் சங்கம் ஒன்றை ஏற்படுத்தி அச்சங்கத்தின மூலம் தமிழிசை வளர்ச்சிக்குப் பணிபுரியலானர். அச்சங்கமும் நாளிதுவரை சிறந்து விளங்கித் தமிழிசைத் தொண்டு செய்துகொண்டு வருகிறது.

## இறுதி

வாழ்நாளில் நல்லகாரியங்களை மிகுதியாகச்செய்த அரசர் அண்ணுமலைச் செட்டியார் தமது அறுபத்தேழாம் அகவையில் 1948ஆம் ஆண்டு சூன் திங்கள் பதினைந் தாம் நாள் இவ்வுலக வாழ்வைத்துறந்து இறைவன் திரு வடி நீழலையடைந்தார். செட்டியாரால் செய்யப்பட்ட அறங்களெல்லாம் செட்டியாருடைய மக்களால் நன்கு வளர்க்கப் பெற்று வருகின்றன.

## பாராட்டுப் பாடல்கள்

பொன்னடை போர்த்தியபொழுது பண்டிதமணி மு. கதிரேசச் செட்டியார் பாடியது.

> " பொன்னடை ஒன்றே புகழாடை யும்புனையும்
> எந்நாளும் கல்வி இனிதோங்கப் — பொன்ஈயும்
> அண்ணு மலைப்பே ரரசன் அருந்திறல்என்
> கண்ணர் மணியனையான் கை."

கவிமணி தேசிகவிநாயகம் பிள்ளையவர்கள் செட்டியா.

ரையும் அண்ணாமலைப் பல்கலைக் கழகத்தையும் பாராட்டிப்பாடியன.

" தில்லைப் பதியுடையான் சிற்றம் பலந்தன்னில்
அல்லும் பகலுநின் றுடுகின்றான் — எல்லைக்கண்
அண்ணா மலைமன் அமைத்த கலைக்கழகம்
கண்ணாரக் கண்டு களித்து."

" தத்தளித்து நின்ற தமிழிசைச் செல்விக்குப்
புத்துயிரை ஊட்டியநற புண்ணியவான் — பத்தியுடன்
எண்ணான் கறமும் இனிதா வளர்த்து மகிழ்
அண்ணா மலைமன்னனாம்."

" பூவாரம் தந்திடுவான் பொன்னாடை போர்த்திடுவான்
நாவார நல்லுரையும் நல்கிடுவான் — பாவாணர்க்
கன்புசெய திந்நாளில் அண்ணா மலைமன்போல்
இன்பமுடைவார் உண்டோ இசை."

## அணியறுபது

அண்ணாமலை வள்ளல் மீது பலர் பலவகையான புகழப் பாக்களைப் பாடினர். சிறந்த மாண்புகளும் உயரிய அறிவு நலமும் அமையப் பெற்றவரும் என்னிடம் தமிழ் இலக்கண இலக்கியங்களைப் பயின்று வெண்பாப்பாடுவதில் நல்ல திறமடைந்து வெண்பாப் புலியாக விளங்குபவரும் முருகக்கடவுளிடத்தும் கற்றார்களிடத்துஞ் சிறந்த அன்புடையவருமான பலவான்குடி திரு. மெ. வெ. வே. வேலப்பச் செட்டியார் அவர்கள் அண்ணாமலையார் மீது "அண்ணாமலை அணியறுபது" என்னும் வெண்பாநூல் ஒன்றும் பாடியுள்ளார்.

# ரு. டாக்டர் அழகப்பச் செட்டியார்

## தோற்றம்

பாண்டிவள நாட்டில் தனவணிகர்கள் உறையுங் கோட்டையூரில் அழகப்பச்செட்டியார்1909ஆம்ஆண்டு ஏப்ரல் திங்கள் ஆரும் நாள் பிறந்தார். தந்தையார் பெயர் இராமநாதன் செட்டியார்.

## கல்வி

அழகப்பச் செட்டியார் கல்விகற்கத் தொடங்கினர். தொடக்கப் பள்ளியிற் சேர்ந்து படித்தார். பிறகு உயர் நிலைப்பள்ளிக்குச் சென்ருர். அழகப்பருக்குக் கல்விகற பதில் அளவிலாத ஆர்வம் இருந்தது. மிகுந்த முயற்சி யோடுங் கருத்தோடுங் கல்வியைக் கற்றுக் கொண்டிருந்தார்.

## எதிர்பாராத நிகழ்ச்சி

அழகப்பருடைய தந்தையாராகிய இராமநாதன் செட்டியார், மலேயாவில் வட்டித்தொழிலில் ஈடுபட்டிருந்தார். தம்முடைய மகனையும் அத்துறையிற் பழக்க வெண்ணினர். புறப்பட்டு மலேயாவுக்கு வருமாறு கடிதம் எழுதினர். அழகப்பருக்கோ நன்ருகப்படிக்க வேண்டும் என்னும் நோக்கம் இருந்தது. "நான் இன்னும் நன்ருகக் கல்வி கற்றுக்கொண்டு பிறகு அங்கே வந்து வட்டித் தொழிலைப் பழகிக் கொள்ளுகிறேன்" என்று எழுதினர். தந்தையார் இவருடைய வேண்டுகோளுக்கு இணங்கவில்லை. "படித்தது போதும் வந்து இவ்விடத்துத் தொழில் முறைகளைப்

பயிலவேண்டியதுதான்" என்று கண்டிப்பாகக் கடிதம் எழுதினர். தந்தையாருடைய கண்டிப்பைக் கடக்க முடியாத அழகப்பர் படிப்பதை நிறுத்திவிட்டு மலேயாவுக்குப் புறப்பட்டார். கப்பல் கடலிற் சென்று கொண்டிருந்தது. அழகப்பருக்கு மனவருத்தத்தினுலும் புதிதாகக் கடற்பயணந் தொடங்கியபடியினுலும் உடல்நலம் கேடடைந்தது. காய்ச்சலும் வந்துவிட்டது. அழகப்பருக்குக் காய்ச்சல் கண்டதைக் கப்பல் தலைவன் கண்டான். இவ்வாறு காய்ச்சல் வந்தால் பிறகு அம்மைபார்க்கவுங்கூடும், அது கப்பலில் உள்ள எல்லோருக்கும் உண்டானுலும் உண்டாகலாம். அதனுற் பெருந் தொல்லையாக முடியும் என்று கப்பல் தலைவன் தன்னுடைய மனம்போனபடி ஆராய்ச்சியில் இறங்கினுன். சிறுவனுக இருந்த அழகப்பரை இறக்கி விட்டுவிடுவதுதான் எல்லோருடைய நன்மைக்கும் ஏற்றது என்று முடிவு செய்தான். கப்பலை நாகபட்டினத்திற்குத் திருப்பச்செய்து அழகப்பரை அங்கே இறக்கி விட்டுவிட்டு, நேர்ந்த பெரிய தொல்லைக்குள் இருந்து தப்பிப்பிழைத்து விட்டோம் என்னும் எண்ணத்தோடு கப்பல் தலைவன் போய்விட்டான். அழகப்பர் சிலநாட்களில் காய்ச்சல் தணியப்பெற்ருர். பிறகு தந்தையாருக்குச் செய்தியைத் தெரியப்படுத்தினர். செட்டியார் நம்முடைய புதல்வனின் முதலாவது பயணம் இவ்வாறு இடையூருகமுடிந்து விட்டதே இங்குவந்தால் அவன் இத்தொழிலில் முன்னேற்றமடைய மாட்டான் போலும் என்று எண்ணினுர். அழகப்பருடையநோக்கப்படியே மேலுங் கல்விகற்பதற்குத் தம்முடைய உடன்பாட்டையுந் தெரியப்படுத்தினர். அழகப்பர் மேலுங் கல்வி கற்கத்தொடங்கினுர். உயர்

நிலேப்பள்ளிப் படிப்பை முடித்தார். பின்னர் சென்னை மாகாணக் கல்லூரியிற்சேர்ந்துபடித்தார். எம் ஏ.பட்டம் பெற்றபிறகு இங்கிலாந்திற்குச் சென்று, ஐ சி. எஸ் பட்டப்படிப்புப் படிக்கவேண்டுமென்று விரும்பினர். இவருடைய தாய், தந்தை முதலியோர் இதற்கிடையில் இவ்வுலக வாழ்வைத் துறந்தனர். இவருடைய உறவினர்கள் இவர் மேற்படிப்புப் படிப்பதை விரும்ப வில்லே. படிப்பதை நிறுத்திவிட்டுக் குடும்பக் காரியங்களைப் பார்க்குமாறுகூறினர். அழகப்பரோ எவருடைய தடையையும் பொருட்படுத்தாமல் இங்கிலாந்திற்குப் புறப்பட்டுச் சென்றார்.

## பாரிஸ்டர் படிப்பு

இங்கிலாந்திற்குச் சென்றபிறகுதான் அழகப்பரின் உடல்நிலே சரியில்லே என்பதைத் தெரிந்து கொள்ள முடிந்தது. அதனல் ஐ. சி. எஸ் படிக்க முடியாமற்போய்விட்டது. பிறகு பாரிஸ்டர் பட்டம் பெறுவதற்குப் படித்தார். பாரிஸ்டர் படிப்புக்கு முழுநேரமுந் தேவையில்லே யென்பதை உணர்ந்தார். பாரிஸ்டர் படிப்பிற்குப் படிக்கும் நேரம் போக எஞ்சிய நேரத்தை ஒரு நல்ல தொழிலில் பயன்படுத்த எண்ணினர்.

## சாட்டர்டு பாங்கியில் வேலே

அப்பொழுது இலண்டனில் மாநாடு ஒன்றுகூடியிருந்தது. இந்தியாவில் இருந்து பல தலேவர்கள் அங்குச் சென்றிருந்தனர். தமிழ் நாட்டில்இருந்து சீனிவாச சாத்திரியாரும் போயிருந்தார். அழகப்பர் சாத்திரியாரைப்போய்ப் பார்த்தார். தம்முடைய நோக்கத்தைத் தெரியப்படுத்தி அதற்கு உதவி செய்யவேண்டுமென்று கேட்டார். மாணவர்கட்கு உதவி செய்வதில்

ஊக்கமுள்ள சாத்திரியார் உதவிபுரிய முன்வந்தார். இலண்டனில் உள்ள 'சாட்டர்டு பாங்க் ஆப்இந்தியா, வில் அழகப்பருக்கு ஒரு வேலை வாங்கிக்கொடுத்தார். பிரிட்டிஷ் அரசினர் மிகச் செல்வாக்குடன் விளங்கி யிருந்த அந்நாளில் இலண்டனில் உள்ளஇந்தப் பாங் கியில் முதன் முதலாக வேலையிற் சேர்ந்த இந்தியர் அழகப்பர்தாம்.

## விமானம் ஓட்டும் பயிற்சி

பாரிஸ்டர் படிப்பு, பாங்கிவேலை இரண்டையும் பார்த்தபிறகு கூட நேரம் எஞ்சியிருந்தது, அந்தநேரத் தையும் பயனுள்ள வகையில் செலவிடவேண்டும் என்றுஎண்ணினர்.விமானம் ஓட்டும் தொழிலைக் கற்கத் தொடங்கினர். அதிலும் வல்லவரானர்.

## நாடு திரும்புதல்

இங்கிலாந்தில்பாரிஸ்டர்படிப்பை முடித்துக்கொண்ட பிறகு1933 ஆம் ஆண்டில் பாரிஸ்டர் பட்டம் பெற்றுப் பாங்கித்தொழிற் பயிற்சியுள்ளவராய், விமான ஓட்டி யாய்ப்,புதுமனிதராய் இந்தியாவிற்கு வந்துசேர்ந்தார்.

## பங்குவாணிகத் தொழில்

இந்தியாவுக்குத் திரும்பியதும் பங்கு வாணிகத் தொழிலில்ஈடுபட்டார். அதிலுள்ள சிறந்த நிலையையும் பார்த்தார். இத்தொழிலில் பல இலட்சக்கணகான ரூபாய்களை இழந்தார்.

## அழகப்பா நூல்ஆலை

வேறுதொழில் துறையில் ஈடுபட அழகப்பர் எண் ணினர். கேரள நாட்டில் நூல்ஆலை ஒன்றைஅமைக்க

நோக்கங்கொண்டார். திருச்சூருக்கு எட்டுமைல்களுக்கு அப்பால் உள்ள புதுக்காடு என்னும் ஊருக்கு அண்மையில் காடுங்கரம்புமாக இருந்த நிலத்தை விலைக்கு வாங்கினர். அங்கு அழகிய நகரம் ஒன்றை அமைத்தார். அஃது அழகப்பா நகர்என்றே பெயர் பெற்று வழங்கலாயிற்று. அங்கு நூல் ஆலையை ஏற்படுத்தினர். அந்நூல் ஆலையில் ஆயிரக்கணக்கான கதிர்கள் சுழலத் தொடங்கின. ஆயிரக்கணக்கான தொழிலாளர்கள் அங்கு வேலைசெய்யலாயினர். பண்டைய நல்வினையுள்ளார்க்கு எல்லாச் செயல்களும் எளிதாகவே முடிவு பெறும். அழகப்பச் செட்டியாருடைய நல்வினையினலும் தளரா உழைப்பாலும் ஆக்கம் இடந்தேடிக்கொண்டு வரத் தொடங்கியது. பல லட்சக் கணக்கான ரூபாய்கள் திரண்டன. மேலுந் திரண்டு கொண்டிருந்தன. செல்வஞ் சேரச்சேர அதனைமேன்மேலும் பெருக்கிப் பெருங் கோடீசுரனுதற்கு முயற்சிப்பதே மனித குலத்தின் வழக்கமாகும். அழகப்பர் அதற்கு நேர்மாருக அறவினைகளில் ஈடுபடத் தொடங்கினர். அழகப்பருக்குப் பெண் குழந்தைதான் ஒன்று பிறந்ததே தவிர ஆண் குழந்தை ஒன்றும் பிறக்கவில்லை.

## கண்ணன் கோயில்

கண்ணபிரானுக்குத் திருக்கோயில் ஒன்று கட்ட எண்ணினர். பல ஆயிரக்கணக்கான ரூபாய்கள் செலவிட்டு அழகிய கோயில் ஒன்றை அமைத்தார்.

## மகளுக்குத் திருமணம்

தம்முடைய மகளுக்குத் திருமணம் நடத்த எண்ணினர். தனவணிகச் செல்வர்கள் எவரும் நடத்தாத

அவ்வளவு பெருஞ் சிறப்புடன் திருமணத்தை நடத்தினார். இதனால் இவருடைய புகழ் யாண்டும் மிகுதியாகப் பரவியது.

## கல்வியிற் கருத்து

மக்கள் கல்வியறிவைப் பெறுதவரையில் மாக்களாகவே இழிந்தொழிவர். கல்வியால் எல்லாப் பயனையும் நன்கு எய்தலாம் என்று முடிவு கட்டிய அழகப்பர் கல்விப் பேரறத்திற் கருத்தைச் செலுத்தத் தொடங்கினார். காரைக்குடியில் தம்முடைய பெயரால் கல்லூரியை இருபது லட்சம் ரூபாச்செலவில் ஏற்படுத்தினார். இந்தக்கல்லூரியை என்டோமெண்ட் டிரஸ்ட் நடத்தி வருகிறது இந்த் டிரஸ்டின்கீழ்ப் படிப்படியாகப்பலபுதிய கல்வி நிலையங்கள் தோன்றின. அவை பொறி இயல் கல்லூரி, பாலிடெக்னிக் கல்லூரி, பெண்கள் கல்லூரி, பிரிப்பரேட்டரி பள்ளிக்கூடம், இசைக் கல்லூரி, உடற் பயிற்சிக் கல்லூரி, மின்சார ரசாயன ஆராய்ச்சிக்கூடம் முதலியன. இவைகளில் ஆயிரக்கணக் கான மாணவர்கள் சேர்ந்து படித்துப் பயன்பெறுகின்றனர். அண்ணுமலைப் பல்கலைக்கழகம் முதலிய பல கலைக்கழகங்களுக்குத்தாராளமாகநன்கொடை வழங்கினார் அழகப்பருடைய நன்கொடை பெறுத கல்வி நிலையங்களே நாட்டில் இல்லை யென்னலாம்.

## பலவகைப் பதவிகள்

1945 ஆம் ஆண்டு முதல் அண்ணுமலைப் பல்கலைக்கழக செனேட்மெம்பராக இருந்தார். சிறிதுகாலம் பிரதேச தொழில் கல்வி கமிட்டிமெம்பராக இருந்தார். 1954 இல் சென்னை சர்க்கார் ஏற்படுத்திய தொடக்கக்

கல்விக் கமிட்டித்தலைவராக இருந்தார். விஞ்ஞான, தொழில் ஆராய்ச்சிக் கவுன்சில் மெம்பராக இருந்தார். மத்திய மின்சார ரசாயன ஆராய்ச்சிக்கழக ஆலோசனைக் கவுன்சிலுக்கு நியமிக்கப்பட்டார். கேம்பிரிட்சில் காமன் வெல்த் பல்கலைக் கழக மாநாட்டில் சென்னைப் பல்கலைக் கழகப் பிரதிநிதியாகக் கலந்து கொண்டார். 1946 இல் சென்னைப் பல்கலைக் கழக சிண்டிகேட்டுக்கு நியமிக்கப்பட்டார். 1953 இல் தொழில் அலுவல் நிர்வாகக் கமிட்டி மெம்பராக இந்திய அரசினர் கல்வி இலாகாவினால் நியமிக்கப் பட்டிருந்தார். ஓராண்டு தென்னிந்திய வணிகசபைத் தலைவராக இருந்தார். சிறிது காலம் கொச்சி தொழில் போர்டு மெம்பராக இருந்தார். எம். சி. டி. முத்தைய செட்டியார் உயர் நிலைப்பள்ளி, லேடி முத்தைய செட்டியார் உயர் நிலைப் பள்ளி ஆகியவைகளுக்கு டிரஸ்டியாக இருந்தார். புது டில்லி இந்திய மக்களின் பஞ்ச நிவாரண டிரஸ்டிற்கு உறுப்பினராக அரசப் பிரதிநிதியால் நியமியக்கப்பட்டிருந்தார். புது டில்லி விஞ்ஞான கைத்தொழில் ஆராய்ச்சியில் நிர்வாகக்குழுவிற்கு இந்திய சர்க்காரால் உறுப்பினராக அமைக்கப்பட்டிருந்தார். மற்றும் செட்டியார் உறுப்பினராக இருந்து தொண்டாற்றாத பொது நலநிலையங்களே இல்லை.

## மகப்பேற்றுவிடுதி முதலியன்

கேரள நாட்டில் தமது தொழிற்சாலையில் தொழில் புரியுந் தொழிலாளர்கட்கு வேண்டிய உதவிகளை யெல்லாம் செய்தார். மகப்பேற்று நிலையம், மருத்துவச் சாலை முதலியவைகளை அமைத்தார். சென்னை சேவா சதனப் பெண்களுக்காக உமையாள் ஹாஸ்டலைக்

கொடுத்து உதவினர். சென்னை தக்கர்பாபா வித்தியா லயத்திற்கு நிலமும் பொருளும் அளித்தார்.

## நற்செயலில் சுறுசுறுப்பு

நல்ல காரியங்களைச் செய்வதில் அழகப்பர் மிகுந்த சுறுசுறுப்புடன் விளங்கினர். நல்ல காரியங்களைத் தள்ளிவைப்ப தென்பதோ நீட்டிக்கொண்டு போவ தென்பதோ இவருக்கு அடியோடு பிடிக்காது. டாக்டர் பெசன்டின் நூற்றாண்டு விழா நினைவுக் குறியாகக் கல்லூரி ஒன்றை இராமநாதபுரம் மாவட்டத்தில் தாம் தொடங்கப் போவதாக 1947 ஆம் ஆண்டு சூலை மூன் றும் நாள் அழகப்பர் அறிவித்தார். மறுநாள் கல்லூரி யைக் காரைக் குடியில் ஏற்படுத்துவதென்று முடிவு செய்யப்பட்டது. காந்திமாளிகை என்னும் முனிசிபல் கட்டிடத்தில் கல்லூரியை வைத்துக்கொள்ள அன்றே அரசினர் உடன்பாடு தெரிவித்தனர். சூலை ஏழாம் நாள் தற்காலிக இணைப்பு உடன்பாடு அளிக்கச் சென்னைப் பல்கலைக் கழகத்திற்கு விண்ணப்பம் அனுப் பப்பட்டது. சூலை 10 ஆம் நாள் பல்கலைக்கழக ஆய்வுக் கூட்டத்தினர் ஊருக்குவந்தனர். தற்காலிக இணைப்பு உடன்பாடு சூலை 31 ஆம் நாள் கிடைத்தது. ஆகஸ்டு திங்கள் நான்காம் நாள் காந்திமாளிகையைக் கல்லூரிக் குக் காரைக்குடி முனிசிபாலிட்டி கொடுத்தது. ஆகஸ்டு ஏழாம் நாள் சூரியநாராயண என்பவர் கல்லூரித்தலை வராகப் பதவியேற்றார். ஆகஸ்டு பதினேராம் நாள் அக் காலத்தில் கல்வியமைச்சராக விருந்த அவிநாசிலிங்கம் செட்டியார் கல்லூரியைத் தொடங்கி வைத்தார். இவ் வாறு அறிவிப்பைத் தொடர்ந்து வரிசையாகக் காரி யங்கள் நடந்து ஏறக்குறைய நாற்பது நாட்களில் கல் லூரி தொடங்கப்பட்டது.

## பொறியியற் கல்லூரி

1952 ஆம் ஆண்டில் அழகப்பர் நோய்வாய்ப்பட்டிருந்தார். அந்த ஆண்டு சூன் திங்களில் பொறியியற் கல்லூரி ஒன்றைத் தொடங்குவதென்று முடிவுசெய்யப் பட்டிருந்தது. செட்டியாருக்கு உடல்நிலை சரியாக இல்லாதபடியால் திட்டத்தைத் தள்ளிவைப்பதென்று செயற்குழுவினர் எண்ணமிட்டுக் கொண்டு செட்டியாரிடஞ்சென்றனர். 'என்னுடல்நிலை எவ்வாறிருப்பினும் இருக்கட்டும்; கல்லூரி உடனே தொடங்கப் படவேண்டும்.' என்று அழகப்பர் அறிவித்தார். அவ்வாறே கல்லூரி உடனே தொடங்கப்பட்டது.

## தளரா உழைப்பு

அழகப்பர் உறுதியான உள்ளமும் தளரா உழைப்பும் உடையவர். ஒரு காரியத்தைச் செய்வதென்று உள்ளத்தில் எண்ணி விடுவாராயின் எத்தகைய இடையூற்றையும் பொருட்படுத்தாமல் அக்காரியத்தை முடித்தே தீருவார். முயற்சியுடையவர்களுக்கு அருமையான காரியம் என்பதொன்று இவ்வுலகில் இல்லையென்பதை இவர் நாளுந் தம்முடைய செய்கையால் காட்டிக்கொண்டிருந்தார்.

## பெருந்தலைவர்கள்

அழகப்பருடைய கட்டிடத் திறப்புவிழாக்கள் அடிப்படைக் கல்நாட்டு விழாக்கள், முதலியவைகளை மக்களின் தலைவராகிய இராசேந்திர பிரசாத், இந்தியாவின் தலைமை யமைச்சர் சவகர்லால் நேரு, மாகாணக் கல்வியமைச்சர்கள் இத்தகைய மாபெருந்தலைவர்களே முன்னின்று நடத்தினர்கள்.

## விடுதியைவிலைக்கு வாங்கினர்

அழகப்பர் தமக்கு அருமையான செயல் ஒன்று இருந்ததாகப் புலப்படுத்திக் கொண்டதே இல்லை. ஒருசமயம் இவர் பம்பாயில் மேல்நாட்டுமுறைப்படி சிறப்பாக நடத்தப்பட்டு வரும் தங்கும் விடுதி ஒன்றுக் குச் சென்றார். தங்குவதற்கு அறைவேண்டும் என்று கேட்டார். விடுதியின் பொறுப்பாளர் அறைகாலியாக இல்லையென்று கூறினர். 'இந்தவிடுதியில் எத்தனை அறைகள் இருக்கின்றன' என்றுஉசாவினர்செட்டியார். "நீர் என்ன விடுதியையே விலைக்கு வாங்கப்போ கிறவர் போல் அன்றே உசாவுகிறீர்" என்றார். விடுதி யின் பொறுப்பாளர். "ஆமாம் விலைக்கு வாங்கத்தான் போகிறேன்" என்றுகூறி அன்றே விடுதியை விலை பேசி வாங்கிவிட்டார். இவ்வாறு எக்காரியத்தையும் முடித்தே தீருவர்.

## பெரும் பயன்

இவர் தாம் தொடங்கிய கல்லூரிகட்கும் பிற அற நிலையங்கட்குமாகக் கோடி ரூபாய்வரை வழங்கியிருப்ப தாகக் கூறப்படுகின்றது. காரைக்குடியில் இவர் தொடங்கிய கல்லூரி நாளுஞ்சிறப்புற்று இன்று மக் கட்கு மிகு பயன் விளைக்கும் நிலையமாக விளங்குகிறது. ஒருசிறுவன் தொடக்கப்பள்ளியில் நுழைந்தால் அவன் ஏதேனும் ஒரு சிறந்த பட்டதாரியாக வெளிவருவதற் குத் தகுந்த வாய்ப்பை அழகப்பர் ஏற்படுத்தியிருக்கிறார். பொருள் பெற்றவர்கள் அதனை வைக்கத்தக்க இடம் எதுவோ-அந்த இடத்தில் அழகப்பர் வைத்துவிட்டார். இவ்வாறு பெருஞ்செல்வர்கள் தத்தம் பொருள்களைப் பயன்படுத்துவார்களானல் இவ்வுலகம் ஈடும்இணையும்

அற்ற தேவருலகாக மாறிவிடும் என்பதற்குச் சிறிதும் ஐயமின்று.

## இறுதி

அழகப்பர் பொருள் நலத்தை நன்கு பெற்றிருந்தா ராயினும் உடல் நலத்தை நன்கு பெற்றிருக்க வில்லை. 1957 ஆம் ஆண்டு ஏப்ரல் திங்கள் ஐந்தாம் நாள் இவ் வுலக வாழ்வைத் துறந்து இறைவன் திருவடி நீழலை யடைந்தார்.

## இரங்கல்

வள்ளலாக விளங்கிய அழகப்பருடைய மறைவு நாட்டுமக்களுக்கும் தலைவர்களுக்கும் மிகுந்த வருத் தத்தை அளித்தது. ஒவ்வொருவரும் தம்முடைய மன வருத்தத்தை இரங்கல் உரைகளின் வாயிலாகப் புலப் படுத்திக்கொண்டனர். நாற்பத்தெட்டாண்டுகளே இவ் வுலகில் வாழ்ந்திருந்த அழகப்பர் செய்த அரிய தருமப் பணிகள் என்றென்றும் அவருடைய நினைப்பை நாட்டுமக்களுக்கு உண்டாக்கிக் கொண்டிருக்கும் என் பதற்குச் சிறிதும் ஐயமின்று.

## சா. மாசிலாமணி முதலியார் (வேலூர்)

### தோற்றம்

வேலூர் வள்ளல் என்று பாராட்டப்பெறும் மாசிலாமணிமுதலியார் தொண்டைவள நாட்டிலே இராயவேலூரிலே 1859 ஆம் ஆண்டிற் பிறந்தார். இவர் தோன்றிய குலம் துளுவவேளாளர் குலம்.

### வாழ்க்கை

ஆங்கிலக் கல்வியையுந் தமிழ்க் கல்வியையும் நன்கு கற்ற இவர் வாழ்க்கைத் துறையில் இறங்கினர். பல ஊர்களில் ஆவணப்பதிவாளராகத் தொழில் புரிந்தார். வேலூரிற் பல ஆண்டுகள் பொதுப்பணி புரிந்தார். வேலூர் நகராண்மைக் கழகத்தில் மூன்றுமுறை உறுப்பினராக இருந்து பணிபுரிந்தார். பத்து ஆண்டுகள் நீதிமன்றத்தில் அறநெறித் தீர்ப்புக் கூறுபவராகவும் அமைந்து விளங்கினர்.

### செல்வம்

இவருடைய முன்னோர்கள் தேடிவைத்த நிலபுலம் வீடுவாசல் மற்றும் இவர் தேடிய பொருள் எல்லாம் ஏறக்குறைய நான்கு இலட்சங்கள் வரை மதிப்பிடக் கூடியதாக இருந்தன.

### பண்பட்ட உள்ளம்

பொருட்பேறு பெற்ற செல்வர்கள் இவறன்மைக் குணத்தில் ஊறிப் பொருள்காக்கும் பூதமாக மாறிவிடு

வதே உலகத்திற் பெரும்பான்மையான இயற்கை. பொருளுடையோர் வள்ளலாய் விளங்குதற்குத் தெள்ளிய உள்ளம் வேண்டும். அத்தகைய உள்ளம் அமைய வில்லையேல் அவர்களால் வள்ளல்களாக ஆக இயலாது. இது கருதியே தெய்வப் புலமைத் திருவள்ளுவ நாயனாரும்

> "உள்ளமி லாதவ ரெய்தார் உலகதது
> வள்ளியம் என்னுஞ் செருக்கு."

என்று கூறியருளினார். பொருள் பெற்ற செல்வர் பலர் அப்பொருளைத் தாமும் நன்கு நுகராது அறச் செயலும் புரியாது சேர்த்துவைத்து விட்டு அவமே மாண்டொழிவர். அவர்க்குப் புதல்வர்களிருப்பின் அவர்கள் அச்செல்வத்தின் அருமை தெரியாது "அப்பன் தேடக் கர்த்தன் மகன் அழிக்கக் கர்த்தன்" என்னும் பழமொழிக்கிலக்காய் அழித்தொழிப்பார்கள். பிள்ளைகளில்லையேல் உரிமைகொண்டாடும் பிறர் அழித்தொழிப்பர். சிலசமயங்களில் இப்பொருளால் கொலைகள் பல ஏற்படுதலும் உண்டு. எவன் அறிவாளியோ அவன் தான்தேடிய செல்வத்தைத் தான் நன்கு நுகர்ந்து அறமும் புரிந்து பயன்படுத்தி மறைவான். ஆனால் இத்தகைய அறிவாளிகள் உலகிற்சிலரே இருப்பர். வள்ளல்கள் என்னும் சிறப்பு இவர்கட்கே உண்டாகின்றது. மற்றையோர் பொள்ளல்களே.

## மாணவர் விடுதி

மாசிலாமணி முதலியார் பொது வாழ்க்கையில் நன்கு ஈடுபட்டிருந் தாராகையால் எல்லாச் செய்திகளையும் நன்கு உணர்ந்துகொள்ளும் வாய்ப்பு இவருக்கு நன்கு அமைந்திருந்தது. துளுவவேளாள

மாணவர்கள் பலர் கல்விகற்க வசதியில்லாமல் நாட்டுப்புறங்களில் வாடித் தவிப்பதை இவர் அறிந்தார். கற்பதற்கு நகரத்திற்கு வரும் மாணவர்களும் உணவின் பொருட்டு அல்லற்படுவதையுங் கண்டார். உயர்நிலைப் பள்ளி அமைந்துள்ள இவ்வூரில் மாணவர்கள் தங்கியிருத்தற்கும் உணவுபெறுதற்கும் தக்க ஏற்பாடு செய்யின் மிகுநல்ல காரியம் ஆகும் என்று முடிவுசெய்தார். இவைகளைத் தருமப் பணியாகச் செய்தலே மேலான நல்வினை என்னும் உணர்வும் உண்டாகியது. 1917 ஆம் ஆண்டில் 'மாசிலாமணி விடுதி' என்று தம்முடைய பெயருடனேயே மாணவர் இல்லத்தைத் தொடங்கினர்.

## தாமே தொண்டு புரிதல்

பெருந் தொகையைச் செலவிட்டு மாணவர் விடுதியை அமைத்ததோடு தம்முடைய கடமை தீர்ந்து விட்டதென்று இவர் அமைதியாக ஓரிடத்தில் அமர்ந்து விடவில்லை. விடுதியின் எல்லாவேலைகளையுந் தாமே பார்க்கத் தொடங்கினர். ஒவ்வொரு வேலையையுந் தாமே நேரிற் பார்த்து நடத்தினர். ஒவ்வொரு மாணவனையுந் தம்முடைய பிள்ளையைப்போல் எண்ணினர். மாணவர்களுடைய பெற்றோர் நிலை, இருப்பிடம், தொழில், உடன்பிறப்பு, அகவை, கற்கும் வகுப்பு, அவனுடைய கல்விநிலை, குணம் முதலிய பிறசெய்திகள் எல்லாவற்றையும் நன்கு உசாவி அறிந்துவைத்திருந்தார். விடுதியினுடைய கணக்கு வழக்கு முதலியன முதலியாருக்கு மனத்திலேயே நன்கு பதிவாகியிருந்தது.

## இவரே சிறந்த பாடமானூர்

மாணவர்கள் நல்லொழுக்கம் நல்லறிவு திருந்திய பண்பாடு பரந்த மனநோக்கம் முதலியவைகளைக் கற்றுக்கொள்வதற்குப் பாடங்களைக் கற்கவேண்டிய வேலை ஏற்படவில்லை. முதலியாருடைய ஒழுகலாறுகளே மாணவர்களுக்கு அப் படிப்பினையை நன்கு புகட்டின. நாள்தோறும் விடியற் காலையில் எழுந்துதாம் செய்யவேண்டிய நாட்கடன்களை முடித்து விட்டுக் கதிரவன் புறப்படும் நேரத்திற்கு மாணவர்விடுதிக்குச் செல்வார். பார்க்கும் மாணவர்கள் எல்லாருடனும் உரையாடுவார். அவர்கட்குள்ள குற்றங்குறைகளையெல்லாம் உசாவுவார். ஆகவேண்டியவைகளைச் செய்வார்.

## பிறவுதவிகள்

மாணவர் தரும விடுதியையே தம்முடைய வாழ்க்கைப்பயனாகக் கொண்ட இவர் பள்ளிக்கூடக் கட்டணம் கட்டமுடியாதிருந்த மாணவர்கட்கு அக்கட்டணத்தைக் கட்டினர். புத்தகம் முதலியவைகளும் வாங்கி வழங்கினர். தம்முடைய இல்லத்தை நாடி உதவிதேடி வந்தவர்கட்கும் ஆவன புரிந்தார். இவரிடம் பலர் சென்று உதவி பெற்றுச்சென்றனர்.

## பெருமை பாராட்டாமை

எத்தனையோ செல்வர்கள் வெளியே புறப்படுவதானல் வண்டியில்லாமற் புறப்படமாட்டார்கள். நடந்து சென்ருல் மிக இழிவாயிற்றே என்பதுதான் அச்செல்வர்களுடைய எண்ணம். ஆனல் முதலியார் நடந்து செல்வதற்குச் சிறிதும் நாணினர் அல்லர். தம்முடைய எண்பத்தெட்டாவது அகவையிலும் விடுதி முதலிய இடங்கட்கு நடந்தே சென்ருர். முதுமை மிகுதி

யான காலத்தில் மாணவன் ஒருவனுடைய தோளைப் பற்றி நடந்துகொண்டிருந்தார். காலத்தை முதலி யார் சிறிதும் வீணாக்கமாட்டார். தம்முடையவேலைகளை மணிக்கணக்கில் வரையறை செய்து கொண்டு அவ் வாறே செய்து வந்தார். தமக்குப் பிற்காலத்தில் மாணவர் விடுதியை நன்கு நடத்துவதற்குத் தெய்வ சிகாமணி என்னும் மாணவரைத் தேர்ந்தெடுத்துப் பழக்கினார். அம்மாணவரும் இந்நாளில் வல்லுநராய் விடுதியைப் பாதுகாத்து வருகின்றார்என்றுதெரிகிறது.

### தலைசிறந்த உதவி

உதவிகள் பலவற்றினுஞ் சிறந்த உதவி கல்வி கற்கும் மாணவர்கட்கு உணவு, உறையுள் முதலியன வழங்குதலே. இதனை இந்நாளில்தான் பலர் உணர்ந்து கொண்டு இப்பணியில் இறங்கி வருகின்றனர். அரசி னரும் மதிய உணவுத் திட்டம் முதலியவைகளை மேற் கொள்ள முயலுகின்றனர். இதனைப்பல்லாண்டுகட்கு முன்னரே உணர்ந்துகொண்டு இத்துறையிற் கருத்துச் செலுத்திய மாசிலாமணி முதலியார் உண்மையில் ஒரு மாசிலா மணியே என்பதற்கு ஐயமின்று.

### பல மாசிலா மணிகள்

நாட்டில் வேறுசில மாசிலாமணிகளுந் தோன்றி நல்ல பணிபுரிகின்றன. நமதுசெந்தமிழ்நாடு வறுமை யின்கொடிய பிடிக்குள் அகப்பட்டுத் திண்டாடிக்கொண் டிருக்கின்றது. இந்நாட்டிற்கு இரண்டொரு மாசிலா மணிகள் போதமாட்டா. இன்னும் பலமாசிலாமணிகள் தோன்றவேண்டும். அப்பொழுதுதான் நமது தமிழ் நாடு அறிவில் தலைசிறந்து பிறநாடுகளைப் போல் நிமிர்ந்து நிற்கக்கூடும்.

# எ. சர்க்கரை மரபினர்

## கொங்குநாட்டு வள்ளல்கள்

கொங்குவள நாட்டிலே சீர்த்திமிக்க வள்ளல்கள் பலர் வாழ்ந்திருந்தனர். அவர்களிற் சர்க்கரை மரபினர் என்போர் ஒரே வகையான சிறப்புப் பெயர்களைப் பெற்றிருந்தனர். மன்ருடியார் என்பது இவர்களுடைய பெயரின் இறுதியில் அமைந்து வழங்கியதாகத் தெரிகிறது. கொங்கு மண்டல சதகத்தில், ஆணூர்ச் சர்க்கரை, நல்லதம்பிச் சர்க்கரை, சம்பந்தச் சர்க்கரை ஆணூர்க்காமிண்டன் முதலிய பலபெயர்கள் காணப்பெறுகின்றன. ஒருமரபில் தோன்றியவர்களின் புகழ்ச்செயலோ பழிச்செயலோ அவர்களுடைய வழிமுறையினரையுஞ் சேர்வது இயற்கை. சர்க்கரை மரபினரின் வள்ளல் தன்மையும் ஒருவருடைய செயல் மற்ருெருவருடையதாக மாறி நிற்பதாகத் தெரிகிறது. இங்குப் பொதுவாகச் சர்க்கரை மரபினரின் வள்ளல் தன்மையே கூறப்படுகிறது.

## ஆணூர்ச் சர்க்கரை

ஆணூர்ச் சர்க்கரை என்பவர் காரையூர் என்னுஞ் சீரூரிலே வாழ்ந்திருந்தார். பெருஞ்செல்வர். நற்குணங்கள் பலவும் இவரிடம் நன்கு அமைந்திருந்தன. பொருள் பெற்ற பயன் பிறர்க்குதவி செய்தலே என்பதை உள்ளத்துட்கொண்டு தம்மை நாடிவரும் ஏழை எளியவர்கட்கும்அறிஞர்கட்கும் தாராளமாகப் பொருளை வழங்கினுர். இவரால் இயற்றப்பெற்ற அறச்சாலைகள்

நாட்டின் பல விடங்களினுங் காணப்பட்டன. தனிப் பாடல்களும் நூல்களும் இவர் மீது புலவர்களால் பாடப்பெற்றன. இவருடைய சீர்த்தி நாடெங்கும் பரவிவிட்டது இவர் மிகுந்த களிப்புடன் வாழ்க்கையை நடத்திக்கொண்டிருந்தார்.

## வீரபத்திரப் புலவர்

இவர் காலத்தில் கீழ்கரைப் பூந்துறை நாட்டில் திருச்செங்கோடு என்னும் ஊரில் வீரபத்திரப் புலவர் என்னும் பெயருடைய புலவர் ஒருவர் இருந்தார். அவர் ஏகாலியர் மரபிற்றோன்றியவர். அவர் நாடெங் குஞ் சுற்றித் தம்முடைய கல்வித்திறமையைப் பரப்பிக் கொண்டிருந்தார். ஆணூர்ச்சர்க்கரையின் வள்ளல் தன்மையையும் அறிவுச் சிறப்பையும் நன்கறிந்தவர். ஆணூர்ச் சர்க்கரையைக் கண்டு உரையாடி மகிழ எண் ணினார். காரையூரை அடைந்துசர்க்கரையைக் கண்டார். இருவரும் அளவளாவி உரையாடினர். ஆணூர்ச் சர்க்கரை நல்ல அறிவாளியாகையால், "சாதி குலம் பிறப்பென்னுஞ் சுழிபட்டுத்தடுமாறும்" அறவிலியாக இருக்கவில்லை. ஆகவே,

> 'கற்றவர்க்கும் நலம்நிறைந்த கன்னியர்க்கும் வண்மைகை
> உற்றவர்க்கும் வீரரென் றுயர்ந்தவர்க்கும் வாழ்வுடைக்
> கொற்றவர்க்கும் உண்மையான கோதில் ஞான சரிதராம்
> நற்றவர்க்கும் ஒன்றுசாதி நன்மைதீமை இல்லையால்.'

என்னும் அறிஞரின் திருவாக்கைப் பின்பற்றி நன் முறையிலேயே வீரபத்திரப் புலவரை வரவேற்றுப் போற்றி உரையாடிக்கொண்டிருந்தார். விரைவில் உணவு படைக்குமாறு மடைத்தொழிலாளர்களுக்குச்

செய்தி கூறவேண்டி விட்டிற்குள்ளே சென்ருர். சென்றவர் திரும்பிவரச் சிறிது நேரமாகிவிட்டது.

## கோள்

சர்க்கரை உள்ளே சென்றிருந்த சமயம் நடுப்பகல் நேரம் வீட்டிற்குள் இருந்து வந்த கோளன் ஒருவன் உள்ளே சென்ற சர்க்கரையார் யாது செய்கிருர் என்பதைச் சிறிதும் உணரான். உள்ளே சென்ற சர்க்கரையார் சாப்பாட்டிற்குத்தான் செல்லுகிருர். வந்திருக்கும் புலவர் வண்ணுர் குலத்தினராகலின் உடன் வைத்துக்கொண்டு சாப்பிடமாட்டார். அவர்சாப்பிட்ட பிறகு தான் இந்த ஏகாலிப் புலவருக்குச் சோறிடுவார் என்று தனக்குத்தானே எண்ணமிட்டு ஒருமுடிவுசெய்து கொண்டான். அவன் வீரபத்திரப்புலவரைப்பார்த்து, "சர்க்கரையார் சாப்பிடுகிருர்; அவர்சாப்பிட்ட பிறகு தான் உங்களுக்குச் சாப்பாடு போடுவார். நீங்கள் அது வரையிலும் காத்துக்கொண்டிருக்க வேண்டியதுதான்" என்று செய்தி கூறிவிட்டுப்போய் விட்டான்.

## புலவர் சினம்

கோளனது கோளுரையைக் கேட்டார் புலவர். சரி! நாம் தாழ்ந்த குலத்தினர் என்று இவர் இழிவாக எண்ணியிருக்கிருர். இவருடைய இல்லத்தில் நாம் உணவு கொள்வது தக்கதன்று. உடனே புறப்பட்டுப் போய் விடுவது தான் நல்லது என்று முடிவுசெய்தார். எழுந்து தாம் செல்லவேண்டிய வழியே சென்ருர். சர்க்கரையார் இலேபோட்டு உணவுவகைகளைப் படைக்கச்செய்தார். புலவரை அழைப்பதற்கு வெளியே வந்து பார்த்தார். வீரபத்திரப் புலவரைக் காணவில்லை

வெளியேபோய்ப் பார்த்தார். அவர் விரைவாகச்சென்று கொண்டிருப்பது தெரிந்தது; விரைவாகப் புலவரிடம் ஓடினார். அவருக்கு முன்னே நின்று கொண்டு "என்ன ஐயா இபபடிப் புறப்பட்டுவிட்டீர்கள்? என்ன தவறுசெய்து விட்டேன் நான்" என்று மிகுந்த பணிவுடன் கேட்டார். வீரபத்திரப் புலவர் வருத்தந்தங்கிய உளத்தினராய்ச் சர்க்கரை மன்றாடியாரைப் பார்த்து, 'எதிர்த்தோர்க்குமிண்டன் வித்துவான்களுக்குத்தொண்டன்' என்னும் பெயரை உங்களுடைய முன்னோர்கள அடைந்திருக்கிறார்கள் என்று ஊரிலே பலரும் உரைப்பதைக்கேட்டு மகிழ்ந்து உம்மிடம் வந்தேன். உள்ளே சென்ற நீங்கள் சாப்பிட்டுக் கொண்டிருப்பதாக உங்களுடைய ஏவலர் மூலம் உணர்ந்தேன். வந்த விருந்தினர்க்கு உண வூட்டிய பிறகு இல்லத்தான் உணவு கொள்ளுதல்வேண்டும். சென்ற விருந்தினர்க்கு உணவு ஊட்டி விட்டு மேற்கொண்டு வருகின்ற விருந்தினரோடுதான் உண்ணலாம் என்று வரு விருந்தை எதிர்பார்த்துக் கொண்டிருப்பவன் தானே வானவர்க்கு நல்விருந்தாவான். இதனை உணராது இவன் வண்ணாரக்குலத்தினன் இவனோடு நாம் சாப்பிடக் கூடாது; நாம்முன்னரேசாப்பிட்டு விடவேண்டும்என்று முடிவு செய்து சாப்பிடத் தொடங்கிவிட்டீரே" என்று சொன்னார். மேலும் சர்க்கரையாரைப் பார்த்து, "ஒரு புலவன் ஒருவரிடத்திற்குச் செல்வது அவனுக்கு மிகுந்த புகழை உண்டாக்குவதாகும். இதற்குமுன் புலவர்கள் பலர் உம்மைப் புகழ்ந்து பாடியிராவிட்டால் நான் ஏன் உம்மைத் தேடிக்கொண்டு வருகிறேன். வருகிறவழியில் எத்தனையோ பெயர் என்னைப் பாராட்டக் காத்திருக்கிறார்கள். அவர்களிடமெல்லாம் போகா

மல் உம்முடைய இடத்திற்கு வந்தது உம்முடைய பெருமையை நோக்கித்தானே ?" என்றார்.

## சர்க்கரையார் மறுமொழி

புலவர் புகனறதைக் கேட்ட சர்க்கரையார், புலவர்பெருமானே! உள்ளேசென்ற நான் இலைபோட்டு உணவுவகைகளைப் படைப்பதற்கு ஏற்பாடுசெய்து கொண்டிருந்தேனே யல்லாமல் சாப்பிடவில்லை. அறிஞர்களுடைய குலம் முதலியவைகளை நான் எக் காலத்திலும் உசாவியதும் இழிவாக மதித்ததும் இல்லை. முனிவர்களுடைய தவஞானங்களைத்தானே மக்கள் தெரிந்து கொள்ளுகிறார்கள். புலவர்கள் தம் முடைய அறிவால் உலகத்திற்கு நன்மை விளை விப்பதைப்போல் வேறு எவருஞ் செய்ய மாட்டார்கள். இதனை நான் நன்கு உணருவேன். நான் உள்ளே சாப்பிடவில்லை. உங்களை இழிவாக எண்ணவில்லை என்று எந்த முறையில் வேண்டுமெனினும் சத்தியஞ் செய்து தருகிறேன்" என்று கூறினர்.

## காய்ச்சிய நெய்யிற் கையிடுதல்

புலவர் சர்க்கரையாரைப் பார்த்து, "நீர் சாப்பிட வில்லை, என்னை இழிவாக எண்ண வில்லை எனின் நெய்யைக் காய்ச்சி அதிலே கையை விட்டுச் சத்தியஞ் செய்து தாரும்" என்று கேட்டார். சர்க்கரையார் உடனே நெய்யைக் காய்ச்சிக்கொண்டு வரச்செய்து புலவர் விரும்பியபடியே அதிற் கையை விட்டுச் சத் தியஞ் செய்து கொடுத்தார். புலவர் பிறகு ஒருவாறு

மன நிறைவுகொண்டார். பிறகு இருவரும் ஒன்றாக அமர்ந்து உணவு கொண்டனர்.

## எச்சில் வாய்கழுவுதல்

புலவர் சக்கரையாரைப்பார்த்து "சர்க்கரையாரே! நீர் உறுதி மொழியளித்துங் கூட என் உள்ளத்திற்கு நிறை வேற்படவில்லை. நீவிர் எம்மை இகழ வில்லை யென்றால் என்னுடைய எச்சில் வாயைக் கழுவி விடுதல்வேண்டும்; அப்படிச் செய்வீரா?" என்று கேட்டார். இதனைக்கேட்ட சர்க்கரை மன்றாடியார் மிகுந்த மகிழ்ச்சிகொண்டு புலவருடைய எச்சில் வாயையும் கையையும் கழுவிவிட்டனர். புலவர் உண்மையான பற்றுக்கொண்டு சர்க்கரை மன்றாடியார் மீது 'காதல்' என்னும் நூல் இயற்றி அரங்கேற்றஞ் செய்தனர். வீரபத்திரப் புலவருடைய மனம் மகிழு மாறு சர்க்கரையார் தகுந்த நன்கொடை வழங்கிப் பாராட்டினார். சர்க்கரை மன்றாடியார் தமிழிடத்தும் தமிழறிஞர்களிடத்துங் கொண்ட பெருமதிப்பை என்ன வென்று கூறுவது. இச்செய்திகள் பின்வருஞ் செய்யுட் களால் உண்மையாக நிகழ்ந்தவை என்பதை நாம் உணர்ந்துகொள்ளலாம்

" தூசர்குல வாணனுக்கோர் சோர்வுரைக்க வில்லையென
நேசமுட னேகாய்ந்த நெய்யதனிற் கையை விட்டோன்."

என்பது நல்லதம்பிச் சர்க்கரை காதல்.

" மகிழ்ந்துகா ரைப்பதியில் வாழ்சர்க் கரைதான்
புகழ்ந்துதிரிபுல வோரை - இகழ்ந்து நான்
வையவில்லை என்று சொல்லி மண்டலமெ லாந்துதிக்க
நெய்யிலே கையைவிட்டான் நேர்ந்து."

என்பது தனிப்பாடல்.

" சீரிலகு மான்மணிப் பாய்சுமந் தான் கம்பர்
சிவிகைபாண் டியனேந்தினன்
செல்வமுயர் கச்சியப் பன்உதை பொறுத்தனன்
திகழ்சுட்டி சோம னீந்தான்
தாரிலகு குமணனும் தலைகொடுத் தான்சிவன்
தானுமொரு தூது சென்றான்
சர்க்கரையும் எச்சில்வாய் கழுவினான் காளத்தி
தன திருகை புற்றி லிட்டான்
பேரிலகு கம்பயனும் விரலாழி யீந்தனன்
பெரியவன் பெண்கொ டுத்தான்
பிணிமுகத் தான்கீர னைப்புரந் தான்பேதை
முதுகிலனம் ஒருவ னிட்டான்
பாருலகில் இத்தமிழ்க் குத்தொண்டு செய்தபேர்
பார்க்கிற் கணக்கில் லையே
பரராசர் பணிகின்ற அணாறுமலைக்குரிசில்
பாதத்தை வருடி னானே "

என்னும் பொன்னுங்கால் அமுத கவிராயர் பாட்டும், விசயமங்கலம் கார்மேகக் கவிஞர் என்பவர் இயற்றிய,

" முகஞ்சோர்ந் தகன்றிடும் ஏகாலிப் பாவலன் முன்னநின்றே
இகழ்ந்தேன் இலைஐ ய என்று சுடுநெய்யி னிற்கையைவிட்
டுகந்தே உணுமெச்சில் வாயைக் கழுவி உவப்பியற்றி
மகிழ்ந்தே புகழ்பெறு சர்க்கரை யுங்கொங்கு மண்டலமே."

என்னும் கொங்கு மண்டல சதகச்செய்யுளும் இச்செய்தியை உறுதிப்படுத்தும்.

## சவுக்கடி பெற்றது

சர்க்கரை மன்றாடியார் இவ்வாறு தமிழினிடத்தில் தம்முடையஉயிரைவைத்துத்தமிழ்வள்ளலாக விளங்கிய

காலத்தில் ஒரு புலவர் சர்க்கரை மன்றாடியார் மீது பல புகழ்ப் பாக்கள் இயற்றிக் கொண்டு வந்து இவரைக் கண்டார்.*சர்க்கரையார் புலவரை வர வேற்றுப்பாராட்டி இன்னுரையாடிக்கொண்டிருந்தார். பிறகு உணவு கொளச்செய்தார். இச்சமயத்தில் சர்க்கரையார் இன்றியமையாத அலுவல் ஒன்றை முன்னிட்டு வேறோர் ஊருக்குப் போகவேண்டிய கட்டாயம் நேரிட்டது. ஆகவே புலவருக்கு நன்கொடை வழங்கி, அவரை அனுப்பிவைக்க எண்ணினார். ஒருபெரிய தட்டில் வெற்றிலைபாக்கு, புது ஆடை, வெண்பொற்காசுகள் முதலியவைகளை வைத்துக்கொண்டு வந்து கொடுத்தார். புலவர் உடனே கையை நீட்டித் தட்டை வாங்கிவிட வில்லை. அவருக்கு மிகுந்த சினம் உண்டாகியது. அப்போது அங்குக் கிடந்த குதிரைச் சவுக்கு ஒன்றை எடுத்துக்கொண்டு சர்க்கரை மன்றாடியாரைப் பளீர் பளீர்என்று அடிக்கலானார். மன்றாடியார் புலவருடைய கையைப் பிடித்துக்கொண்டு, "ஐயா! நான் எத்தகைய தவறுஞ் செய்யவில்லையே என்னை ஏன் அடிக்கிறீர்கள்? " என்றுகெஞ்சினார்.

## நான் எதற்குவந்தேன்

புலவர் சர்க்கரையாரைப்பார்த்து, " நான் உம்மிடம் எதற்கு வந்தேன்? நான் மிக முயன்று கற்றுத் தேறியுள்ள அறநெறிகளையெல்லாம் உமக்குப் போதித்து உம்மைச் சீரிய செம்மலாகச் செய்வதற்கன்றோ? நீர் இதனை உணர்ந்து கொள்ளாமல் நான்

* இந்தச் சர்க்கரை முன்னவரா அல்லது வேறொருவரா என்பது விளங்கவில்லை.

பொருள் தண்டவந்தவன் என்று எண்ணிக்கொண்டு பொருளையே பெரிதாக மதித்து எனக்குக் கொடுப்பதற்கு வந்தீரே இதை விடவேறு என்னதவறு செய்ய வேண்டும்?'' என்று கேட்டார். சர்க்கரையார் புலவரைப் பார்த்து'' என்னுடையகொள்கையும்கற்றறிந்தாரிடத்து அவர்கள் கூறும் அறவுரையைக் கேட்கவேண்டுமென்பது தான். வருகிற புலவர்களிடமெல்லாம் அறவுரை கேட்டுக்கொண்டு தான் வருகிறேன். ஆயினும் எனக்கு இப்பொழுது இன்றியமையாத வேலையொன்று ஏற்பட்டிருக்கிறது. அதன்பொருட்டு வெளியே செல்ல முடிவுசெய்து திட்டமிட்டிருந்தேன். நீங்கள் வராமல் இருந்திருப்பின இதுவரை சென்றிருப்பேன். நான் இவ்வாறு போய் வருமாறு நேரிட்டிருப்பதற்காக என்னை மன்னியுங்கள். சில நாட்கள் இவ்விடத்திலே தங்கியிருங்கள்; நான்விரைவிலே வந்து விடுகிறேன்'' என்று கூறினர்.

## புலவர் பாராட்டு

சர்க்கரை கூறியதைக் கேட்ட புலவர் மன மகிழ்ந்தார்; சினந் தணிந்தார். அவர் சர்க்கரையைப் பார்த்து, "ஐயா! நான் தான் தவறு செய்துவிட்டேன். உங்களுடைய அருங்குணங்களை அறிந்துகொள்ளாமல் தாக்கி விட்டேன். தங்களுடைய முன்னோர்கள் தமிழ்ப் புலவர்களைப் பெரிதும் பாராட்டிப் போற்றியவர்கள். அவ் வியல்பு தங்களிடமும் நன்கு அமைந்திருக்கிறது. நான் அடித்து விட்டதை நீங்கள் இழிவாக எண்ணி விடாதீர்கள். இஃது உங்களுக்கு மிகுந்த புகழைக் கொடுக்கும்.'' என்று கூறிப் பாராட்டிச்சென்றூர். பிறகு ஒரு புலவர்,

" கண்டாற் புலவரை மேனும்பு பேசுங் கசடரிட
மிண்டாநல் லுத்தமக் காமிண்ட னேவித்து வான்களுக்குத்
தொண்டா புலவர் சவுக்கடி பெற்ற சுமுக முடைத்
தண்டா மரைக்கையுத் தண்டா நலதம்பிச் சர்க்கரையே."

என்று புகழ்ந்து பாடினர் காதற் பிரபந்தம் பாடிய வீரபத்திரக் கவிஞரும்,

" கற்றுய்ந்த நாவலர்தம் கையிற் சவுக்கடியும்
பெற்ருன் சயத்தம்பம் பேருலகில் நாட்டுவித்தோன்."

என்று பாடினர். கொங்கு மண்டல சதகம் பாடிய ஆசிரியர்,

" மீறும் உலகிலெட் டுத்திக்கும் சொட்டையில் வெல்லவல்லோன்
கூறுந்தென் காரையிற் சர்க்கரை வேந்தன் தொழுந்தமிழால்
பேறும் திகழும் பெறவேண்டி நாவலன் பெற்றகையான்
மாறுஞ் சவுக்கடி பெற்றது வுங்கொங்கு மண்டலமே."

என்று பாடினர்.

## குன்றைக்குச் சென்ற கொங்குப் புலவர்

சர்க்கரை மன்ருடியாரின் நாட்டுப் புலவர் ஒருவர் தொண்டை நாட்டிற்குச் சென்ருர். அந்நாளில் அந்நாட்டிலே குன்றத்தூரிலே எல்லப்பர் என்னும் பெயரினையுடைய வள்ளல் ஒருவர் வாழ்ந்திருந்தார். அவருடைய வள்ளல் தன்மை எங்கும் பரவியிருந்தது. கொங்கு நாட்டுப் புலவர் தொண்டை நாட்டு எல்லப்பரிடஞ்சென்ருர். எல்லப்பர் கொடுத்த கொடையை இடக்கையை நீட்டி வாங்கலானர். இதனைக் கண்ட எல்லப்பர் புலவரைப்பார்த்துப், "புலவர் பெருமானே! தாங்கள் நன்கொடைகளை வாங்குந் தன்மையை

அறிந்திருப்பதாகத் தெரியவில்லையே. ஒருவர் கொடுப்பதை இவ்வாறு இடக்கை நீட்டிப் பெறலாமா? இது கொடுப்பவர்களைச் சிறுமைப்படுத்துவதன்றோ?" என்று கேட்டார். கொங்குப் புலவர் எல்லப்பரைப் பார்த்துச், "செல்வனே! நான் நன் கொடைகளைப் பெறும் முறையை நன்கறிவேன். பெரும் பொறையும் தமிழறிவும் வள்ளற்பண்பும் ஒருங்கே அமையப்பெற்று விளங்கும் எங்கள் சர்க்கரை மன்றாடியாரின் இடத்தில் நன்கொடைபெற்ற வலக்கையைப் பிறர் எவரிடத்தும் நன்கொடைவாங்குவதற்கு நீட்டுவதில்லையென்று உறுதி பூண்டிருக்கிறேன் ஆகையால் இடக்கையை நீட்ட நேர்ந்தது, இது பற்றிச் சினங்கொள்ள வேண்டாம்" என்று கூறினார்.

## சர்க்கரையின் பண்பை ஆராய எண்ணுதல்

எல்லப்பர் கொங்குப்புலவர் இயம்பியதைக் கேட்டு மிகுந்த மகிழ்ச்சியடைந்தார். "அப்படியாயின் மிகமகிழ்ச்சி அவ்வள்ளலுடைய உதார குணம், பொறுமை முதலிய பண்பாடுகளை நான் ஆராய்ந்து பார்க்க விரும்புகிறேன். தாங்கள் அதுவரையில் இவ்விடமே தங்கியிருங்கள்" என்று கூறினார்.

## புலவர்களைக் கொங்கிற் கனுப்புதல்

தம்முடைய நாட்டுப் புலவர்களில் வல்லவர்களான சிலரைத் தேர்ந்தெடுத்தார் "நீங்கள் கொங்கு நாட்டுக்குப்போய் அங்குக் காரையூரில் வாழ்ந்திருக்கும் சர்க்கரை மன்றாடியார் என்னும் வள்ளலுடைய வள்ளல் தன்மை, பொறுமை முதலிய சீரிய பண்புகளை ஆராய்ந்து பார்த்து வாருங்கள். நான்

அவ் வள்ளலுடைய தன்மையை உணர்ந்து கொள வதற்கு அவாக்கொண்டிருக்கிறேன்" என்று கூறி யனுப்பினர்.

## ஆய்வுப்பணி

எல்லப்பரால் அனுப்பப் பெற்ற தொண்டை நாட்டுப் புலவர்கள் கொங்குநாட்டை யடைந்தார்கள் சர்க்கரை மன்ருடியாரின் பூந்தோட்டத்திற்குள் புகுந் தார்கள். அங்குப் பல மரஞ்செடி கொடிகள் மிகஅருமை யாக வளர்க்கப் பெற்றிருந்தன. அவைகளை யெல்லாம் தொண்டை நாட்டுப் புலவர்கள் தாறுமாருக வெட்டி யெறிந்து பெருங் கூச்சலிட்டார்கள். இவர் களுடைய செயலைக் கண்ட தோட்டக்காவலர் திடுக்கிட் டனர். அவர்களால் யாதுஞ் செய்ய முடியவில்லை. விரைவாகச் சர்க்கரை மன்ருடியாரிடஞ் சென்று, பெரியீர் "நமது பூம் பொழிலுக்குட் சிலமனிதர்கள் புகுந்து பூஞ்செடி முதலியவைகளைத் தாறுமாருக வெட்டி விழ்த்துகின்றனர். அவர்களை நோக்குமிடத்துப் புலவர்களைப்போல் காணப்பெறுகிருர்கள்" என்று உரைத்தனர்.

## சர்க்கரையின் இனிமை

காவலாளர்கள் கழறியதைக் கேட்டுச் சர்க்கரை மன்ருடியார் பதறவில்லை. உடனே எழுந்து பூம் பொழிலை நோக்கி ஓடவும் இல்லை. அவர் மிகுந்த அமைதியுடன் காவலாளர்களைப் பார்த்து. "அவர்கள் புலவர்களாயின் இன்னுரைகள் இயம்பி இவ்விடத் திற்கு அழைத்துக் கொண்டு வாருங்கள். அவர்களிடம் யாதுந் தவறுசெய்து விடாதீர்கள்." என்று கட்டளை

யிட்டார். காவலாளர் விரைந்து காவுக்குச் சென்றனர். புலவர்களைக் கண்டு "பெரியீர்! தங்கட்கு வணக்கம் புரிகின்றோம். எங்கள் தலைவராகிய சர்க்கரைமன்ருடியார் தங்கள் வருகையறிந்து மிக மகிழ்வு கொண்டிருக்கிருர். தங்களை உடனே அழைத்துக்கொண்டு வருமாறு கூறினுர்" என்று சொல்லிச் சர்க்கரை மன்ருடியாரிடம் அழைத்துக்கொண்டு போய்விட்டனர்.

## பாராட்டு

சர்க்கரை மன்ருடியார் தொண்டைநாட்டுப் புலவர்கட்கு நல்வரவு கூறிவரவேற்ருர். தகுந்தவாறு இருக்கை வழங்கினுர். இன்மொழிகள் பல இயம்பினுர். "தாங்கள் இவ்விடம் வருதற்கு யான் யாது நல்வினை புரிந்தேனே" என்று பாராட்டினுர். பிறகு அவர்களைப் பார்த்துச், "செந்தமிழ்ச் செல்வர்காள்! நீங்கள் என்னுடைய பூம் பொழிலில் இருந்த சில செடி கொடிகளை வெட்டி யெறிந்ததாகக் கேள்வியுற்றேன். அவைகள் அங்கு இருத்தற்குத் தகுதியற்றவையாயின் ஏவலாளர்களைக்கொண்டு வெட்டியெறியச் சொல்லலாமே. கற்களிழைத்த கணையாழிகளையும் பொன்தோடாக்களையும் பூண்டு நூல்களை ஆராய்ச்சி செய்யும் உங்களுடைய திருக்கைகள் நோகுமாறு கோடரி அரிவாள் முதலிய படைக்கலங்களைப் பிடிக்கலாமா?" என்று உசாவினுர். சிறந்த எண்ணெய்களைக் கைகளுக்குத் தடவி வெந்நீராட்டுவித்தார். புலவர்கள் சர்க்கரை மன்ருடியாரின் பொறுமையைக்கண்டு இறும்பூதெய்தினராயினும் மேலும் ஆராய்ந்து பார்க்க எண்ணினர்.

## முதுகிலேறுதல்

பிறகு உணவு கொள்ளுஞ் சமயம் வந்தது. கண்ணுங்கருத்துமாகச்சர்க்கரை மன்ருடியார் புலவர்கட்குத் தக்கன செய்து உணவு கொள்ளச் செய்தார். மன்ருடியாரின் தாய் உணவு படைத்துக் கொண்டிருந்தாள்; எல்லோரும் உணவருந்திக் கொண்டிருந்தனர். அப்பொழுது ஒரு புலவர் திடீரென்று உணவு படைத்துக் கொண்டிருந்த அம்மையாரின் முதுகில் ஏறினர். இதனல் திடுக்கிட்ட அம்மையார் மெய்தளர்ந்து தம்முடைய மைந்தன் முகத்தை நோக்கினர். இப்பொழுதுஞ் சர்க்கரை மன்ருடியார் அப் புலவரை யாதுங் கூறினர் அல்லர். "என் அருமைத்தாயே! என்னைப் பத்துத்திங்கள் சுமந்து கொண்டிருந்த தாங்கள் இப்புலவரைச் சிறிது நேரஞ் சுமக்க லாகாதா? தங்களுடைய பொறுமை எங்கே போய்விட்டது?" என்று கேட்டார்.

## புலவர்கள் போற்றல்

மன்ருடியாரின் உரைகளைக் கேட்ட புலவர் திடீரென்று கிழே குதித்தார். சர்க்கரை மன்ருடியாரையும் அவருடைய தாயையும் பலவாறு புகழ்ந்து நாவாரவாழ்த்தினர் "தங்களுடைய அன்பு பொறுமை முதலிய சீரிய பண்புகளை அறிந்து கொள்வதற்காகவே நாங்கள் இவ்வாறு செய்தோம். இத்தவற்றினை நீங்கள் பொறுத்துக் கொள்ளுதல் வேண்டும். நாங்கள் தொண்டை நாட்டில் உள்ள குனறத்தூர் எல்லப்பருடைய அவைக் களப் புலவர்கள். தங்கள் பண்புகளை ஆராய்ந்து பார்க்குமாறு அவர் எங்களை அனுப்பினர்" என்று யாவருங்கூறினர். இதனைக்கேட்ட சர்க்கரையார்

"தொண்டை நாட்டாருடைய சோதனைக்குக் கொங்கு நாட்டார்களாகிய நாங்கள் ஆற்றுவேம் அல்லேம்" என்று இன்னுரைகள் பல இயம்பி அவர்களெல்லோருக்கும் மிகுதியாக நன்கொடைகள் வழங்கினர். தொண்டை நாட்டுப் புலவர்கள் திரும்பிச் சென்று எல்லப்பரைக் கண்டு எல்லாச் செய்திகளையும் விளக்கமாகக் கூறி,

"செங்குன்றை எல்லாநின் செங்கைக் கொடையதனுக்
கெங் கெங்குந்தேடி இணைகாணேம்—கொங்கதனில்
சர்க்கரையைப் பாடலாம் தண்டமிழ்க்கொன் றீயாத
எக்கரையாம் பாடோம் இனி"

என்று கூறிப் பாராட்டினர். எல்லப்பரிடம் தங்கியிருந்த கொங்குநாட்டுப் புலவர் தக்கவாறு நன்கொடை பெற்றுக் கொண்டு திரும்பினர். இச்செய்திகளின் உண்மை,

"அன்னைவெரிந் மேற்கொளச்சேய் ஆனனத்தை [நோக்குதலும்
என்னையீ ரைந்துதிங்கள் இன்பாய்ச் சுமந்தீரே
இவரை யொருநிமிட மேசுமப்பீர் என்றுரைத்த"

என்னுஞ் சர்க்கரை மன்றாடியாரின் காதலாலும்;

"திருத்து புகழ்பெறும் ஆனூரிற் சர்க்கரை செந்தமிழோன்
விருத்த முடனன்னை மேலேறத் தாய்வெகு ளாமலெனைப்
பொருத்த முடன்பத்து மாதஞ்சுமந்து பொறையுயிர்த்தாய்
வருத்த மிதிலென்ன என்றான் அவன்கொங்கு மண்டலமே"

என்னுங் கொங்கு மண்டல சதகச் செய்யுளாலும் பெறப்படுகின்றன.

## சம்பந்தச் சர்க்கரை

அரசாங்கத்தினருக்குச் செலுத்த வேண்டிய வரியைச் செலுத்தத் தவறின பல பாளையக்காரர்களையும் காணியாளர்களையும் மதுரைத்தளவாய் இராமப்பையன் என்பவன் சங்ககிரிதுர்க்கக் கோட்டையில் சிறைவைத்திருந்தனன். அவ்வாறு சிறைவைக்கப் பட்டவர்களில் சர்க்கரை மன்றாடியாருஞ் சேர்ந்திருந்தார். அந்நாளில் ஒருதமிழ்ப்புலவர் மிடியின் இடியால்மிகுகொடுமைக்குள்ளானார். சர்க்கரை மன்றாடியாரைக் கண்டு ஏதேனும் பரிசுபெற்று வரவேண்டு மென்று முடிவு செய்தார். ஆனூருக்குப் போய்ச் சர்க்கரை மன்றாடியாரைத் தேடினார். அவர் சங்ககிரிதுர்க்கக் கோட்டையில் சிறை வைக்கப்பட்டிருத்தலை அறிந்தார். நேரே சங்ககிரி துர்க்கத்திற்கு வந்து சேர்ந்தார். சிறைவாயில் காவலராக நியமிக்கப் பட்டிருந்தவர்களைத் தம்முடைய சொல்லாற்றலால் தம்வழிப்படுத்திக் கொண்டார். பிறகு உள்ளே சென்றார். அங்கு பலபேர் சிறைவைக்கப் பட்டிருத்தலைக் கண்டார். தாம் நாடி வந்த சம்பந்தச் சர்க்கரையார் என்பதை இவரால் கண்டுபிடிக்க முடியவில்லை. அங்கிருந்த செல்வர்களைப் பார்த்து, “இங்கிருப்பவர்களில் சம்பந்தச் சர்கரை யாவர்? என்று உசாவினார். அங்கிருந்தவர்கள் புலவருடைய நிலைமையைக் கண்டு நகையாடினர். அவர்கள் புலவரைப் பார்த்து,” ஐயா புலவரே! பரிசு பெறுவதற்குத் தக்க இடம் இதுதானா? விடுதலையாகி ஊரிலே மகிழ்ச்சியோடிருக்கும் போது வந்தீர்களானால் தகுந்தவாறு நன்கொடை பெற்றுக் கொண்டு போகலாமே இந்த இடத்தில் பொருள்

ஒன்றுமில்லையே. இந்த இடத்திற்குத்தானு செய்யுள் பாடிக்கொண்டு வருவது ?'' என்று பலவாறு கேட்டு எள்ளி நகையாடினார்கள். அப்பொழுது வந்திருந்த புலவர்; தம்முடைய வறுமையின் கொடுமையையே பெரிதாக மதித்திருந்தா ராகலின் ;

'' எவரையென்று நாமறியோம் இரப்பவனே
இடமறியான் இரவில் வானம்
கவருமதி யொருபுறத்தே நிலவெறிக்கும்
பான்மைதனைக் கண்டி லீரோ
அவரைபதம் ஆகுமுனம் கடுகு பொடி
ஆகிவிடும் அதனை யோர்ந்து
துவரை முதற் கரதலனும் சம்பந்தச்
சர்க்கரையார் சொல்லுவீரே ''

என்று பாடினார். அங்கிருந்த சர்க்கரை மன்றுடியார் விரைந் தோடி வந்தார். செந்தமிழ் வாணரை இருகைகளாலுந் தழுவிக்கொண்டார். "இச்சிறைக் கூடத்திற்கு வந்து என்னைப் பார்ப்பதற்கு மிகுந்த தொல்லைப்பட்டிருப்பீர்களே'' என்று கண்ணீர் ததும்ப இனிய மொழிகள் பல இயம்பினார். சிறைக்கூடத்தைத் தேடிவந்த புலவருக்குக் கொடுப்பதற்கு யாதும் இல்லையே என்று உள்ளம் வருந்தினார். அப்பொழுது சர்க்கரை மன்றுடியாருடைய மனைவியார் கோட்டைக்கு வெளியே வந்து தங்கியிருந்தார். "புலவர் ஒருவர் இங்கு வந்துள்ளார், கொடுப்பதற்கு இங்கு என்னிடம் யாதும் இல்லையென்று சொல்லி ஏவலாளன் ஒருவனைத்தம்முடைய மனைவியிடம்அனுப்பினார்.சமயத்தை மனைவியார் நன்கு உணர்ந்து கொண்டார். அப்பொழுது அவ்வம்மையாரிடமும் பொருள் ஒன்றுமில்லை. யாது செய்வதென்று சிறிது நேரம் எண்ணமிட்டார்.

கழுத்தில் திருத்தாலி யிருப்பது நினைவிற்கு வந்தது. உடனே அத்தாலியைஅவிழ்த்து அதனை வந்த ஆளிடங் கொடுத்து விட்டுத் தாம் வெறுங் கயிற்றினைக் கழுத் தில் கட்டிக்கொண்டார். ஏவலாளன் திருத்தாலியைச் சர்க்கரை மன்றாடியாரிடங் கொடுத்தான். அதனை வாங்கிய அவர் மிகுந்த மகிழ்ச்சியடைந்தார். இவ்வரிய சமயத்திற்கு இத்தாலியானது உதவியாயதே என்று பெரிதும் உளம் மகிழ்ந்தார். அதனைப் புலவரிடங் கொடுத்து இதனை இப்பொழுது அருள் செய்து பெற்றுக் கொள்ளவேண்டும். பிறகு நான் நன்னிலையை அடையும்போது தகுந்தவாறு பொருள் வழங்குவேன்" என்று கூறினர். புலவர் அதனைப் பெற்றுக்கொண்டு அவ்விடமிருந்து புறப்பட்டார். சர்க்கரை மன்றாடியா ரோடு இருந்த மற்றையோர் இந்நிகழ்ச்சியைப் பார்த்து வியந்தார்கள். புலவர் பொல்லாதவராக இருக்கிறரே திருத்தாலியை யாதும் பேசாது வாங்கிக் கொண்டு போகின்றரே என்று உள்ளத்தில் ஒருவாறு புலவரைத் தாழ்வாகவே நினைத்து எண்ணமிட்டுக் கொண்டிருந்தார்கள்.

## புலவர் இராமப்ப ஐயனிடம் போதல்

தாலியைச் சர்க்கரை மன்றாடியா ரிடமிருந்து பெற்றுக் கொண்ட தண்டமிழ்வாணர் நேரே தம்முடைய வழியைப் பார்த்துச் சென்று விடவில்லை. தாலியைக் கையில் ஏந்தியவாறே தளவாய் இராமப்ப ஐயனிடஞ் சென்றார்.

" கொங்கினில் இராமப்பை யன் அதிகாரக் குரூரத்தினால்
கங்குல் இராப்பகல் சர்வசங் காரஞ்செய் காலத்திலே.
சிங்காற் சம்பந்தச் சர்க்கரைதேவி திருக்கழுத்தின்
மங்கலி யந்தனைத் தந்தான் தமிழ்க்கவி வாணருக்கே "

என்னுஞ் செய்யுளைப் பாடினார். சர்க்கரை மன்றாடியார் பெருங்கொடை வள்ளல் என்பதையும் வண்டமிழ் வாணர்கட்கு வரையாதளித்தே வரிசெலுத்தக் கூட முடியாத நிலைமையில்உள்ளார்என்பதையும் இராமப்ப ஐயன் ஒருநொடியில் உணர்ந்து கொண்டான். அவனுக்கு மிகுந்த மகிழ்ச்சி யுண்டானதோடு இவ்வாறு சிறந்த வள்ளலையுஞ் சிறையில் தள்ளினேமே என்று நாணமும் உண்டாகிவிட்டது. அவன் உடனே சர்க்கரை மன்றாடியாரைத் தன்முன் அழைத்துக் கொண்டுவரக் கட்டளை யிட்டான்.

## மன்றாடியாரும் மற்றையோருஞ் சிறைமீளல்

மன்றாடியார் வந்ததும் அவரைப் பார்த்து "நீர் சிறந்த கொடையாளி என்பதை இன்றுதான் உணர்ந்தேன். நீர் செலுத்தவேண்டிய இறைவரியைக் காலம் நன்றான பிறகு செலுத்திவிடும். உமக்கு இப்போது ஏதேனும் உதவி வேண்டுமோ? வேண்டுமானால் கூறுந் தருகிறேன்" என்று கூறினான். சர்க்கரை மன்றாடியார் தம்மோடு சிறையில் இருக்கும் மற்றைய பட்டக்காரர் முதலியவர்களையும் சிறையில் இருந்து விடுவிக்க வேண்டுமென்று வேண்டிக்கொண்டார். இராமப் பையனும் அவ்வாறே எல்லோரையுஞ் சிறையில் இருந்து விடுதலை செய்தான். இச் செய்திகள்,

> "வாணன் உரைததிட மால்ராமப் பையன் மனமகிழ்ந்து
> வேணது கேளெனச் சம்பந்தச் சர்க்கரை வேளினுமிவ்
> வீணரைக் காவல் விடீரென்று கூறிட விட்டிடலும்
> தாணுவென் றிம்முடிக் காணிக்கைச் சாசனந் தந்தனரே"

என்னுஞ் செய்யுளாலும்;

" சங்ககிரிதுருக் கத்திற் சிறையினில் சார்ந்திடு நாள்
சங்கை இலாதொரு பாவாணன் சென்று தமிழுரைக்க
அங்கண் இருந்துதன் இல்லாள் கழுத்தில் அணிந்திருக்கும்
மங்கலி யந்தனைப் பெற்றளித் தான் கொங்கு மண்டலமே ";

என்னுங் கொங்குமண்டல சதகச் செய்யுளாலும் நன்கு உறுதியாகின்றன.

## சீற்றங்கொண்ட செந்தமிழ்ப் புலவர்

சர்க்கரை மன்றாடியார் இறைவழி பாட்டின் பொருட்டுச் சிவப்பதிகட்குச் சென்றிருந்தார். சென்றிருந்த விடத்திற் செந்தமிழ்ப் புலவர் ஒருவர் வள்ளல் சர்க்கரை மன்றாடியாரைக் கண்டார். மன்றாடியார் சிறந்த வள்ளல் என்பதை உணர்ந்திருந்து அவர் இவரைப்பார்த்துத், தமக்குக்கடன் இருப்பதாகவும் அதனைத் தீர்த்தற் பொருட்டுப் பொருள் கொடுத்து உதவிசெய்ய வேண்டுமென்றும் வேண்டிக் கொண்டார். சர்க்கரையார் புலவரைப் பார்த்து " நான் என் சிவப்பதி வழிபாடுகளை முடித்துக் கொண்டு ஊருக்குப் போய்ச் சேர்வதற்குப் பதினைந்து நாட்களாகும். தாங்கள் பதினைந்து நாட்களுக்குமேல் ஊருக்கு வருவீர்களாயின் விரும்பியபொருளைக்கொடுக்கிறேன் " என்றார். கடன்காரப் புலவர் பதினருவது நாள் மன்றாடியாரின் ஊரான காரைக்குச் சென்று வள்ளல் வந்துவிட்டாரா என்று உசாவினர். வரவில்லை என்று தெரிந்தது. எங்கிருக்கிறார் என்பதை உசாவி யறிந்துகொண்டு தேடிச்சென்றார். கரூரிலே கண்டு பிடித்தார். பதினைந்தாவது நாள் ஊருக்கு வரச்சொல்லிவிட்டு இவர் இன்னுஞ் சுற்றித்திரிகிறாரே என்று மிகுந்த சீற்றங்கொண்டார். " உன்னுடைய

மொழிகளை நம்பி நான் கடன்காரர்களுக்கு நாள் குறிப்பிட்டுச் சொன்னேன். சொன்னபடி கொடுக்க முடியாமல் போய் விட்டது. அவர்கள் என்னைப் பொய்யன் என்று இகழ்கிறார்கள்; உடனே பணத்தைக் கொடு என்று வற்புறுத்தினர். "ஊருக்குச் செல்லுவோம் புறப்படுங்கள்" என்றார் சர்க்கரையார். புலவருக்குக் கோபம் உண்டாயிற்று.

## விற்பேன் என்றல்

உன்னுடைய வள்ளல் தன்மை மிக நன்றாக இருக்கிறது. நான் உன்னோடு உன்னுடைய ஊருக்கு வர முடியாது. உன்னை இவ்வூர்த் தெருவில் விற்று என்னுடைய கடனைத் தீர்த்துக் கொள்ளுவேன்" என்றார். 'விற்பதற்குக் கடைத் தெருவுக்குவா' என்று மடியைப் பிடித்து இழுக்கவுந் தொடங்கினர். புலவரின் உறுதியை அறிந்து மகிழ்ந்த சர்க்கரையார் புலவரைத் தம்முடைய ஊருக்கு அழைத்துச் சென்று அவர் விரும்பிய பொருளைக் கொடுத்து அவருடைய கடனைத் தீர்த்தார். இவ்வுண்மைகள்

> "மற்றோர் புலவன் மடிமேற்கை போட்டிழுத்து
> விற்றாலல் லாதென் வெறுமைநோய் தீராதே
> எங்கும் விலை கூற வேயிசைந்த புண்ணியவான்
> எங்குங் கனகாபி டேகமா கப்பொழிந்தோன்"

என்னும் வீரபத்திரக் கவிஞருடைய சர்க்கரை மன்றாடியார் காதலாலும்,

> "கொடையிற் பெரியோய்உடனே எனக்குக்கொடாமையினால்
> கடையிற் பெறநினை விற்றென் கலியைக் கழிப்பனென

மடியைப் பிடித்திழுத் தேவிலே கூறிய வாணன்மிடி
வடியப் பொருள்தந்த காமிண்ட னுங்கொங்கு மண்டலமே ''
என்னுங் கொங்கு மண்டல சதகத்தானும் நன்குபெறப்
படுகின்றனா.

" உண்ணான் ஒளிநிறான் ஓங்கு புகழ்செய்யான்
துன்னருங் கேளிர் துயர்களையான்—கொன்னே
வழங்கான் பொருள் காத் (து) இருப்பானேல் அஆ
இழந்தான் என்று எண்ணப் படும்.''
(நாலடியார்.)

" கொடையே எவர்க்கும் எப்பேறும்
கொடுக்கும் நெறியிற் பிறழாத
கொடையே யாருந் தன்வழியில்
ஒழுகச் செய்யுங் குறைதீர்ந்த
கொடையே பகையை உறவாக்கும்
குலவும் பூதம் அனைத்தினையும்
கொடையே புரக்கும் என்றுள்ளம்
கொள்ளப் புகன்றான் கவுதமனே.''
(காஞ்சிப் புராணம்.)

# அ. செட்டி பிள்ளையப்பன்

## பாரியூர் வள்ளல்

கொங்கு வளநாட்டிலே காஞ்சிக் கோயிற் பகுதியிலே பாரியூர்என்னும் ஊரிலே செட்டி பிள்ளையப்பன என்னும் பெயருடைய வள்ளல் ஒருவன் கி பி. பதின் மூன்ரும் நூற்றுண்டில்வாழ்ந்திருந்தான். இவன்வேளாளரில் கனவாளகூட்டத்தைச்சேர்ந்தவன். இவன்பெரு நிலக்கிழாணகையால் இவனிடஞ் செல்வநலம் சிறந்து விளங்கியிருந்தது. செல்வத்தை எவ்வெவ்வழிகளிற் பயன்படுத்த வேண்டுமோ அவ்வவ் வழிகளிலெல்லாம் பிள்ளையப்பன் பயன்படுத்திஞன். ஊர்திகளில்லாத அக்காலத்தில் மக்கள் எவ்வளவு தொலையாக இருந்தாலும் நடந்தே செல்லவேண்டியதாக விருந்தது. அவ்வாறு செல்வோர் இடைவழியில் உணவுக்குத் தொல்லைப்பட்டு வாடுதலும் உண்டு. அத்தகைய வழிகளிற் பல விடங்களிற் பிள்ளையப்பன் உணவுச் சாலைகளையும் தண்ணீர்ப் பந்தல்களையும் ஏற்படுத்திஞன்.

## புகழ் பரவுதல்

நாளடைவில் பிள்ளையப்பனுடைய புகழ் எங்கும் பரவத் தொடங்கியது. ஏழை எளியவர்களும் அறிஞர்களும் பிள்ளையப்பனை நாடிவரத்தொடங்கினர்கள். சிலர் உணவு உண்டு சென்ருர்கள். சிலர் புத்தாடைகள் பெற்றுப் போனர்கள். சிலர் மாடுகன்று வாங்க வேண்டும் வழியில்லை என்ருர்கள். சிலர் கடன்காரர்

களுடைய தொல்லை மிகுதியாகஇருக்கிறது என்றார்கள். புலவர்கள் "நாங்கள் நூல்களை ஆராய்ச்சி செய்வதே வேலையாக இருப்பதால் வேறுவேலை செய்ய முடிய வில்லை, இதனால் வறுமை எங்களை வாட்டுகிறது தக்கவாறு பொருளுதவி புரியவேண்டும்" என்றுபாடல் மூலமாகவே தங்களுடைய விருப்பத்தைத் தெரியப் படுத்தினார்கள். பிள்ளையப்பன் தன்னை நாடிப்பலரும் உதவி பெறவந்ததைக் கண்டு இஃதேது தொல்லையாக இருக்கிறது என்று உள்ளங் கோணவில்லை. இவ் வளவுபேர்நம்முடையஆதரவை நாடி வருகின்றனரே, இவ்வளவு பேருக்கும் உதவிசெய்வதால் நாளைக்கு நமக்குப பொருள் முட்டுப்பாடு உண்டாகுமே என்று பிள்ளைப்பன்ஓர் அணுவும் எண்ணவில்லை. இவ்வளவு பேருக்கும் உதவி செய்யும் பெருமை நமக்கு உண்டா கிறதே என்று பெருமிதங் கொண்டான். நாடிவந்த அனைவருக்கும் நன்றாக உதவி செய்தான். நாளடை வில் பிள்ளையப்பனுடைய புகழ் எங்கும் பரவிவிட்டது. பிள்ளையப்பன் பிள்ளையப்ப வள்ளலானான்.

## பொருள்வளஞ் சுருங்குதல்

பிள்ளையப்பன் உள்ளம் பொருந்திய வள்ளலாக இருந்தபடியால்நாளடைவில்பொருள். குன்றலாயிற்று சில ஆண்டுகளில் வறியவனாகவே ஆய்விட்டான். தன்னை நாடி வருபவர்கள் எல்லோருக்கும் பொருள் வழங்கக் கூடிய நிலைமை இப்பொழுது பிள்ளையப்ப னுக்குஇல்லை. இந்நிலையில் புலவர் ஒருவர்பிள்ளையப் பன் மீது செய்யுட்கள் சில செய்துகொண்டு உதவி பெறுவதற்காக வந்தார். அவர்நெடுந் தொலையில் உள்ள வேற்று நாட்டில் இருந்து வந்தாராகையால்

செட்டி பிள்ளையப்பனுடைய நிலையை அறியாதவராக இருந்தார்.

## வள்ளலும் புலவரும்

புலவர்தாம் இயற்றிக் கொண்டுவந்த செய்யுட்களைப் பிள்ளையப்பனிடம் படித்துக்காட்டினார். வள்ளல் அதனைக் கேட்டு மகிழ்ந்தான். மிக அருமையாக இருக்கிறது என்று பாராட்டினான். உணவு முதலியவைகளை நன்முறையிற் செய்து புலவரை மகிழ்வித்தான். இரண்டொரு நாட்களாயின. பிறகு புலவர் தாம் தம்முடைய ஊருக்குப்புறப்படவேண்டும் என்றார். "நாளைக்குப் போகலாம் நாளைக்குப் போகலாம்" என்று நவின்று நாட்கள் சிலவற்றைக் கடத்தினான். ஆனால் தன்னுடைய உண்மை நிலையைப் புலவருக்கு ஒரு சிறிதும் உரைக்கவில்லை. உரைப்பதற்கு அவனுடைய மனந்துணியவில்லை. இறுதியிற் புலவர் ஒரு நாள்," நான் வந்து நாட்கள் பல ஆகின்றன. நாளைக்குப் புறப்பட்டுக் கட்டாயஞ் செல்லுதல்வேண்டும் தடை சொல்லாமல் அனுப்பிவைக்க வேண்டும் என்று கேட்டுக் கொண்டார்

## புலிக்குகையை நாடிப் போதல்

இரவு பிள்ளையப்பனும் புலவரும் படுக்கைக்குச் சென்றனர். புலவர் உடனே உறங்கிவிட்டார். பிள்ளையப்பன் நாளைக்குப் "புலவர் புறப்படுகிறேன்" என்று சொன்னால் என்னசெய்வது, இனிமேலுந் தடைசெய்து வைத்துக் கொண்டிருப்பது நல்லதாக மாட்டாதே, நம்மிடமோ ஒரு காசும் இல்லை. கடன் வாங்கலாம் என்றால் யாரும் கடன்தரவும் மாட்டார்கள்

புலவரோ சிறந்த செந்தமிழ் வாணராகக் காணப்படு கிறார். அவருடைய பாடல்களோ பெருந் தொகையைப் பரிசாகப் பெறக்கூடிய தகுதிவாய்ந்தவைகளாக இருக் கின்றன என்று பலவாறு எண்ண மிட்டான். நாடி வந்த புலவருக்கு நன்கொடை வழங்க முடியாத நாம் இருப்பதும் இறந்தொழிவதும் ஒன்றுதான் என்று முடிவு செய்தான். ஊருக்கடுத்துக்காடும் மலையும் இருந்தன. காட்டில்புலி தங்கக்கூடியமலைக்குகை ஒன்று இருந்ததையும் புலிஅதில்தங்கிவசித்தலையும் பிள்ளையப் பன் ஒருவாறுஅறிந்திருந்தான். இப்பொழுது வள்ளலு டைய மனம் எல்லாவற்றிற்குந் துணிந்து விட்டது. அடுத்துவந்த புலவருக்கு நன்கொடையளித்துக் காப் பாற்ற முடியாத நாம் இருப்பதைவிட இறந்தொழிவது தானே நல்லது. ஆகவே மலைக்குகைக்குப் போய் அதனுள் நுழைந்து புலிக்கு இரையாகி மாண்டு போவோம்என்றும் முடிவுசெய்தான். நள்ளிரவில்புறப் பட்டு மலைக்குகை உள்ள விடத்திற்குச் சென்றான்.

## புலிக்குப் பதிலாகப் பொருள்

இரவு நேரத்தில் புலிவாழ் குகையை அடைந்த பிள்ளையப்பன் குகைக்குள்ளே எட்டிப் பார்த்தான் உள்ளே ஒன்றுந் தெரியவில்லை. முன் வைத்தகாலைப் பின்வைக்கக்கூடாது உள்ளேபோய் மாண்டொழிவோம் என்று துணிந்து உள்ளே சென் றான். ஒரு மூலையில் ஏதோ கிடப்பதாகத் தோன்றியது. புலிதான் உறங்குகிறது. அது விழித்துக் கொண்டால் நம் மீது பாயும் என்று எண்ணிக்கொண்டுஉள்ளே சென்றான். புலி உறங்குகிறது தட்டி யெழுப்புவோம் என்று முடிவுசெய்து கொண்டு கீழே குனிந்து பார்த் தான். இருந்தது புலியாகத் தெரியவில்லை. யாதோ

ஒரு மூட்டைபோல் தெரிந்தது. தூக்கி வெளிச்சத்திலே பார்த்தான். பொன்னணிகலன்கள் பல மின்னின. வள்ளலுக்கு ஏற்பட்ட உவகைக்கு அளவே இல்லை. புலிக்குகைக்குள் பொருள் எவ்வாறு வந்தது என்று எண்ணமிட்டான். ஒரு நொடிக்குள் அவனுக்குச் செய்தி விளங்கிவிட்டது.

## கள்ளப் புலிகளுங் காட்டுப்புலியும்

கள்ளர்கள் தாங்கள் தங்கியிருப்பதற்குஇடந் தேடினர்; குகையைக் கண்டு பிடித்தனர். முதற்கண் கள்ளப் புலிகட்கும் காட்டுப் புலிக்கும் போர்மூண்டது. கள்ளப்புலிகள் பலராகையால் காட்டுப் புலியைக் கடுமையாகத் தாக்கினர். கள்ளப்புலிகட்கஞ்சிய காட்டுப் புலி தான் தோற்றமையால் தன்னுடைய இருப்பிடத்தை விட்டு ஓடிப்போயிற்று. அதன் இருப்பிடத்தைக் கள்ளர்கள் கைப்பற்றித் தங்கள் இருப்பிடமாக்கி விட்டார்கள். அவர்கள் களவு செய்து கொண்டுவைத்த பொருள்கள் தாம் குகையில் இருந்தவை.

## புலவருக்கு வழங்கல்

பொருளைக்கண்டு மகிழ்ச்சியடைந்த வள்ளல் புலவரின் பொருட்டு இறைவனே அப்பொருளை அங்கு கொண்டுவந்து வைத்ததாக எண்ணினன். அதனைத் தூக்கிக்கொண்டு விரைவாக நடந்து விடிவதற்குள் வீடு வந்து சேர்ந்தான். ஒன்றுமறியாதவனைப் போற் படுத்துக் கொண்டான். காலையிற் புலவர் எழுந்தார். காலைக்கடன்களை முடித்துக் கொண்டு காலையுணவு கொண்டார். பிறகு தாம் புறப்படுவதாகக் கூறினர். பிள்ளையப்பன் இரவில்தான் கொண்டுவந்த பொருளைப் பெரிய தட்டொன்றில் எடுத்து வைத்து அப்படியே

வண்டமிழ் வாணர்பாற் கொண்டு வந்து வைத்தான். அப்பொருளிற் சில வற்றைக் கூட அவன் தனக்காக எடுத்து வைத்துக் கொள்ள வில்லை. பிறருடைய பொருள்களாகிய அவைகள் களவினால் அங்கு வந்திருக்கின்றன. அவைகளைத்தான் கையினால் தொடுவது கூடத் தவறு என்று எண்ணினான்.

## புலவர் சிறிது கொண்டு போதல்

பொருளைக்கண்டபுலவர் பெருங்களிப்படைந்தார். இரவில் நிகழ்ந்த செய்தி அவருக்குத் தெரியாதாகையால் அப்பொருள் முழுவதும் வள்ளலுக்குரியன என்றும் மிகுதியான பொருளிருப்பதால் அவ்வளவு பொருளைத் தனக்குக்கொடுக்கிறான் என்றும் எண்ணிக் கொண்டாரார். பேரவா என்பது மனிதர்கட்குள்ள கொடியநோய்களில் ஒன்று. இந்நோயால் பீடிக்கப் பட்டோர் பிறகுதேறித்தெளிவது அருமை இந்நோய் தான் பற்றியவர்களைக் கொன்றேதொலைக்கும். இது பற்றியே தாயுமான அடிகளும்,

"ஆசையெனும் பெருங்காற்றூ டிலவம்பஞ் செனவுமன
 தலையுங் காலம்
மோசம் வரும் இதனாலே கற்றதுங்கேட் டதுந்தூர்ந்து
 முத்திக் கான
நேசமும் நல் வாசமும் போய்ப் புலனாயிற் கொடுமை பற்றி
 நிற்ப ரந்தோ
தேசுபழுத் தருள்பழுத்த பராபரமே நிராசையின்றேல்
 தெய்வம் உண்டோ"

என்று கூறினார். புலவர் தமக்குத் தேவையான சில வற்றைமட்டும் எடுத்துக் கொண்டு வள்ளலைப்பார்த்து, "என்னைப் போல் பலருந் தங்களிடம் வருவார்

களல்லரோ அவ்வாறு வருவோர்கட் கெல்லாம் வழங்குங்கள்'' என்று கூறிவிட்டுத் தம் வழியே போயினர்.

## உரியவர்கள் பாற்சேர்த்தல்

பிறர்பொருளைக் கனவிலும் விரும்பாத பிள்ளையப்பன் தான் அணிகலன்கள் எடுத்துவந்த செய்தியை எங்கும் தெரியப்படுத்தினன். கள்ளர்களிடம் பறிகொடுத்தவர்கள் வந்து பார்த்துத் தங்களுடைய பொருளிருந்தால் எடுத்துப்போகலாம் என்று கூறினன். இழந்தோர் சிலர் வந்து பார்த்துத் தம் பொருளைக் கண்டு எடுத்துச் சென்றனர்.

## கோயிலுக்குக் கொடை

இவன் திருக்கோயிலுக்கு நிலதானம் வழங்கினன் என்பது, சிலகல் வெட்டுக் களால் கண்டு பிடிக்கப் பட்டுள்ளது.

'' ஸ்வத்தி ஸ்ரீமத்பிரதாப சக்ர வர்த்தி ..................... ...........வீரவல்லாள தேவர் ப்ருதிவிராச்யம்பண்ணியருளா நின்ற பிரபவசம் வத்சரத்து ஆவணி மாத முதல் காஞ்சிக் கூவல் நாட்டிப் பாரியூர் வெள்ளாளன் களில் செட்டி பிள்ளையப்பனேன் உடையார் அமரவிடங்கப் பெருமான் திருப்பள்ளி எழுச்சிக்கு..............என்பது கல்வெட்டுக்களில் ஒன்று.

## பாடல்கள்

இவன் நன்கொடை வழங்கமுடியாத நிலையிற் புலிக் குகையில் நுழைந்தான் என்பது ;

'' இட்டமான கவி சொல்லும் பாவலர்க்
கில்லையென்று சொலற் கஞ்சிக் காட்டில் வாழ்

துட்டவன்புலித் தூறிற் புகுந்தநல்
　　தூயவன்கன வாளர குலத்தினன்
செட்டி பிள்ளையப் பன்தினந் தொண்டுசெய்
　　தேவிமாமலை மாதொரு பங்குள
கட்டுசெஞ்சடை அமர விடங்கனூர்
　　கதித்துவாழ் பாரியூர் எங்களூரே ''

என்னும் அமர விடங்கர் குறவஞ்சியாலும்,

'' கலியின் மெலிந்து புகல்கவிக் கீயக் கயிலின்மையால்
புலியி னுழைபுக்குக் கள்வர்கள் பங்குப் பொருட்டிரளை
மலிய வெடுத்தப் புலவனுக் கீந்த வடகரையான்
வலியன் கனவாளன் செட்டிபிள்ளான்கொங்கு மண்டலமே''

என்னுங்கொங்கு மண்டல சதகத்தாலும் நன்கு பெறப்படுகின்றது.

'' கொடையே எவர்க்கும் எப்பேறும்
　　கொடுக்கும் நெறியிற் பிறழாத
கொடையே யாருந் தன்வழியில்
　　ஒழுகச் செய்யுங் குறைதீர்ந்த
கொடையே பகையை உறவாக்கும்
　　குலவும் பூதம் அனைத்தினையும்
கொடையே புரக்கும் என்றுள்ளம்
　　கொள்ளப் புகன்றான் கவுதமனே.

(காஞ்சிப்புராணம்.)

## கூ. வீரபத்திர முதலியார்

### தோற்றம்

தொண்டைவள நாட்டிலே கண்ணனூர் என்னும் ஊரிலே ஏறக்குறையத் தொளாயிரம் ஆண்டுகளுக்கு முன்னர் வீரபத்திர முதலியார் என்னும் பெயருடைய செல்வர் ஒருவர் இருந்தார் இவருடைய தந்தையார் பெயர் சாமிநாத முதலியார். இவருடைய மரபு வேளாண் மரபு. இவர் தமது விளை நிலங்களில் பயிர்த் தொழிலைச் செம்மையாகச்செய்து நாளும் வருவாயைப் பெருக்கினர். "உயிர்த் தொழில் எல்லாம் பயிர்த் தொழில் தன்னல்" என்னும் பழமொழி என்றும் இவருடைய உள்ளத்தை விட்டு நீங்காதிருந்தது.

### அருளுடைமை

"அறிவினல் ஆகுவதுண்டோ பிறிதின் நோய் தன்நோய் போல் போற்ருக்கடை" என்ருர் தெய்வப் புலமைத் திருவள்ளுவ நாயனர். வீரபத்திர முதலியார் எல்லா உயிர்களிடத்தும் அருளுடையவராய் இலங்கினர். "துறந்தார்க்கும் துவ்வாதவர்க்கும் இறந்தார்க்கும் இல்வாழ்வான் என்பான்துணை" என்னும பொது மறைக்கிணங்கத் தாம் துறவிகள், வறியவர்கள், யாருமற்றவர்கள் முதலிய எல்லோருக்குஞ் சீரியதுணையாக அமைந்து நின்ருர்.

### வள்ளலானர்

வீரபத்திர முதலியாருடைய அருளுடைமையும் அறச் செயலும் நாளடைவில் எட்டுத்திக்குகளையும்

எட்டலாயின. வறியவர்கள் யாவரும் வீரபத்திர முதலியாரை நாடிவந்தனர். வீரபத்திரர் சிறிதும் மனங் கோணுமல் உதவிநாடிய அனைவருக்கும் உதவி புரிந்தார். இவருடைய வள்ளன்மையையும் அருளுடைமையையும் அக்காலத்து அரசர்கள் கூடப்போற்றிப் பாராட்டினர்.

## பஞ்சம்

வீரபத்திர முதலியார் இவ்வாறு தாளாண்மையினுல் வேளாண்மை புரிந்து தழைத்து விளங்கியிருக்குங் காலத்தில் சில ஆண்டுகள் மழைபெய்யாதொழிந்தது. விண்ணில் இருந்து மழைத்துளி மண்ணில் வீழாமற் போகுமாயின் பசும் புல்லைக் கூடப் பாரின் மீது பார்க்கமுடியாதன்றோ? அவ்வாருக நெல் முதலிய உணவுப் பொருள்கள் எவ்வாறு விளையும்? உணவுப்பொருள்களும் விளையாதொழிந்தன. முதலியார் தம்விளைநிலங்களில் ஆழமான கிணறுகளைத் தோண்டினுர். அதிலிருந்து நீரை இறைத்துக் கரும்பு, நெல், சோளம், கேழ்வரகு முதலிய உணவுப்பொருள்களை உண்டாக்கினுர். ஏழை எளியவர்கட்குக் குறைந்த விலையில் வழங்கினுர். விலைகொடுக்க முடியாதவர்கட்குத் தானமாகவும் வழங்கினுர். ஆயினும் நாடி வரும் எல்லோரையும் பாதுகாக்க முடியவில்லை.

## கரும்புக்களவு

முதலியார் தம்விளைநிலங்களைச் சுற்றிச் செம்மையாக வேலி அமைத்திருந்தார். அவ்வேலியைத் தாண்டி எவரும் எளிதாக உள்ளே புகமுடியாது.

அவருடைய வயலிற் கரும்புகள் நன்கு தழைத்துப் பெருத்து வளர்ந்து நின்றன. பசிக்கொடுமையைப் பொறுக்க முடியாத சிலர் ஒரு நாள் நண்பகலில் கரும்புக்கொல்லைக்குள் காவலர் அறியாவகை புகுந்து மறைந்திருந்து கரும்புகளைத் தின்றனர். வயல்காப்போர் அக்கரும்புக் கள்ளர்களைப் பார்த்துவிட்டனர். உடனே அவர்களைப் பிடித்து அங்கிருந்த மரம் ஒன்றில் கட்டினர். பிறகு விரைவாக வீரபத்திர முதலியாராகிய உடையவரிடம் ஓடி" நமது கரும்புக் கொல்லையிற் கள்வர்கள் சிலர் புகுந்து கரும்பினைக் களவாடினர். அவர்களைப் பிடித்துக் கட்டியிருக்கிறோம். தாங்கள் விரைவாக வந்து அக்கரும்புக் கள்ளர்களை நன்கு புடைத்துக் கால் கைகளை முறித்து விடுதல் வேண்டும். இன்றேல் அவர்கள் நாளும் இவ்வாறே களவுத் தொழிலில் ஈடுபடுவர். நாளடைவில் நமது கரும்புக் கொல்லை அழிந்துபோகும். நாங்களே நன்கு புடைத்து விடலாம் என்று எண்ணினோம். தங்களுக்குத் தெரியப்படுத்தாமல் அடிக்கக் கூடாது என்று ஒன்றுஞ் செய்யாது விட்டோம்" என்று உரைத்தனர்.

## கரும்புதின்னக் கட்டளை

காவலர் கழறியதைக் கேட்ட வள்ளல் வீரபத்திர முதலியார் கரும்புக் கொல்லையை நோக்கி ஓடினார். காவலரும் உடன் ஓடினர். கள்ளர்களைப் புடைப்பதற்கே முதலியார் அவ்வாறு ஓடுகின்றார் என்பது அவர்களுடைய • எண்ணம். முதலியார் கரும்புக் கொல்லையை அடைந்தார். கட்டியிருக்கிற கட்டுக்களை அவிழுங்கள் என்றார். தாமும விரைந்து கட்டுக்களை

அவிழ்த்தார். கரும்புதின்றவர்கள் முதலியார் யாது செய்வரோ என்று அஞ்சி நின்றனர். முதலியார் கரும்பு தின்றவர்களைப் பார்த்து, "இந்த ஆட்கள் மடமையினால் உங்களைப் பிடித்துக் கட்டிவிட்டார்கள். இவர்கள் இழைத்த இக்குற்றத்தினை நீங்கள் பொறுத்துக் கொள்ளவேண்டும். உங்களுக்கு வேண்டிய அளவு கரும்புகளை நன்ருகத் தின்னுங்கள்" என்று கட்டளையிட்டுவிட்டுக் கரும்புக் கொல்லையைச் சூழ்ந்திருந்த முள்வேலியையும் அகற்றி விடுமாறு கட்டளையிட்டார். எல்லோரும் வந்து தமது கரும்புக்கொல்லையிற் புகுந்து விருப்பம் போல் கரும்பைத் தின்னலாம் என்று பறையறைவித்தார். மேலும் தம்முடைய ஏவலர்களை அனுப்பிக் கரும்பு தின்னுதற்கு ஆட்களை அழைத்துக் கொண்டு வருமாறுங் கட்டளையிட்டார். ஆட்கள் ஊரெங்குஞ் சென்று "எங்கள் முதலியாருடைய கரும்புக் கொல்லையில் உள்ள கரும்பைத் தின்னுதற்கு வருவீர்களாக" என்று கூறியழைத்தனர். சிலர்வந்தனர். சிலர் வரமுடியாதென்றனர்.

## கரும்புதின்னக் கைக்கூலி

கரும்பு தின்றற்கு மக்கள் மிகுதியாக வராமையைக் கண்ட முதலியார், "கரும்பு தின்னவருபவர்கட்குக் கைக்கூலி கொடுக்கப்படும் என்று மீண்டும் பறையறையச் செய்தார் வந்து கரும்பினைத் தின்றவர்கட்குக் கூலியுங் கொடுத்தார். அன்றுமுதல் "கரும்பு தின்னக் கைக்கூலியா" என்று பழமொழி ஒன்றும் பிறந்தது. இவ்வாறு வீரபத்திர முதலியார் செய்ததைக் கண்டு ஊர்வாழ் மக்கள் உள்ளம் உவந்து முதலியாருடைய வள்ளன்மையைப் பாராட்டினர்.

வீரப்ப முதலியாருடைய புகழ் என்றும் நிலைபெற்று விளங்கலாயிற்று. இவர் கரும்பு தின்னக் கூலி கொடுத்தார் என்னுஞ் செய்தி,

" வேலியழித்துக் கரும்பையெல்லாந்தின்ன விட்டிரவோர்
காலில் வணக்கமும் செய்தேத்திப் பின்னுங் கரும்புதின்னக்
கூலியளந்துங்கொடுத்தான் ஒருவன் குமணனைப்போல்
வாலிதின் மிக்க கொடையாள னுந்தொண்டை மண்டலமே"

என்னுந் தொண்டைமண்டல சதகத்தாலும்,

" உத்தம கங்கா நதிமர பினிற்கண்ணன்
ஊரின்மா வேலியைத் திறந்தே
இத்தனை மனிதர் எனுங்கணக் கின்றி
இருநிலந் தனிற்புகழ் வளரச்,
சுத்தமாஞ் சுவைச்செங் கரும்பினைப் புசிக்கச்
சொல்லியே பினுந் தினுங்கூலி
பத்தியாய்க் கொடுத்தான் தொண்டைமண் டலத்தின்
பலத்தினுல் வீரபத் திரனே"

என்னுங் கூத்தர் பாட்டாலும் நன்கு உறுதியாகின்றது.

" ஒருசிறு தரும மேனும் உஞற்றிடார் இரப்போர் வந்து
தருநிகர் கரத்தாய் ! என்று சாற்றினுங் கொள்ளார் ஆகிக்
கருணைசற் றின்றி எல்லை கடந்திடத் துறந்து மீள்வர்
மருவுபல் கிளையும் ஓம்பார் வளம்படைத் தென்பெற்
றுரால் "

(குசேலோபாக்கியானம்.)

# ௧௰. தானப்ப முதலியார்

## தோற்றம்

இவர் ஏறக்குறைய எண்ணூறு ஆண்டுகட்கு முன்னர்த் தொண்டைவள நாட்டிலே களத்தூர் என்னும் ஊரிலே வேளாண் மரபிலே வேதியப்ப முதலியார் என்பவருக்குப் புதல்வராகத் தோன்றினர் பல நூல்களையும் நன்கு கற்றுத் தேறிப் புலமைத் திறமும் அமைந்து விளங்கினர். உயிர்களிடத்திலே அருளும் இயற்கையாக அமைந்து நின்றது.

" உரவுநீர்க் கருங்கடல் உடுத்த மாநிலத்
தருளுடன் இம்மையில் அளித்த வான்பொருள்
மருவிய மறுமையில் வழங்கு பான்மையால்
இரவலர் தமரினும் இனியர் ஆவரே "

என்னும் சீரிய செய்யுளின் பொருளை இவர் நன்ருக ஆராய்ந்து பார்த்தார். இரவலர்க்குப்பொருள் வழங்கி அவர்கட்குதவி செய்தலே தமக்கு மறுமையிற் சிறந்த ஊதியமாம் என்பதைத் திடமாயுணர்ந்த இவர் இரவலர்க்குப் பொருள் வழங்கி யுதவிபுரிதலி லேயே கண்ணுங் கருத்துமாக விருந்தார்.

## பொருள் வளங்குன்றல்

வேதியப்ப முதலியார் சிறந்த செல்வராக இருந்தும் முடிவில் பொருள் நிலைமை குறைந்து வறுமையை அடைந்தார். அதனல் இவருடைய குடிதளர்ந்து போயிற்று. தானப்ப முதலியார் தக்க

பருவத்தை யடைந்ததும் ஆக்கத்தைத் தேடும் வேலையில் ஊக்கத்தைச் செலுத்தினர். பயிர்த் தொழிலைக் கண்ணுங்கருத்துமாகச் செய்தார்.

" ஆக்கம் அதர்வினய்ச் செல்லும் அசைவிலா
ஊக்க முடையான் உழை"

என்பது தமிழ்மறை. தமிழ் மறை பொய்யாகுமோ? தானப்ப முதலியார் அசைவிலா ஊக்கத்தை மேற்கொள்ளவே ஆக்கம் வழிதேடிக் கொண்டுவந்து குவிந்தது. குடும்பம் தளர்ச்சி நீங்கித் தலையெடுத்து நின்றது. தளர்ந்து வருந்தி நின்ற பிற குடும்பத்தையும் இவர் உதவிசெய்து உயர்த்தி விட்டார். இதனல் இவருடைய பெயர் குடிதாங்கி முதலியார் எனப் படிதாங்கி நின்றது. பலரும் இவரை முடி தாங்கி மகிழ்ந்தனர்.

## பொன் விளைதல்

இவர் சிறந்த வள்ளலாய்ப் பொருந்தி நிற்கவே இவருடைய புகழ் யாண்டும் பரவி நின்றது. ஒரு முறை இவருடைய வயலில் செந்நெற் கதிர்கள் பல பொன் நெற் கதிர்களாகப் பொலிவுற்றுத் திகழ்ந்தன. இப்புதுமையை ஊராரேயன்றி உலகத்தாருங் கண்டு மகிழ்ந்தனர். அக்காலம் முதல் அவ்வூர் பொன்விளைந்த களத்தூர் என்று பெயர் பெற்றுத் திகழ்கிறது. பொன் நெற் கதிர்கள் விளைந்ததைக் கண்டு மகிழ்ந்த குடிதாங்கி முதலியாராகிய தானப்ப முதலியார் அவற்றையும் நெல்லைப்போலவே குவித்து எல்லோருக்கும் வாரி வழங்கினர்.

## புலவர் பாராட்டு

அந்நாளில் புலவர் ஒருவர் வறுமையால் வாடிக் கலங்கினர். அவருடைய வீட்டில் எறும்புக்குக் கூட உணவில்லை. குடிதாங்கி முதலியாரின் கொடைத் திறத்தைப்பற்றிக் கேள்விப்பட்ட புலவர், குடிதாங்கி முதலியார் நம்முடைய குடியையும் தாங்கமாட்டாரா என்று எண்ணினர். தம்முடைய வறுமை நிலையை நன்கு புலப்படுத்திச் செய்யுட்கள்பல இயற்றிக் கொண்டு வந்தார். குடிதாங்கி முதலியாரிடம் படித்துக் காட்டினர். புலவர் வெறுக்கும் அளவு வெறுக்கை நல்கினர். அதனைப்பெற்று மகிழ்ந்த புலவர்,

" வெறும்புற் கையுமரி தாய்க்கிளைசோரவென்
　　　　　　　　　　வீடுகெட்டேன்
எறும்புக்கும் ஆர்பதம் இல்லைகண்டாய்என்
　　　　　　　　　　இருங்கலியின்
குறும்பைத் துரத்துங் குடிதாங்கியைச் சென்று
　　　　　　　　　　கூடியபின்
தெறும்புற்கை யானை கவளங் கொள்ளாமல்
　　　　　　　　　　தெவிட்டியதே "

என்று பாராட்டிப் பாடினர். இவருடைய புலங்களில் பொன்னெற்கதிர்கள் விளைந்ததும் அவைகளை இவர் நெற்போர் போலவே குவித்து வைத்துக் கொண்டு இரவலர்கட்கு வழங்கியதும் பின்வருஞ் செய்யுட்களாலும் பெறப்படுகின்றன.

" பொன்னெல்லை யெல்லாம் பொதிபொதியாய்ப்
　　　　　　　　　　பூசுரர்க்குச்
செந்நெல்லே போலச் சிறந்தளித்தான்—பன்னகத்தின்

சீரார் மணியைவிலை செய்யானுஞ் செய்யகளத்
தூரானுஞ் செய்கருமம் ஒன்று "

" நன்ருய் விளைந்ததை வேதியர்க் கீந்தந்த நன்மையினல்
பொன்ருன் விளைந்திட நெற்போல வேயதைப்
போரடித்துக்
குன்ருக் குவித்ததை நெற்பரி மாற்றங் கொடுத்தளித்தான்
மன்ருர் களந்தைக் குடிதாங்கி யுந்தொண்டை
மண்டலமே "

## வேறு சிலர்

இந்தக் களத்தூரிலே வேறுசில வள்ளல்களும் புலவர்களும் அந்நாளில் சிறந்து விளங்கியிருந்தனர்.

" உண்ணன் ஒளிநிருன் ஓங்கு புகழ்செய்யான்
துன்னருங் கோளிர் துயர்களையான்—கொன்னே
வழங்கான் பொருள் காத்(து)இருப்பானேல் அஆ
இழந்தான்என்று எண்ணப் படும்."

(நாலடியார்.)

" சாதல்வந் தடுத்த காலும் தனக்கொரு சாதல் இன்றிப்
பூதலம் இறக்குங் காறும் புகழுடம் பிருக்கும் அந்தக்
கோதறு புகழின் யாக்கை கொடையினுல் செல்வங்கூர
வாழ்தலை உடையார் அன்றே வானமும்வணங்கும் நீரார்"

(விநாயக புராணம்.)

# கக. சடையநாத வள்ளல்

## தோற்றம்

இவர் தொண்டைவள நாட்டிலே புழற் கோட்டத்திலே இருந்தவர். தாளாண்மைமிக்க வேளாண் குடியில் தோன்றியவர். முன்னோர்கள் தேடிய பொருளே இவருக்கு மிகுதியாக இருந்தது. இவரும் பொருள் தேட வேண்டிய நேரிய வழியிலே பொருளை அளவில்லாமல் தேடிக் குவித்தார்.

## கல்வியறிவு

சடையநாதர் இளமைப் பருவத்திலேயே கற்க வேண்டிய நூல்களை யெல்லாம் நன்கு கற்று அறிவுச் செல்வத்தையும் மிகுதியாகப் பெற்றிருந்தார்.

## அறம் புரிதல்

பிரமசரிய நெறியினர், காட்டகத் திருந்து கடுந்தவம் புரிவோர், துறவற நெறியினர், கடவுள், தென் புலத்தவர், விருந்தாகவந்தவர், சுற்றத்தார், வறுமையுடையவர், யாருமற்றவராய்த் தம்மிடத்தில் வந்து இறந்தோர் ஆகியோர்கட்குச் செய்யவேண்டிய அறநெறிக் கடமைகளை நன்கு புரிந்து இறுதியாகத் தம்மையுங் காப்பாற்றிக் கொள்வோரே இல்லறத்தவராவர். இப்பண்பாடு இயையப் பெறுதவர் இல்லறத்திருப்பினும் அவர்கள் இல்லறத் தார்களாக எண்ணப் பெறுமல் அல்லறத்தார்களாகவே எண்ணப் பெறுவர். இதனை நன்குணர்ந்த சடையநாதர், தம்முடைய

செல்வத்தைப் பகுத்துண்டு பலரையுங் காப்பாற்றத் தொடங்கினர். பகுத்துண்டு பல்லுயிரோம்புதல்தானே நூலோர் தொகுத்தவற்று ளெல்லாந் தலையாய அறம். சடையநாதர் தம்மையடைந்து எவர் எதனை விரும்பினரோ அதனைத் தடைசொல்லாது வழங்கினர். புலவர்களின் படை சடையநாதர் வீட்டை முற்றுகையிடத் தொடங்கியது. சான்றோர் கொடுத்தார் எனப்பெறுஞ் சொல் அடுக்கிய மூவுலகுஞ் சென்று கேட்கு மன்றோ? அவ்வாறே சடையநாதர் கொடுத்தார் — கொடுக்கின்றார் — கொடுப்பார் எனுஞ்சொல் எல்லா விடங்களினுங் கேட்கத் தொடங்கியது. சடையநாதருடைய பெயர் சடைய நாதவள்ளல் என்று மாறியது.

## எல்லோர்க்கும் ஈதல்

பலவள்ளல்கள் புலவர்கள் முதலியோர்க்கே பொருளை வாரி வழங்கியதாகக் கூறப்படுகிறது. சடையநாதரோ எத்தகைய ஏற்றத்தாழ்வையும் சாதியையும் ஆண்பெண் என்னும் பாற் பகுப்பையும் ஒரு சிறிதும் எண்ணாராய் வாரிவழங்கினர்.

## கழைக்கூத்தி

அந்நாளில் கழைக்கூத்தி ஒருத்தி இருந்தாள். அவள் செயற் கருஞ் செயல்கள் பலபுரிந்து புதுமையாகக் கழைக் கூத்தாடுவதில் வல்லவள். தமிழ்நூல்களை நன்குகற்று வல்லவளாதலால் நன்றாகச் செய்யுள் பாடவும் வல்லவள். இவளுடைய ஆடல்பாடல் திறத்தையும் அருங்கவிப் புலமையையும் நன்குணர்ந்த சடையநாத வள்ளல் இவளைப்பெரிதும் பாராட்டிப்

பல சிறப்புகள் செய்து அருங்கொடைகளை அடிக்கடி வழங்கி ஆதரித்துக் கொண்டிருந்தார். கழைக்கூத்தி எங்குச் சுற்றினுந் திங்களுக்கொரு முறையேனும் இவரை வந்து பார்த்துப் பரிசு பெறுமல் இருக்க மாட்டாள்.

## பாண்டியன் மடமை

கழைக்கூத்தி பாண்டி நாட்டிற்குச் சென்றுள். பாண்டியன் அவைக்களத்தில் விச்சுளிப்பாய்ச்சல் என்னும் அரிய வித்தையைச் செய்தாள். இவ்வித்தை எவரானுஞ் செய்தற் கரியது. ஒருமுறை இவ்வித்தை யினைச் செய்வோர் ஆறு திங்கள்கள் சென்ருல் அன்னி யில் இவ்வித்தையை மீண்டுஞ் செய்ய முடியாது. ஆறுதிங்கள் முடிவதற்கு முன்னர்ச் செய்யின் உயிரிழப்பது திண்ணம். கழைக்கூத்தி இவ்வித்தை யைச் செய்யும்போது பாண்டியன் பக்கத்தில் இருந்த அவன் மனைவி இவ்வித்தையைப் பார்க்காமல் பாண்டி யன் கருத்தைத் தன் பக்கமாக இழுத்துவிட்டாள். அவ்வாறு இழுத்ததற்குக் காரணம் யாதெனின் அக் கழைக்கூத்தி இயற்கையிலேயே நல்ல அழகு பொருந்தியவள். அதோடு அவளுடைய இவ்வித்தை யின் அரிய திறத்தினையும் மன்னன் கண்ணுறில் அவளுடைய மையலிலே தாழ்ந்து விடவும் கூடும். அவ்வாறு தாழ்ந்து விடின் நம்முடைய பாடு திண் டாட்டமாகும் என்னும் எண்ணமே யாகும். ஆகவே, அக்கழைக்கூத்தி அவ்வித்தையைச் செய்யும் போது அரசன் அதனைப் பார்க்காமற்போனன். அவையோர் ''ஆ ஆ' என்று வியந்து பாராட்டிய பிறகே அரசனுக்கு,

உணர்ச்சி தோன்றியது. நாம் அவ்வித்தையைப் பார்க்காது போனோமே என்று உள்ளங் கலங்கினன். கழைக்கூத்தியைப் பார்த்து "நான் அதனைப் பார்க்க வில்லை. எங்கே இன்னும் ஒருமுறை செய் பார்ப் போம்" என்றான். கழைக்கூத்தி "அதனை மீண்டுஞ் செய்வதாயின் ஆறுதிங்கள் போகவேண்டும். அதற் குள் செய்யத் தொடங்கினால் உயிர் போய்விடும்" என்று கூறினாள். பாண்டியன் "அப்படியெல்லாம் ஒன்றும் நேரிடாது சும்மா செய்பார்ப்போம்" என்று சொல்லி வற்புறுத்தினன். கழைக்கூத்தி கழறியது காவலன் காதுகளிற் கேட்காமற் போகவே கழைக் கூத்திக்கு வருத்தம் உண்டாகிவிட்டது. நாம் இந்த அருமையறியாத எருமையிடம் வந்து அகப் பட்டுக் கொண்டோமே அவ்வித்தையினைச் செய்யா தொழியின் விடமாட்டான் போலிருக்கிறதே என்று உள்ளங் கன்றினாள்.

## சடையநாதரை எண்ணிப்பாடுதல்

மீண்டும் ஒருமுறை அவ்வித்தையினைச் செய்து உயிர் இழக்கவேண்டியதுதான் என்று முடிவு செய் தாள். இச்சமயத்தில் தன்னைப் பெரிதும் பாராட்டி அருமை பெருமையாய்ப் போற்றிப் பரிசளித்துக் கொண்டிருந்த சடையநாத வள்ளலைப் பற்றிய எண்ணம் அவளுக்கு உண்டாகிவிட்டது. ஒருவர் உயிர் இழக்குஞ் சமயத்தில் அருமையான பொருளைப் பற்றி எண்ணுவது உலக இயற்கை. அவ்வாறே தான் கழைக் கூத்தியும் எண்ணினாள். அச்சமயத்தில் அங்கு விண்ணிற் பறவைகள் பல பறந்து சென்றன.

கழைக்கூத்தி நல்ல அறிவுடையவளாகையால் அப்பற வைகளைப் பார்த்து,

" மாகுன் றனையபொற்றேளான் வழுதிமன்
　　　　வான்கரும்பின்
பாகொன்று சொல்லியைப் பார்த்தென்னைப் பார்த்திலன்
　　　　பையப் பையப்
போகின்ற புள்ளினங்காள் அழற்கோட்டம்
　　　　புகுவதுண்டேல்
சாகின்றனள் என்று, சொல்லீர் அயன்றைச்
　　　　சடையனுக்கே "

என்று பாடினாள். பாடிவிட்டு மீண்டும் விச்சுளிப்பாய்ச்சல் என்னும் அரியவித்தையினைச் செய்தாள். அதில் அவளுடைய உயிர் போயது. அவையோர் அனைவரும் உள்ளம் வருந்தினர்.

## அயன்றைச் சடையனை ஆராய்தல்

கழைக்கூத்தி பாடிய பாடலிற் குறிப்பிடப்பட்ட சடையன் யார் எத்தகையவன் அவனை இறுதிக் காலத்தில் இவள் எண்ணவேண்டிய காரணம் யாது என்று அரசன் தன் பக்கத்தில் இருந்தவர்களை உசாவினன். அவர்கள் "அச்சடையன் தொண்டைவள நாட்டுப் புழற் கோட்டத்தில் அயன்றை என்னும் ஊரில் உள்ளான்; சிறந்த கொடையாளி; நிறைந்த பண்பாளன்; இவளுக்கும் அவன் பழக்கம் போல் தெரிகிறது. ஆகையால்தான் இவ்வாறு பாடினாள். அந்தச் சடையனுடைய புகழ் திக்குகளை யெல்லாம் முட்டிக்கொண்டு நிற்கின்றது. யார் எதனைக் கேட்டபோதினும் அவன் மறுப்பதில்லை. அவனைப்

பற்றித் தாங்கள் இன்னும் அறிந்து கொள்ளவில்லை போல் தெரிகிறதே" என்று கூறினார்கள். பாண்டியன் சடையநாத வள்ளலின் வள்ளற்றன்மையை ஆராய்ந்து பார்க்க எண்ணங்கொண்டான். தன்னுடைய அவைக்களப் புலவர்கள் சிலரைப் பார்த்து "நீங்கள் தொண்டைவள நாட்டுப்புழற் கோட்டத்திற்குப் போய் அங்குள்ள சடையநாதர் என்பவர் எத்தன்மையுடையவர். அவருடைய கொடை நலம் எத்தகையது என்பதை நன்ருக ஆராய்ந்து பார்த்துக் கொண்டு வாருங்கள். அவருடைய தன்மையை நானும் அறிந்து கொள்ளுதல்வேண்டும். நான் எத்தனையோ அறங்களைச் செய்கிறேன். புலவர்களைப் புரக்கிறேன். அப்படியிருந்தும் என்னுடைய புகழ் இந்தப் பாண்டிநாட்டுக்குள்ளே கூடப் பரவவில்லையே" என்ருன்.

## புலவர்கள் போதல்

பாண்டியனுடைய கட்டளையைப் பெற்ற புலவர்கள் சிலர் புறப்பட்டுத் தொண்டை நாட்டுப் புழற் கோட்டத்துக்குப்போய்ச் சேர்ந்து சடையநாத வள்ளலைக் கண்டார்கள். சடையநாதர் புலவர்களை மிகுந்த அன்புடன் வரவேற்றுப் போற்றினர். நண்பகலில் எல்லோருக்கும்உணவிடத்தொடங்கினர். அப்பொழுது சடையநாதருடைய மனைவி சூல்கொண்டிருந்தாள். வள்ளலின் வள்ளல் தன்மையை ஆராய எண்ணிய புலவர்களில் ஒருவர். "நான் உணவைத் தரையில் இலைபோட்டுச் சாப்பிட மாட்டேன். சூல் கொண்டிருக்கும் ஒரு பெண்ணைக் குனிந்து நிற்கச்செய்து அவளுடைய முதுகிலே இலையைப் போட்டு உணவைப் படைத்தால் தான் உண்பேன்" என்ருர். இதனைக்

கேட்ட சடையநாதர் "இஃதொரு பெரிய காரிய மன்று. இப்பொழுது என்னுடைய மனைவியே சூல் கொண்டிருக்கிருள். அவளுடைய முதுகிலேயே உங் களுக்கு உணவு படைக்கிறேன்" என்று கூறிவிட்டுத் தம் மனைவியைக் குனிந்து நிற்கச் செய்து அவளு டைய முதுகிலே இலையைப் போட்டு உணவைத் தாமே படைத்தார். மற்றுஞ் சிலர் வேறு விதமாகவும் ஆராய்ந்து பார்த்தார்கள். சடையநாதர் எதற்கும் பின்னடைய வில்லை. பிறகு புலவர்களுக்குத் தக்க வாறு பெரும் பரிசு கொடுத்து அனுப்பினுர். மது ரையை அடைந்து பாண்டியனைக் கண்ட புலவர்கள்;

"இரவ லாளரே பெருந்திரு உறுக
அரவுமிழ் மணியும் அலைகடல் அமுதும்
சிங்கப் பாலுந் திங்கட் குழவியும்
முதிரை வாலுங் குதிரை மருப்பும்
ஆமை மயிரும் அன்னத்தின் பேடும்
ஈகென இரப்பினும் இல்லென அறியான்
சடையனை அயன்றைத் தலைவனை
உடையது கேண்மின் உறுதி யோர்ந்தே"

என்று பாடினர். பாண்டிய மன்னன் உண்மையை உணர்ந்து கொண்டான். சடையநாத வள்ளல் பெரும் புகழோடு சிறந்து விளங்கினுர். அவர் புகழ் இன்றும் நிமிர்ந்து நிற்கிறது. அயன்றை என்பது சென்னைக் கண்மையில் உள்ள ஒரு சிற்றூர். அதன் பெயர் இன்று மாறுபட்டு நிற்கிறது.

## சதகப்பாட்டு

மண்டல சதகங்கள் புலவர்கள் வள்ளல்கள், புதுமையான நிகழ்ச்சிகள் முதலியவைகளைக்குறித்துப் பாடப் பெறுவன. படிக்காசுப் புலவர் தொண்டை மண்டலசதகம் பாடினார். அச்சதகத்தில் பலவள்ளல் களைக் குறித்திருக்கிறார். அதில் இவரைப்பற்றியும்,

" பாகொன்று சொல்லியைப் பார்த்தமையால் அன்று
பாண்டியன்முன்
நோகின்ற சிற்றிடை வேழம்பக் கூத்தி நொடிவரையில்
சாகின்ற போது தமிழ்சேர் அயன்றைச் சடையன்
தன்மேல்
மாகுன் றெனச்சொன்ன பாமாலை யுந்தொண்டை
மண்டலமே "

என்று குறிப்பிட்டுள்ளார்.

" மாண்புடை யாளர் கேண்மையர் தத்தம்
வழிமுறை ஒழுக்கினில் அமர்ந்தோர்
சேண்படு திரப்பின் எய்தினோர் புரப்போர்
தீர்ந்தவர் தந்தைதாய் குரவர்
காண்டகும் உதவி புரிந்துளோர் இளையோர்
ஒன்பதின் மரும்உளம் களிப்ப
வேண்டுறு நிதியம் அளிப்பின்மற் றென்றே
கோடியாம் எனமறை விளம்பும் "

(காசிகண்டம்.)

# கஉ. பள்ளி கொண்டான்

## தோற்றம்

பாண்டிவள நாட்டிலே நெடுங்கழி என்னும் ஊரிலே ஏறக்குறைய நூற்றைம்பது யாண்டுகட்கு முன் பள்ளிகொண்டான் என்னும் பெயரினையுடைய செல்வன் ஒருவன் இருந்தான். அவன் பரதவர் மரபில் தோன்றியவன். இவனுடைய தந்தை தன் குலத் தொழிலைச்செய்து மிகுந்த பொருள் தேடியிருந்தான். தோணிகள் பல இவனிடம் இருந்தன. செல்வம் நன்கு சிறந்திருக்கவே தன் மைந்தனுக்குத் தக்க அறிஞர்களைக்கொண்டு கல்வியை நன்கு கற்பித்தான். நாளடைவில் பள்ளிகொண்டான் பொருட் செல்வத்தோடு கல்விச் செல்வத்தையும் நன்கு தேடிக் கொண்டான். பிறர் உதவியின்றிச் செய்யுள் கட்குப் பொருள் காணும் ஆற்றல் பள்ளிகொண்டானுக்கு அமைந்தது.

## வாழ்க்கை

முதலிற் பள்ளிகொண்டான் தன்னுடைய செல்வத்தை நுகர்ந்து தான்மட்டும் களித்திருந்தான் சிந்தையைப்போல் மேலும் பொருள் தேடுதலினுந் தந்தை செலுத்தி யிருந்தானுகையால் நாளும் பொருட்செல்வம் வளர்ந்து கொண்டேயிருந்தது.

## அறிவுரை

ஒருநாள் ஒரு புலவர் பள்ளி கொண்டானுடைய இல்லத்துக்கு வந்தார். அவர் சிறந்தபேரறிஞர். எல்லா நூல்களையும் நன்குகற்றுத் தேறியவர். அவர் பள்ளி கொண்டானுடைய செல்வச் சிறப்பு, வாழ்க்கைச் சிறப்பு, வாழ்கைப்பண்பு முதலியவைகளை உணர்ந்தார். பள்ளி கொண்டானைப் பார்த்து,

> " முல்லைக்குத் தேரும் மயிலுக்குப் போர்வையும்
> எல்லைநீர் ஞாலத் திசைவிளங்கத்—தொல்லை
> இரவாமல் ஈந்த இறைவர்போல் நீயும்
> கரவாமை ஈதல் கடன் "

என்று கூறினர். சிறந்த அறிவாளியாகிய பள்ளி கொண்டானுடைய உள்ளத்திலே இப்பாட்டுப் பசுமரத்தாணிபோற் பதிந்துவிட்டது. பள்ளி கொண்டான் 'நாம் கல்விகற்றிருந்தும் செல்வம் உற்றிருந்தும் இதுவரையில் யாருக்கும் பொருள் வழங்கிப் புகழ்தேடாமற் போனேமே. இந்த உலகத்தில் என்றுங் கெடாது நிலைத்து நிற்பது பெரும்புகழைத் தவிர வேறொன்றும் இல்லையே. நாம் இதுவரை புகழ்தேடு தற்கு முயற்சி செய்யாமற் போனேமே. இது நம்முடைய மடமையையே காட்டுகிறது. ஒருவன் உலகத்திலே நல்வினையின் பயனைப் பெற்ற செல்வத்தைத் தானும் நுகர்ந்து ஏழை எளியவர்கட்கும் வழங்கிப் பயன் படுத்துதல் வேண்டும். அவ்வாறு செய்யாதவனைப் பார்த்து அவனுடைய பொருளும் நகைக்கும். உலகத்தார்களும் எள்ளிநகையாடுவார்கள். கொடுத்து மகிழும் இன்பத்திற்கு நிகரான இன்பம்

இவ்வுலகில் யாதிருக்கின்றது' என்று பலவாறு எண்ணமிட்டான். அன்றுமுதல் தன்னுடையபொருளை ஏழைகட்கும் எளியவர்கட்கும் புலவர்க்கும் தாராள மாக வழங்கத் தொடங்கினன். பள்ளிகொண்டானு டைய புகழ் எல்லாத் திக்குக்களினும் பரவியது.

## நையாண்டிப் புலவர்

அந்நாளில் நையாண்டிப்புலவர் என்னும் பெயரு டைய புலவர் ஒருவர் இருந்தார். அவர் வேடிக்கை யாகச் செய்யுள் பாடுவதில் வல்லவர். அவர், "சிவபெருமானவர் தம்முடைய கையின் வில்லாகிய மேருமலை என்னும் பொன்மலையை இந்த நாவலந் தீவிலே எவ்விடத்தில் வைத்தாலும் பள்ளிகொண் டான் தன்மீது தமிழ்ப்பாடல் இயற்றிக் கொண்டு வருபவர்கட்கு எடுத்துக் கொடுத்துவிடுவான் என்று எண்ணி, ஞாயிறுந் திங்களும் நாள் தோறுஞ் சுற்றிக் காவல்காக்கக் கங்கையாற்றிற்கும் வடக்கேயுள்ள ஓரிடத்தில் கொண்டுபோய் மறைத்து விட்டார்" என்னும் பொருளை அமைத்து,

"செங்கை வரிச்சிலைத் தங்கம லைச்சம்புத் தீவுதன்னில்
எங்குவைத்தாலும் பள்ளிகொண்டான் தமிழ்க் கீவனென்றே
திங்கள் இரவி தினஞ்சுற்றிக் காக்கத் திரைசுருட்டுங்
கங்கைக்கும் உத்தரத்தேஒளித்தான்உமை காதலனே."

என்று பாடியதோடு, கடவுளர்கள் தத்தம் ஊர்திகளில் ஏறிக்கொண்டது பள்ளிகொண்டான் புகழில் ஏறி யிருப்பதைப் பார்ப்பதற்காகத்தான் என்னும் பொருளை யமைத்து,

"வள்ளிகொண் டான்மயில் ஏறிக்கொண் டான்மதி போலுமலை
வெள்ளிகொண் டான்விடை யேறிக்கொண் டான்விண்ண
வர்க்கமுதத்
துள்ளிகொண் டான்புள்ளில் ஏறிக்கொண் டான்சுப சோபனஞ்
சேர்
பள்ளிகொண் டான்புகழ் ஏறிக்கொண் டான்என்று பார்ப்
பதற்கே."

என்னுஞ் செய்யுளையும் பாடினார்.

## பொன்றாப்புகழ்

இவ்வுலகத்தில் சிறந்த புகழ்தான் என்றும் அழியாமல் உயர்ந்து நிற்கும். வரையாதளித்த பள்ளி கொண்டானும் உலகம் நிற்கும்வரை தன்னுடைய புகழும் நிலைத்து நிற்குமாறு சீர்த்தியை அடைந்தான். அவன்மீது புலவர்கள் பாடிய பாடல்களிற் சிலமட்டும் தனிச்செய்யுட் சிந்தாமணியிலே சேர்க்கப் பெற்றிருக்கின்றன.

"வைத்துப் பொருளைத் தான்நுகரான்
வழங்கான் இருந்தும் செத்தானே
செத்த பின்னர் என் செய்வான்
தீயார் கொள்வர் ஈட்டு தலால்
மெத்தும் வருத்த மேஅன்றி
வேறொன் றில்லை ஆதலினால்
பொத்தும் வெறுக்கை நன்றியுறல்
புசித்து வழங்க லேயாகும்"

(விநாயக புராணம்.)

# கரு. திருவேங்கடன்

## தோற்றம்

திருவேங்கடன் என்பவன் நேரி என்னும் ஊரிலே வாழ்ந்திருந்தான். இவனுக்கு அண்ணன் ஒருவன் இருந்தான். அவனுடைய பெயர் கண்ணுக்கினியான். இவர்கள் இருவரும் தம்முடைய முன்னோர்கள் தமக்கு வைத்த செல்வத்தைப் பன்மடங்கு பெருக்கி மிகுந்த செல்வத்தைத் திரட்டினார்கள்.

## குணவேறுபாடுகள்

திருவேங்கடனும் கண்ணுக்கினியானும் ஒரு தாய் வயிற்றிற் பிறந்தவர்களாக இருந்தும் குணவேறு பாடுகள் மிகுதியாக இருந்தன. திருவேங்கடன் பலருக்கும் உதவிசெய்து புகழ் பெற்றான். இவனுடைய உதவியைக் கண்டோர் இவனை வள்ளல் என்று பாராட்டிப் புகழ்ந்து பாடத்தொடங்கினார்கள். திருவேங்கடனுடைய புகழ் திக்கெட்டும் பரவியது. கண்ணுக்கினியான் தன்னுடைய பொருளைத் தக்கவழியிற்பயன் படுத்தத் தொடங்கவில்லை. பெரும்பாலும் இறுகப்பற்றிக் கொண்டு செலவழிக்காமல் இருந்தான். மனைவி மக்களும் தானும் நல்ல உணவுவகைகளை உண்ணுவதற்குக்கூட அவன் எண்ணவில்லை.

## தம்பிக்கு அறிவுரை

கண்ணுக்கினியான் ஒருநாள் தன்னுடைய தம்பியைப் பார்த்துத் ''தம்பி! நீ என்ன தண்டச் செலவு

செய்து பொருளை யழிக்கிறாய்? வீணாகப் பொழுது போக்குஞ் சோம்பேறிகள் வந்தால் கண்டபடி பொருள் கொடுக்கிறாயே அதனால் என்னபயன்? பொருளைச் செலவழிக்காமற் சேர்த்து வைத்துக் கொண்டிருந்தால் அது நாளைக்கு நமக்குப் பயன்படும்'' என்று கஞ்சத்தன மான இழிவுரைகள் பலவற்றை இயம்பினான். 'ஈவது விலக்கேல்' என்று ஔவைப் பிராட்டியார் இயம்பிய பொன்மொழியை அவன் சிறிதும் எண்ணிப்பார்க்க வில்லை. திருவேங்கடன் தன் அண்ணன் தனக்குக் கூறிய அறிவுரைக்கு எத்தகைய மறுமொழியுங் கூறவில்லை. முன்னவன் உரைக்கு எதிர்மொழி பேசக்கூடாது என்பது அவனுடைய கொள்கை. ''அவனுடைய உள்ளத்தில் காதற்ற ஊசியும் வாராது காணுங் கடை வழிக்கே'' என்னும் பெரியோர்களுடைய உறுதிமொழி பசுமரத்தாணி போல் நன்கு பதிந் திருந்ததால் அவன் வழக்கம் போலவே தன்னுடைய ஈகையை இனிது வழங்கிக் கொண்டிருந்தான்.

## இரட்டையர்கள்

திருவேங்கடனுடைய புகழ் நாளும்பெருகி நின்ற அக்காலத்தில் இரட்டைப் புலவர்கள் என்னும் பெயரு டைய புலவர்கள் இருவர் இருந்தனர். இவர்கள் ஒரு தாய் வயிற்றில் இரட்டையாகப் பிறந்தவர்கள் அல்லர். ஒருவர் குருடர்; மற்றவர் முடவர். இருவரும் நெருங்கிய உறவினர்கள். முடவர்குருடர்பிடரியில் ஏறிக்கொண்டு வழிகாட்டுவார். குருடர் அவரைச் சுமந்து கொண்டு போவார். முடவர் மெலிந்த உடலுடையவராக இருந்தபடியால் அவரைச் சுமந்து போவது உடல் திடம் படைத்திருந்த குருடருக்குத் தொல்லையாக

இல்லை. இருவரும் நாடுமுழுவதுஞ் சுற்றி வள்ளல் களிடத்தில் உதவிபெற்றுக் கொண்டு திருவேங்க டனிடம் வந்தார்கள். அவனைப் புகழ்ந்து பாடினார்கள்.

## ஈவதுவிலக்கலும் இழிவும்

திருவேங்கடன் இரட்டையர் பாடலைக் கேட்டு மகிழ்ந்தான். இனிய மொழிகள் பலவற்றை இயம் பினன். வெண் பொற் காசுகள் ஐந்நூறு, ஆடைகள் நான்கு முதலியவைகளை ஒரு தட்டில் எடுத்துவைத்து இரட்டைப் புலவர்களிடங் கொடுத்தான்; கண்ணுக் கினியான் ஆகிய அண்ணன் இதனைக் கண்டு வயிறு எரிந்தான் "தம்பி! இந்த நொண்டிக்கும் குருட்டுக்கும் இவ்வளவு பணத்தை ஏன்கொடுக்கிறாய்? ஆளுக்கு ஒவ்வொரு வெண்பொற் காசுகொடுத்தால் போதும்" என்று சொல்லித் தடைசெய்தான். இரட்டையர்கட்கு மிகுந்த சினம் உண்டாகியது. ஒருவர்,

"தேன்பொழியும் வாயான் திருவேங் கடத்துடனே
ஏன்பிறந்தான் கண்ணுக் கினியானே—

என்று வினாவாகப்பாடல் மூலம் கேட்டார்; உடனே மற்றவர்,

—வான்சிறந்த

சீதேவி யாருடனே செய்யதிருப் பாற்கடலில்
மூதேவி ஏன்பிறந்தாள் முன்"
என்று பாட்டு மூலமாகவே விடையளித்தார்.

## வருந்தினன்

அப்பொழுது அங்கு அறிவாளிகளான பலபேர் அமர்ந்திருந்தனர். அவர்கள் இப்பாடலைக் கேட்டு

விழுந்து விழுந்து நகைத்தார்கள். கண்ணுக்கினியானுக்கு மிகுந்த இழிவாகப் போய்விட்டது. அவன் மிகவும் வருந்தினை செய்திபாடலில்ஏறிவிட்டபடியால் இன்றுவரை அழிவடையாமல் உலகத்தில் நின்று விளங்கிக் கொண்டிருக்கிறது. வள்ளலாக விளங்கிய திருவேங்கடன் புகழ்ச் செல்வத்தை யடைந்ததற்கும் கண்ணுக்கினியான் இழிமொழியைக் கேட்டதற்கும் அவர்களுடைய கொடைக் குணமும் மடக்குணமும் காரணமாக அமைந்துநின்றன.

" இகத்தில் நன்கொடைப் பெருமையை
அறிந்துளோர் இல்லென்று
அகத்தில் நாமமும் உரைசெயார்
அவர் அரி தாகத்
தொகுத்த ஓர்பொருள் நல்குவர்
என்பதென் துணிந்து
மிகுத்த ஆவியும் கொடுப்பரால்
வேண்டுமுன் விரும்பி. "

(திருக்கூவப் புராணம்.)

" பெருமைக்கும் ஏனைச் சிறுமைக்கும் தத்தம்
கருமமே கட்டளைக் கல். " (குறள்)

# கச கச்சியப்ப முதலியார்

## தோற்றம்

கச்சியப்பமுதலியார் தொண்டைவளநாட்டில் வல்லம் என்னும் ஊரில் இருந்தவர். இவருக்குச் செலவ நலம் சிறப்புற்றோங்கியது. பொருளை நேரிய வழியில் தேடித் தொகுத்தார். பிறகு அறச்செயல்களில் ஈடுபட எண்ணிப் பெரும் பாதைகளில் உணவுச்சாலை தண்ணீர்ப் பந்தர் முதலியவைகளை ஏற்படுத்தி வழிப்போக்கர்கட்கு நன்மைபுரிந்தார். இக்காலத்தைப்போல் மோட்டார்பஸ் புகைவண்டி முதலிய ஊர்தி வசதிகள் இல்லாத அக்காலத்தில் இவருடைய அறம் மக்கட்கு எவ்வளவோ நன்மையை உண்டாக்கியது.

## புலவர்கட்குப் பரிசில்

மேலும் கச்சியப்பர் நூல்களை நன்கு கற்றுணர்ந்த புலவர்களை நன்கு பாராட்டி அவர்கட்குப் பொருள் ஆடை உணவு முதலியன வழங்கி அவர்களுடைய வாயால் புகழ்ந்து பாடவும் பெற்றார். இவரை அக்காலத்துப் பொதுமக்கள்தாம் கச்சியப்ப முதலியார் என்று கூறினார்களேயன்றிப் புலவர் பெருமக்கள் "கச்சியப்ப வள்ளல்" என்றே கூறினார்கள். அக்காலத்தில் வாழ்ந்திருந்த வள்ளல்களின் புகழோடு இவருடைய புகழுங் கலந்து விளங்கிக்கொண்டிருந்தது. இவரிடம் பரிசு பெறச் செல்வோர் வாய்திறந்து எதையுங் கேட்கவேண்டியதில்லை. இவரே வந்திருப்பவர்களோடு

உரையாடிக் கொண்டிக்கும்போது பக்குவமாகச் செய்தியைத் தெரிந்துகொண்டு பரிசை வழங்கி விடுவார். பெறுபவர்கள் நாம் கேட்காமல் இவருக்கு நம்முடைய விருப்பம் எவ்வாறு தெரிந்தது என்று மிகுந்த வியப்படைவார்கள்.

## வீரன் புலவர்

வீரன் என்னும் புலவர் ஒருவர் அந்நாளில் இருந்தார். அவருக்குச் சிறந்த கல்வியறிவுஅமைந்திருந்தது. அதற்குத் தக்கவாறு ஆணவமும் பொருந்தியிருந்தது. அவர் குறுநிலமன்னர்களையும் பெருந் திருவாளர்களையும் பாடிப் பரிசில் பெற்றுக்கொண்டு நாடெங்குஞ் சுற்றித் திரிந்தார். இவருக்கு முன்சினமும் மிகுதியாக வரும். அவரைக் கண்டோர் 'இவர் நமக்கு யாது தீமை செய்வாரோ வசைபாடினாலும் பாடிவிடுவாரே, என்று மிகுந்த அச்சம் அடைவார்கள். 'தம்மைக் கண்டவர்கள் எல்லோரும் எழுந்து வணங்கவேண்டும்; நமக்குமுன் யாரும் உட்கார்ந்துகொண்டு இருக்கக் கூடாது. அது தம்முடைய பெருமைக்குத் தகாது' என்னும் எண்ணம் உடையவர்.

## கச்சியப்பரைக் காலால் உதைத்தல்

கச்சியப்ப முதலியார் ஒருநாள் அறநிலையங்களைச் சுற்றிப் பார்ப்பதற்காகச் சிவிகையேறிச் சென்றார். கச்சியப்பரின் உறுதிச் சுற்றத்தினர் அவரைச் சூழ்ந்து சென்றனர். சிவிகை விரைவாகச் சென்று கொண்டிருந்தது. செல்லும் வழியில் வீரன்புலவர் இவருக்கு எதிரே வந்து கொண்டிருந்தார். கச்சியப்பர் புலவரைப் பார்க்கவில்லைபோலும். சிவிகை தாங்கிச் சென்றவர்களோ

புலவரைப்பற்றி யாதும் எண்ணமற்றவர்களாய்ச் சென்று கொண்டிருந்தனர். 'நம்மைக்கண்டுஞ் சிவிகை விட்டிறங்காது வருபவன் யார்' என்று எண்ணமிட்டுக் கொண்டு வீரன் புலவர் நின்றார். சிவிகை தமக்கு அண்மையில் வந்ததும் "நிறுத்து" எனறார் கச்சியப்பர் திடுக்கிட்டவராய்ச்சிவிகையைவிட்டுக்கீழே யிறங்கினார். வீரன் புலவர், "என்னைக் கண்டுஞ் சிவிகை விட்டிறங்காமல் இப்படிவந்தாயே? உனக்கு இவ்வளவு செருக்கா?" என்று கேட்டுக்கொண்டே கச்சியப்ப வள்ளலின் மார்பில் காலால் உதைத்து விட்டார்.

## கச்சியப்பர் பணிவு

தம்முடைய தலைவரைப் புலவர் இவ்வாறு உதைத்து விட்டதைக் கண்டு கச்சியப்பரின் ஆட்கள் பதறினார்கள். கச்சியப்பர் மட்டும் விரலசைத்திருந்தாற் போதும்; வீரன் புலவருடைய கதி அதோகதிதான் ஆனால் கச்சியப்பர் அப்படியெல்லாஞ் செய்யவில்லை. "தெரியாமல்தவறுசெய்துவிட்டேன்என்னுடையபிழையைப் பொறுத்துக்கொள்ளுங்கள். நான் சிவிகையில் இருந்து தங்களைப் பார்க்கவில்லை. பார்த்திருந்தால் உடனே இறங்காமல் உங்களுக்குப் பக்கத்தில் சிவிகையில் வருவேனா? சிவிகை முதலிய சிறப்புக்கள் சிறந்த செந்தமிழ்ச் செல்வராகிய தங்கட்குத்தான் வேண்டும். எனக்கு எற்றிற்கு? தாங்கள் இந்தச் சிவிகையில் ஏறிச்செல்லுங்கள். நான் செல்லவேண்டியஇடத்திற்கு நடந்து செல்லுகிறேன்," என்று கூறிவிட்டு வீரன் புலவரைப் பணிந்தார். பொருள் முதலியனவும் வழங்கினார். அவரைச் சிவிகையில் வைத்துத் தூக்கிக் கொண்டு போகுமாறு தம்முடைய ஆட்களுக்குக்

கட்டளையிட்டார். கச்சியப்பரின் ஆட்கள் கச்சியப்பரின் பொறுமையையும் பணிவையும் கண்டு மிகுந்த வியப் படைந்தனர். 'என்ன? நம்முடைய தலைவர் இப்படி உதைத்த காலை முத்தமிடுகிறாரே' என்று எண்ணிக் கொண்டே புலவரைச் சிவிகையில் வைத்துச் சுமக்க லாயினர். வீரன் புலவர் பல நூல்களைப் படித்திருந்தும் பொறுமை யில்லாதவராய் ஆணவச் செருக்கால் வள்ளல் ஒருவரை மார்பில் உதைத்து விட்டார். கச்சி யப்பரோ தாம் வீரன் புலவரைப் போல் மிகுதியாக நூல்களைப் படியாதிருந்தும் தம்முடைய பண்பாட்டால் வீரன்புலவரை வெற்றிகொண்டு விட்டார். இந்த இடத்தில்,

" மிகுதியான் மிக்கவை செய்தாரைத் தாம்தம்
தகுதியான் வென்று விடல்."

என்னும் பொதுமறையும் உண்மையாகி விட்டது. இதன்பின் வீரன் புலவர் தமது ஆணவத்தை ஒருவாறு அடக்கிக்கொண்டு அமைதியான வாழ்க்கையை மேற் கொண்டிருந்தார். அவர் கச்சியப்பரைப்பார்த்து,

" மண்படுமோ வெய்யிலிலே வாடுமோ புல்லரிரு
கண்படுமோ அன்பாகக் கற்றவர்கள்— மண்புகழ
மெச்சியப்பா லும்புகழ வீறுவல்லை ஆளவந்த
கச்சியப்ப னையுதைத்த கால். "

என்று பாடினார். இவ்வுண்மையைக்கீழ்வருந்தொண்டை மண்டல சதகம் திருக்குறள் குமரேச வெண்பா முதலிய நூல்களின் பாடல்களும் உறுதிப்படுத்துகின்றன. கச்சியப்பவள்ளல் மீது புலவர்கள் பாடிய புகழ்ப்பாக்கள் மறைந் தொழிந்தன.

"வில்லைச் செருப்பிட்ட காலால் உதைத்து வியனுலகில்
சொல்லற் கரிய புகழ்கொடுத் தோன்துட்ட வீரன்தன்னால்
பல்லக்கி லேயன்றி மண்படு மோளனும் பாடல்கொண்ட
வல்லப்பதிக்கச்சி யப்பனும்வாழ்தொண்டைமண்டலமே."

"காலால் மிதித்தார்க்கும் கச்சியப்பர் ஏன்கொடுத்தார்
கோலச் சிவிகை குமரேசா—ஏலும்
மிகுதியான் மிக்கவை செய்தாரைத் தாந்தம்
தகுதியான் வென்றுவிடல்."

"உடைப்பெரும் பொருளினை யுலகி லூதியம்
கிடைப்பதற் களித்தலிற் கிளர்நி ரப்பினால்
அடுத்துவந் தேற்குநற் கார்வம் மீதுறக்
கொடுக்கினென் றேபல கோடி யாகுமால்."

(நைடதம்)

"ஈத்துவக்கும் இன்பம் அறியார்கொல் தாமுடைமை
வைத்திழக்கும் வன்கண் ணவர்" (குறள்)

"நல்லா றெனினும் கொளல்தீது மேலுலகம்
இல்லெனினும் ஈதலே நன்று" (குறள்)

## கரு. அரங்கசாமித் தேவர்

### தோற்றம்

"பல்லோர் பிழைக்கநல் தொழில்தந்து
 காத்திடும் பரிதாபம் உள்ளசிலன்
பார்மீதில் அறமதைப் புரிந்துஉப
 காரமே பாங்குடன் அளிக்குந்தீரன்
அல்லோடு பகலுமே கடவுளைப்
 போற்றியே ஆலயம் புதுக்கும்நல்லோன்
அரி அரன் திருவிழா நடத்தியவர்
 அருள்பூண்ட அகமுகப் பொலிவுமிக்கோன்
நல்லோர்கள் வாழ்த்தினை நாளுமே
 பெற்றிடு நற்பெயர் வாய்ந்ததன்யன்
நான்மறைப் பயனறிந் தின்புறக்
 கூறுந்தன் நாவுடைய ஞானபுனிதன்
சொல்லுநற் கற்புடைய மனைவியர்
 தமைக்கூடித் தோமிலா வாழ்வுகண்டோன்
சொந்தமாம் தம்பிக்கு நல்லவன்
 கோட்டையில்தோன்றிய அரங்கசாமி."

என்று அறிஞர்களாற் புகழ்ந்து பாடப்பெற்ற இவர், சோழவள நாட்டிலே தஞ்சைமா வட்டத்திலே தம்பிக் கோட்டை என்று இக்காலத்தில் வழங்கப்பெறும் தம்பிக்கு நல்லவன் கோட்டையிலே கி. பி. 1860 ஆம் ஆண்டு செப்டம்பர்த் திங்கள் பதின்மூன்ரும் நாள் பிறந்தார். தந்தையார் பெயர் இராமசாமித் தேவர். தாயார் பெயர் சங்கமிர்தத்தாச்சி,

## கல்வி

அரங்கசாமி என்று பெயர் இடப்பெற்ற இவருக்கு அகவை ஏழு ஆகியதும் இவரைப் பள்ளிக்கனுப்பிக் கல்வி கற்கச்செய்தனர். அரங்கசாமி கல்வி கற்பதில் மிகுந்த ஆர்வங்காட்டினர். அரிச்சுவடி, இலக்கம், நெல் லிலக்கம், பேர்ச்சுவடி, வரிக்காப் பாடம், எண்சுவடி, திவாகரம், வேழமுகம், உலகநீதி, வாக்குண்டாம், நல் வழி, நன்னெறி நீதிசாரம், நிகண்டு முதலிய நூல்களை நன்கு கற்றுத் தேறினர், அக்காலத்துப் பள்ளிக் கூடங்களிலே இப்பாடங்கள் தாம் பெரும்பான்மை யாகக் கற்பிக்கப்பட்டன. அகவை பதினாறு முடிவதற்குள் இவர் நூல்கள் பலவற்றை நன்குகற்றுத் தேர்ந்ததோடு குடும்பத் தொழில்களைப் பார்ப்பதிலும் நன்கு பழகிக் கெட்டிக்காரர் ஆனர்.

## பயிர்த்தொழில்

"உயிர்த் தொழில் எல்லாம் பயிர்த்தொழில் தன்னல்" என்பது அறிஞர் வாக்கு. அரங்கசாமி சிறந்த செல்வக் குடும்பத்தில் தோன்றியவர், வருந்தி உழைக் காமலே சுகபோகங்களை நுகர்ந்து மகிழலாம். ஆனல் இவர் அவ்வாறு சோம்பேறியாக இருந்து உண்டு களிக்கவில்லை. தம்முடைய பதினருவது அகவையில் இருந்து தமக்குரிய வயல்களிலும் தென்னந் தோட்டங் களிலும் தம்முடைய பண்ணையாட்களோடு ஏர்உழுதல் சேறுசெய்தல், நாற்று நடுதல் களைபிடுங்குதல், அறு வடை செய்தல் நெல் முதலியவைகளைக் கண்டுமுதல் செய்து வீட்டிற்குக் கொண்டுபோய்ச் சேர்த்தல் முதலிய தொழில்களைச் செய்தார். வெயில் மழைமுதலி யவைகளைப் பொருட்படுத்தாது ஆட்களோடு

ஆட்கள்ாய் இவர் உழைத்தது எல்லோருக்கும் மகிழ்ச்சியை அளித்தது. இதனால் நிலபுலங்களில் இருந்து வருவாயும் மிகுதியாகக் கிடைத்தது. உடையவன் தொழில் செய்தால் வருவாய் உயருமேதவிரக் குறையாது ஆகையால்தான் " உடையவன் பாராப்பயிர் ஒருமுழங் கட்டை ,' என்று பழமொழியும் ஏற்பட்டிருக்கிறது.

## தாயார் பிரிவு

இவருக்கு அகவை இருபத்திரண்டு நடந்து கொண்டிருந்தபோதுஇவருடைய தாயார் விண்ணுலகஞ் சென்றார்.

## திருமணங்கள்

இவருக்கு அகவை இருபத்தாறு ஆனபோது திருமணஞ் செய்துகொள்ள எண்ணினார். வேதாம்பாள் என்னும் மங்கையை முதலாவது மனைவியாக மணந்தார். மறு ஆண்டில் அஃதாவது தம்முடைய இருபத்தேழாவது அகவையில் இராமாமணி அம்மாள் என்னும் மங்கையை இரண்டாவது மனைவியாக மணந்தார். இக்காலத்தில் இவருடைய தந்தையார் விண்ணுலகேகினார். மறு ஆண்டில் சிவகாம சுந்தரி என்னும் பெண்மணியை மூன்ருவது மனைவியாகமணந்தார். பின்னர்ச் சிறிது காலஞ் சென்றபிறகு அலர்மேலு என்னும் பெண்மணியை நான்காவது மனைவியாக மணந்தார். இவர் ஏன் இவ்வாறு திருமணங்களை அடுத்தடுத்துச் செய்தாரெனின் மக்கட் பேற்றை விரும்பியேயாம். அந்நாளில் இந்நாளைப்போல் இரண்டாவது திருமணம் மனைவியிருக்கும்பொழுது செய்துகொள்ளக்

கூடாது என்று சட்டதிட்டங்கள் இல்லை. இவர்பெருஞ் செல்வராக விளங்கியபடியால் எல்லோரும் பெண் கொடுப்பதற்கு நீமுன் நான்முன் என்று காத்துக் கொண்டிருந்தார்கள். இதனுலேயே இவருக்கு அடுத் தடுத்துத் திருமணங்கள் தடையில்லாமல் நடைபெற்றன. ஆயினும் அரங்கசாமியார் எதிர்பார்த்தபடி இவர்களில் யாரும் மக்களைப் பெற்றெடுத்து வளர்த்துவிடவில்லை,

## வணிகத் துறையிற் பொருளீட்டல்

இவர் மண்எண்ணெய் வாணிகம் நெல், அரிசி, தேங்காய், முதலிய வாணிகம், ஆ கி ய வை க ளை நடத்தியும் அரிசி மில் ஏற்படுத்தியும் பொருளைப் பெருக்கினுர். இவருடைய செல்வப் பெருக்கு அளவு கடந்ததாகி எல்லோரும் நன்கு பாராட்டிப் போற்றும் அளவிற்குச் சிறப்புற்ரேங்கியது. முன்னர்ச் செல்வத் தைப் பெருக்கவேண்டிய வழியிற் பெருக்கி விட்டால் பிறகு அதனைப்பயன் படுத்த வேண்டிய வழியிற் பயன் படுத்தலாம் அன்ரே ?

## சிற்றூர் அலுவல்

அரங்கசாமி தம்முடைய இருபத்தேழாவது அகவை முதல் அறுபத்தொன்பதாம் அகவை வரையில் தம்பிக் கோட்டைச் சிற்றூர் மணியக்காரராகக் காரியம் பார்த் தார். அதிராம் பட்டணம் பெஞ்சுக் கோர்ட்டில் கவுரவ நீதிபதியாக ஒன்பது ஆண்டுகள் வரையில் வேலை பார்த்தார்.

## பலவகை வேலைகள்

பட்டுக் கோட்டைத் தாலுகா போர்டு மெம்பராக ஒன்பதாண்டுகள் அமர்ந்து மக்கள் பலனடையத்தக்க

காரியங்கள் பலவற்றைச் செய்தார். தஞ்சைசில்லா போர்டில் ஒன்பதாண்டுகள்வரை மெம்பராக இருந் தார். தஞ்சைமாவட்டத் திருக்கோயில் பஞ்சாயத்து அறச்செயலாளராக முப்பதாண்டுகள்வரை பணிபுரிந் தார். பட்டுக் கோட்டை நாடியம்பாள் பாங்கு முதலிய வற்றிற்குப் பல ஆண்டுகள் தலைவராக இருந்தார். காங்கிரஸ் கட்சியின் தேசவிடுதலை இயக்கத்திலும் ஈடுபட்டுப் பல காரியங்கள் செய்தார். பல மகாநாடு களுக்கும் திறப்பு விழாக்களுக்குந் தலைவராக அமர்ந்து அவைகளைச் சிறப்பாக நடத்தினர்.

## திருக்கோயில் திருப்பணிகள்

தம்பிக் கோட்டையில் உள்ள சித்திவிநாயகர் திருக் கோயிலைத் தம்முடைய சொந்தப்பொருளில் திருப்பணி செய்து குடமுழுக்கு நடத்தினர், மேற்படி கோயிலுக் குப் பன்னிரண்டுமா நன்செய் நிலம் ஒருவேலி, புன் செய் நிலம் தென்னந் தோப்பு முதலியவைகளை உரிமைப் படுத்தினர். தங்கம் வெள்ளி முதலியவை களால் அணிகலன்கள், வழிபாட்டுப் பொருள்கள் (பூசைச்சாமான்கள்) ஊர்திகள் முதலியவைகளை நல்கினர்.

## முருகர் திருக்கோயில்

தம்பிக்கோட்டை முருகர் திருக்கோயிலைத் தம் முடைய பொருளைக் கொண்டு திருப்பணி செய்து குடமுழுக்கு நடத்தினர். இக்கோவிலுக்கும் நன்செய் புன்செய் நிலம் அணிகலன்கள் வழிபாட்டுச்சாமன்களை முதலியவைகளை ஏற்படுத்தினர்.

## திரௌபதையம்மன் கோயில்

தம்பிக்கோட்டையில் உள்ள திரௌபதையம்மன் கோயிலைத் திருப்பணி செய்து குடமுழுக்குச் செய்தார். ஆண்டுதோறும் பாரதச் சொற்பொழிவு, தீமிதித்திரு விழா முதலியன ஏற்பாடு செய்ததோடு மேற்படி கோயிலின் நாள்வழிபாடு சிறப்புவழிபாடு முதலியவை கட்கு நன்செய் புன்செய் முதலிய சொத்துக்களை ஏற்படுத்தினர்.

## மாரியம்மன் கோயில்

தம்பிக்கோட்டையில் உள்ள மாரியம்மன் திருக் கோயிலைத் தம் உரிமைப் பொருள் மூவாயிரம் வெண் பொற் காசுகளைக் கொண்டு திருப்பணிசெய்து குட முழுக்கு நடத்தினர். கோவிலுக்கு நிலபுலங்களையும் உண்டாக்கினர். திருவிழா முதலியன நடப்பதற்கு ஏற்பாடு செய்தார். மாரியம்மன்கோயிலுக்குமுன்னுள்ள காத்தவராயசாமி கோயிலுக்குந் திருப்பணி நடத்தினர்.

## வரதராசப் பெருமாள் கோயில்

ஈசுவர படைவர்ன மென்னும் தற்காலப் பெயரு டைய செம்படவன்காடு வரதராசப் பெருமாள் திருக் கோயிலைத் திருப்பணி செய்து குடமுழுக்கு நடத்தினர். கோயிலின் நாள் வழிபாடு முதலியவற்றிற்காக ஏழு வேலி புன்செய்த் தோப்பு மூன்று வேலி நன்செய் நிலம் ஆகியவைகளை உண்டாக்கியதோடு அணி கலன்கள் முதலியவைகளுஞ் செய்துவைத்தார்.

## சிவன்கோயில் திருப்பணி

தேவாரம்பெற்ற திருக் கோயில் ஒன்றை இவரு டைய முன்னோர்கள் நானூறு யாண்டுகட்கு முன்னர்த்

திருப்பணி செய்திருந்தனர். அத்திருப்பணிசீரணமாகிப் பழுதுற்றிருந்தது. இவர் அக்கோவிலுக்குத் திருப்பணிகள் செய்து குடமுழுக்கு நடத்தியதோடு ஆண்டு ஒன்றுக்கு நாற்பதினுயிரம் தேங்காய்கள் வரக்கூடிய தென்னந் தோப்பு, ஆயிரக்கலம் நெல் விளையக் கூடிய நன்செய் நிலம்முதலியவைகளையும் உண்டாக்கி வைத்தார்.

## பிடாரிகோயில் திருப்பணி

தம்பிக் கோட்டை கீழைக்காட்டுப் பிடாரியம்மன் கோயிலைத்திருப்பணி செய்து குடமுழுக்கு நடத்தினுர்.

## பல திருப்பணிகள்

மற்றும் இவர் வரந்தரும் விநாயகர் கோயில், காளியம்மன் கோயில், கட்டெறும்பு ஐயனுர் கோயில், இராசாமடம் இராச மோகனப் பிள்ளையார் கோயில், சந்தான இராச கோபாலப் பெருமாள் கோயில், சிவன் கோயில், ஆஞ்சநேயர் கோயில், ஓமுடைய ஐயனுர் கோயில் தாச்சியம்மன் கோயில் முதலியவைகளையுந் திருப்பணி செய்து குடமுழுக்கு நடத்தினுர்

## வேறுபல கோயில்கள்

கோவில்களுக்குத் திருப்பணி செய்வதெனில் இவருக்குப் பெரு மகிழ்ச்சியுண்டாகும் பக்கத்தூர்களில் இருந்த கோயில்களைத் திருப்பணி செய்ததோடு தாமோதரன் கோட்டைச் சிவன் கோயிலைக் கோயிற் பொருளைக் கொண்டே திருப்பணி முதலியவைகள் செய்தார். அதிவீரராமன் பட்டணத்தில் இருந்த சிவன் கோயில் ஒன்றுக்கும் திருப்பணிகுடமுழுக்குமுதலியன

நடத்தினர், மேலும் அவ்வூர்ப் பிள்ளையார் கோயில், தோலி சிவன் கோயில், தாமோதரன் கோட்டைச் சுப்பிரமணியர் கோயில், புதுக் கோட்டகத் தில்லையம்மன் கோயில், இராவுத்தசாமி கோயில் என்பவைகளையுந் திருப்பணி செய்து குடமுழுக்கு நடத்தினர்.

## அந்தணர்கட்கு வீடு

தம்பிக் கோட்டையில் இல்லங்கள் பல வற்றைக் கட்டி அவைகளில் அந்தணர்கள் வசிப்பதற்கு ஏற்பாடு செய்தார்.

## கல்வி வளர்ச்சிக்கு

திருக்கோயில் பணியில் ஈடுபட்டிருந்த இவர் கல்வி வளர்ச்சியில் கருத்துச் செலுத்தாமல் இருந்து விடவில்லை. வடகாட்டில் ஆண்பெண் பாடசாலைகள் இரண்டை ஏற்படுத்தினர். கீழக் காட்டில் ஆண்பாட சாலை ஒன்றை ஏற்படுத்தினர். மேலக் காட்டில் ஆண் பாடசாலைஒன்றை ஏற்படுத்தினர் ஆதிதிராவிடர்களுக்கு ஆண்பெண் பாடசாலையை அமைத்தார். மரவக்காடு கிருட்டிணபுரம் ஆகிய இடங்களிலும் பாடசாலைகளை நிறுவினர்.

## மருத்துவ வசதிகள்

பட்டுக் கோட்டைத் தாலுகா போர்டில்,நாடிமுத்துப் பிள்ளைதலைவராகவும் இவர் உறுப்பினராகவும்இருநத காலத்தில் மக்களின் நன்மையைநாடித் தம்பிக் கோட்டை வட காட்டில் மருத்துவ சாலை ஒன்றை ஏற்படுத்தினர்.

## தண்ணீர்த்தருமங்கள்

மக்கள் உடனலத்தோடு சிறந்து வாழவேண்டு மாயின் நாள்தோறும் நீராடி உடலினைத் தூய்மையாக வைத்துக் கொள்ளுதல்வேண்டும். மக்களுக்கு நோய்கள் உண்டாகக்காரணம் உடலை நன்கு தூய்மையாக வைத் துக்கொள்ளாமையே. குளங்கள் அமைத்து நீராட வசதி செய்தல் உயரிய அறமாம். இதனை நன்கு உணர்ந்த இவர் தம்பிக் கோட்டை ஓடைக்குளத்தைத் தமது செல வில்வெட்டிப் படித்துறை கட்டினர். பாமணியாற்றின் அண்மையில் புதுக்குளம் ஒன்றை வெட்டிப்படித்துறை கட்டினர். சம்போடைக்குளம், நொச்சிக்கண்ணிக் குளம், கருங்குளம் என்பவைகளையும் வெட்டினர். மேலும் பல குளங்களைத் தம்முடைய பொருளைக் கொண்டும் கோயிற்பொருளைக் கொண்டும் வெட்டித் தண்ணீர்த் தருமத்தை நன்குசெய்தார்.

## பல பணிகள்

ஊர்களில் வழிநடைப் பாதைகள் பலவற்றை அமைத்தார் திருமணம்நடத்துபவர்கள் வறியவர்களாக இருந்து பொருளுதவியை நாடிவந்தால் அவர்கட்குத் தக்கவாறு உதவி செய்தார். தம்மீது பாடல்கள் இயற் றிக்கொண்டும் இயற்றுமலும் வந்தபுலவர்கள் பலருக் குத் தகுந்தவாறு நன்கொடைகள் வழங்கிப் பெருமைப் படுத்தினர். அறச்சாலைகள் சிலவற்றை அமைத்து அவைகள் தொடர்ந்து நடந்து வரவேண்டியதற்காக விளைநிலம் முதலியவைகளை அவைகட்கு உரிமைப் படுத்திவைத்தார். இன்னும் இவர் செய்யவேண்டிய நல்லறங்கள் யாவை யென்பதை நன்கு ஆராய்ந்து

இன்றியமையாத அறங்களை யெல்லாம் நன்ருகச் செய்தார். இதனுல் இவருடைய பெயர் மறைந்து இவரைப் பலரும் தம்பிக்கோட்டை வள்ளல் என்றே ிப்பிட்டுப் பேசலாயினர்.

## சுவீகார மகன்

நான்கு மனைவியரை மணந்தும் மக்கட் பேற்றை யடையாத இவர், உறவினர்களின் பிள்ளை யொன்றைச் சுவீகாரமாக எடுத்து வளர்த்துச் செய்ய வேண்டியவை களைச் செய்தார். அச்சுவீகார மகனுடைய பெயர் இராமசாமி என்பது.

## வியக்கத்தக்க நிகழ்ச்சி

1902 ஆம் ஆண்டில் முத்துப் பேட்டையில் இருந்து அறந்தாங்கிக்குப் புகை வண்டிப் பாதை போடத் தொடங்கினர். ஆங்கிலேய இஞ்சினீயர்ஒருவர் பாதையைஅளந்துஒழுங்கு செய்து கொண்டுசென்ருர். தம்பிக் கோட்டை மாரியம்மன் கோயில் சுவரை யொட் டிப் பாதை விழுந்ததும் அவ்வாங்கிலேயர் கோவிலை இடிக்கவேண்டியதுதான் என்று திட்டம் போட்டார். அப்போது அவ்வாங்கிலேயருக்கு இருகண்களுந் தெரியாமற் போயின. இப்புதுமையைக் கண்டவர்கள் அரங்கசாமித் தேவரிடம் ஓடிவந்து கூறினர். உடனே இவர் விரைந்து சென்று அவ்வாங்கிலேயரைப்பார்த் தார். அரங்கசாமியின் பெருமையையும் வள்ளல் தன்மையைப் பற்றியும் நன்கு அறிந்திருந்த அவ் வாங்கிலேய இஞ்சினீயா அரங்கசாமியாரைப் பார்த்துத் "தேவர் அவர்களே! நான் எத்தனையோ ஆயிரம்மைல் புகை வண்டிப்பாதைகள் ஏற்படுத்தியும், கட்டிடம், வீடு

அரண்மனை, பாலங்கள் 'முதலியவற்றிற்குத் திட்டங்கள் வகுத்தும் ஒழுங்குசெய்துமுடித்திருக்கிறேன். இவ்வாறு ஏற்படக்காரணம் யாதென்று தெரியவில்லை'' என்று கூறிவருந்தினர்.

## தேவர் திருநீறளித்தல்

ஆங்கிலேயருக்கு ஏற்பட்ட தொல்லைக்குக்காரணத்தை நன்குணர்ந்து கொண்ட அரங்கசாமித் தேவர், ஆங்கிலேயரைப் பார்த்துத் ' துரையவர்களே.! நீங்கள் கலங்க வேண்டாம். என்று கூறிவிட்டு அம்பாளை வேண்டினர். சிறிது திருநீற்றைத் துரையின் தலையிற் போட்டுப் பக்கத்தில் இருந்த குளத்துத் தண்ணீரைத் துரையின் தலையில் தெளித்தார். அப்பொழுது துரைக்கு இடி இடித்து மின்னல் மின்னியதைப் போல் தோற்றம் உண்டாகிக் கண்களுந் தெரியலாயின; துரை அரங்கசாமித் தேவரைப் பார்த்து, " நீயே கண்கண்ட தெய்வமாக விளங்குகிருய். உன்னுடைய அருளுக்கு நான் என்ன கைம்மாறு செய்யப் போகிறேன்?" என்று கூறினர். பலவாறு புகழ்ந்து போற்றிப் பாராட்டினர்.

## தெய்வத்திற்குத் தீங்குசெய்யமுடியாது

தேவர் ஆங்கிலேயரைப் பார்த்து, " நீங்கள் மனிதர்களுக்குத் தீமைசெய்து விடலாம். மனிதர்கள் குடியிருக்கும் வீடுகளை இடித்து உங்கள் விருப்பம் போல் வழியமைத்துவிடலாம் சிற்றூர்த் தெய்வமாகவும் மிகப் பெருமை பொருந்தியும் விளங்கும் மாரியம்மனுக்குத் தீமைசெய்துவிட முடியாது. நீங்கள் கோயிலை இடித்துவிட எண்ணினீர்களே, இது தான் உங்களுக்கு ஏற்பட்ட தொல்லைக்குக் காரணம்

இனிமேல் வழியேற்பாடு செய்து கொண்டு போகும் இடங்களில் இவ்வாறு தெய்வங்களின் திருக் கோயில்களை இடிப்பதற்கு எண்ணுதீர்கள். அவ்வாறு எண்ணுவீர்களாயின் தீமைவருவது திண்ணம் இதனைச் சிறிதும் மறக்க வேண்டாம்" என்று கூறினர். பிறகு ஆங்கிலேய இஞ்சினியர் தம்முடைய திட்டத்தை மாற் றியமைத்து வழியைப் போடத் தொடங்கினர். தம்பிக்கு நல்லவன் கோட்டை என்று வழங்கிக் கொண்டிருந்த ஊரின் பெயர் புகைவண்டி நிலையம் ஏற்பட்ட பிறகு தம்பிக்கோட்டையாகி இன்றுந் தம்பிக்கோட்டை யாகவே இருக்கிறது.

## பாராட்டு

தேவர் பல திருக்கோயில் திருப்பணிகள் பாடசாலை கள் முதலிய பலவகையான அறப்பணிகள் புரிந்ததன் பொருட்டு வாழ்த்துப்பத்திரிகைகளைப் பல அன்பர்கள் வாசித்துக் கொடுத்துப் பாராட்டினர். இவர்மீது கீர்த்தி பஞ்சகம், புகழ்ப்பிரபந்தத் திரட்டுப்பா முதலிய புகழ்நூல்களையும் அன்பர்கள் இயற்றினர்கள். இவரு டைய வரலாறு நன்கு விரிவாக முருகைய தேசிகர் என் பவரால் எழுதப்பட்டிருக்கிறது. எழுபத்தைந்து யாண்டு கட்கு மேலும் இவர் இவ்வுலகில்வாழ்ந்திருந்தார்.

# கசு. புண்ணியகோட்டி முதலியார்

## தோற்றம்

புண்ணியகோட்டி முதலியாருடைய இயற்பெயர் கோட்டி முதலியார் என்பது தான். இவர் மிகுந்த நல் வினையைச் செய்து சிறப்படைந்தபடியால் புண்ணியம் என்னுஞ் சொல்லுஞ் சேர்ந்து நீண்டுவளர்ந்து நின்றது. இவர் தொண்டைவள நாட்டிலே மாகறல் என்னும் ஊரிலே பிறந்தார். கற்கவேண்டிய நூல்களையெல்லாம் இளமையிலேயே கற்றுச் சிறப்படைந்தார். தந்தையார் இவருக்குத் தேடிவைத்த பொருள்மிகுதியாகஇருந்தது. இவர் அத்துடன் அமைதிபெற்று விடாமல் மேலும் அறநெறியிலே பொருளை மிகுதியாகத் தேடினார்.

## அறம்

ஒருநாள் கோட்டி முதலியார் தம்முடையவீட்டிலே அமர்ந்து கந்தபுராணத்தைப் படித்துக் கொண்டிருந் தார், அப்போது ;

" தருமமென் றொருபொருள் உளது தாவிலா
இருமையின் இன்பமும் எளிதின் ஆக்குமால்
அருமையில் வரும்பொருள் ஆகும் அன்னதும்
ஒருமையி னோர்க்கலால் உணர்தற் கொண்ணுமோ ?

தருமமே போற்றிடின் அன்பு சார்ந்திடும்
அருள்எனுங் குழவியும் அணையும் ஆங்கவை
வருவழித் தவமெனும் மாட்சி எய்துமேல்
தெருளுறும் அவ்வுயிர் சிவனைச் சேருமால் "

என்னும் பாடல்களைப் படித்தார். நன்கு கல்வி கற்றுப் பாடல்களின் பொருளைத் தாமே உணர்ந்து கொள்ளக்கூடிய திறமையோடு விளங்கிய கோட்டி முதலியாருக்கு இப்பாடல்களின் பொருள் மனக் கிளர்ச்சியை உண்டாக்கியது. தருமம் என்கின்ற பொருள் இம்மை மறுமை என்னும் இரண்டிடத்து இன்பத்தையும் எளிதிற் கொடுக்குமாமே நாம் இது வரையில் அறம் புரியுஞ் செயலில் ஈடுபடாது போனோமே. தருமத்தைச் செய்தால் அன்பானது உண்டாகும். அருள் என்கின்ற குழவியும் அதனோடு தோன்றும். அன்பும் அருளும் உண்டானால் தவம் செய்கிறவர்களுக்குண்டாகிற சிறப்பு ஏற்படும். அறத் தைச் செய்கின்ற உயிர் சிவபெருமானுடைய திருவடி களைச்சேரும் என்று இப்படிப் பெரியோர் பாடியிருக் கிறார்களே. போனது போகட்டும்; இனிமேலேனும் அறத்தைப் புரிந்து அன்பையும் அருளையும் அடைய வேண்டும் என்று முடிவுசெய்தார். ஊரிலே சாப் பாட்டிற் கில்லாது வருந்திக் கொண்டிருந்தவர்கட்கு உணவு சமைத்துப் பசிதீருமாறு போட்டார். "உண்டி கொடுத்தோர் உயிர் கொடுத்தோர்" ஈதலால் உண் டாகும் இன்பம் ஈந்து பார்ப்பவர்களுக்குத்தான் விளங்குமே தவிர மற்றையோர்க்கு விளங்காது. இப் பொழுது கோட்டி முதலியாருக்கு ஈந்துவக்கும் இன்பம் நன்கு தெரிந்துவிட்டது.

## வள்ளலானார்

மாகறல் கோட்டி முதலியார் தருமஞ் செய்கிறாராம் என்னுஞ் செய்தி ஊர்தோறுஞ் சென்று பிறகு தொலை

விடங்கட்கும் எட்டத் தொடங்கியது. வறியவர் வந்து வாய் திறப்பதற்கு முன்னரே இவர் குறிப்பறிந்து பொருள் வழங்குதலை மேற்கொண்டார். புலவர்களும் இவரிடம் வந்து செய்யுள் இயற்றியும் இயற்றுமலும் தமக்கு வேண்டியவைகளைப் பெற்றுக் கொண்டு சென்றார்கள். இல்லை என்று இரத்தல் இழிவு என்று எண்ணித் தமக்கு வேண்டியதைக் கேட்க நாணம் உறுகிறவர்கட்கு இவர் ஓர் அரிய ஏற்பாட்டைச் செய்தார்.

## மணல்பரப்புதல்

தம் வீட்டு முற்றத்திலே மணலைப்பரப்பிவைத்தார். தம்மிடம் வருபவர்கள் தங்கட்கு வேண்டியவைகளை அம்மணலிலே எழுதிவைத்தால் போதும்; வேண்டியதைக் கொடுக்கப் பெறும் என்று அறிவித்தார். வருகிறவர்கள் மணலில் எழுதுகிற செய்தியை உள்ளிருந்தே முதலியார் பார்ப்பார். அவர்கள் எழுதிமுடித்ததும் அவர்கள் எழுதிய பொருளை எடுத்துத் தட்டில் வைத்து வேலைக்காரர்கள் மூலம் அனுப்புவார். அவர்கள் அப்பொருளைப் பெற்றுக்கொண்டு மகிழ்ச்சியடைந்தபின் தாம் உள்ளேயிருந்து வெளியே வருவார். வந்தவர்களைப் பார்த்து "வாருங்கள் கூறுங்கள்" என்று சொல்லி இன்னுரைகளைக் கூறி உரையாடுவார். பிறகு உணவு முதலியவைகளை உண்பிப்பார். வந்தவர்கள் அண்மையில் இருப்பவர்களாயின் அவர்கள் விருப்பம் போல் உடனே செல்ல வேண்டியவர்களைச் செல்ல விடுவார். தங்கிச் செல்ல விரும்புகிறவர்களையும் தொலையில் இருந்து வந்தவர்களையும் ஒருநாளாவது இருக்கச் செய்து பிறகுதான் அனுப்புவார்.

## படிக்காசுப்புலவர்

அக்காலத்தில் படிக்காசுப்புலவர் என்பவர் பெரும் புலமை படைத்தவராய் எல்லோரானுங் கொண்டாடப் பெற்றுச் சிறந்து விளங்கினர். அவர் கோட்டி முதலி யாரின் கொடைச்சிறப்பையும் குணச்சிறப்பையும் உணர்ந்தார். கோட்டி முதலியாரைக்காண விரும்பி மாகறலுக்கு வந்தார். பொதுவான மனிதர்களையே சிறப்புடன் பாராட்டிப்போற்றும் முதலியார் பெரும் புலவராகிய படிக்காசுப் புலவரை உவந்து மகிழ்ந்து போற்றிப் பாராட்டியதைப்பற்றிக் கேட்கவும் வேண்டுமோ ?

## அறவுரை

படிக்காசுப் புலவர் கோட்டி முதலியாரைப் பார்த்து, " முதலியார் அவர்களே ! அடைதற்கு அரிய உடம்பானது தனக்குக் கிடைத்ததென்ருல் அவ் வுடலைக் கொண்டு செய்தற்கு அருமையான அறங்கள் பலவற்றையுஞ் செய்து துன்பம் பொருந்திய பிறவிக் கடலிலே இருந்து கரையேறுதல் வேண்டும். அவ் வாறு கரையேருது பொய்யான உலகவாழ்க்கை யிலேயே ஒருவன் கிடந்துகொண்டு வருந்துவானுயின் அவனுடைய உடல் பொன்கலத்தில் வைத்தற்குரிய பால் நிலத்தின் வெடிப்பில் ஊற்றியதற்கு ஒப்பாகும். தாங்கள் உடல் எடுத்ததின் உயரிய பயனை அடைந்து விட்டீர்கள், மேலும் இவ்வாறே செய்து புகழ்பெறு வீர்களாக" என்று அறவுரைகள் பலபகர்ந்து பாராட்டி ஞர். விரும்பியதைக் கேட்டற்கு நாணமுறும் இரவலர்

பொருட்டு முன்றிலில் மணல் பரப்பியிருப்பதற்கு வியந்து ;

" நீள்நிலத்தில் உறும் ஏழை மாந்தரீர்
நீவிர் வேண்டுவன இன்புறீஇ
நேரில் கேண்மின் அவை தருவன்யான் அலதும்
நினைவில் உன்னுமவை நவிலநீர்
நாணில் என்னுடைய மனைமுன் வாயில்தனில்
நன்மணல் மிகுதி கொட்டியே
நாம்பரப்பியும் இருக்கிறோம் அதனில்
நாடிவந்ததனை எழுதுமின்
காணில்அங் குடனே அருள்வம் என்னஅவன்
கட்டளைப்படியே திட்டமாய்க்
கையினால் எழுத உவகை யோடுபொருள்
கண்டளித்த பிரபு யாரெனில்
பூண்இலங்குநதி வரகு லத்தில்வரு
புண்ணியன் மதிகொள் கண்ணியன்
புலவர் போற்றுமா கறலின் மேவும் எழில்
புண்ணிய கோடிஎனும் பூபனே"

என்று புகழ்ந்து பாடியதுடன் பிறகுதாம் இயற்றிய தொண்டைமண்டல சதகத்தில் ;

" உணலைப் பசும்பொன் முதலான வற்றை உதவிப்பின்னும்
குணலச்சை உள்ளவர் கேட்கவும் கூசுவர் கொல்லெனவே
எணலைக் கருதி எழுதிவைப் பீரென இன்மறைந்து
மணலைப் பரப்பிய முன்றில் உள்ளான் தொண்டை
மண்டலமே"

என்றும் பாடினர்.

## சாவா உடல்

இவ்வாறு அறம்புரிந்து நின்ற முதலியார் தமது அறத்தின் சிறப்பால், பெறவேண்டிய நன்மைகளை யெல்லாம் பெற்றுச் சாவா உடலாகிய புகழுடம்பை எய்தி இன்றும் உலகத்திற் சிறந்து விளங்குகிறார்.